# திருமழபாடி



ஆசிரியர்

S. இராமச்சந்திரன், M.A; Dip. in Epi. & Arch.

அருங்காட்சியகக்காப்பாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

தமிழ்நாடு அரசு

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

சென்னை

1978

# பதிப்புரை

தமிழகக் கோயில்களைப் பற்றி ஏதுமே தெரியாது; கட்டிடம், கலை, சிற்பம், ஓவியம், செப்புத் திருமேனிகள் ஆகியவற்றைப் பற்றியும், அவற்றோடு பிணைந்து விளங்கும் ஊர் வாழ்மக்கள் பற்றியும் ஏதும் தெரியாது; சமுதாயத்தைக் கண்ணாடிபோல் காட்டும் கல்வெட்டுகள் என்றால் என்ன எனத் தெரியாது; அப்படியிருக்கும் மாணவரை ஒரே ஆண்டில் இதுபோல் ஒரு நூல் படைக்க உருவாக்குகிறது, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை நடத்தும் கல்வெட்டுப் பயிற்சி நிறுவனம் என்றால் அது பெருமைக்குரிய செய்திதானே! இதுபோல, தமிழக ஊர்களைப் பற்றியும், கோயில்களைப் பற்றியும் எத்தனை நூல்கள் வரவேண்டும். அவற்றை எழுத எத்தனை இளைஞர்களை உருவாக்க வேண்டும்! அந்தப் பணியில் ஈடுபட்டுள்ளது இக்கல்வெட்டு பயிற்சி நிறுவனம். இந்நூலை - நல்ல நடையில்-கருத்துக்களை உணர்ச்சியோடு வெளியிடும் இராமச்சந்திரன் போன்ற இளைஞர்களின் ஆர்வத்தை நல்லாறு படுத்தி நடாத்திச் செல்வதில் பெருமை கொள்கிறது இத்துறை. அவர்களது ஆய்வுகளை நூலாக்குவதிலும் பெருமை அடைகிறோம்.

இரா. நாகசாமி

# முன்னுரை

தமிழக வரலாற்றுப் புனர்நிர்மாணப் பணியில் கோயில்கள் ஆற்றி வரும் பணி கொஞ்சமல்ல. ஒவ்வொரு கோயிலின் பின்னும் ஒரு சரித்திரமே இருக்கிறது.

திருமழபாடி, சுந்தரருடைய "பொன்னார் மேனியனே" என்ற தேவாரப் பாடல் மூலம் பலருக்கும் நன்கு அறிமுகமான சிவத்தலமாகும். இந்தப் பொன்னார் மேனியன்தான், எத்தனை வரலாற்று நிகழ்ச்சிகளைத் தானொரு மௌன சாட்சியாய் முன்னின்று கண்டிருக்கிறார்!

பல்லவ அரசாட்சியின் தொடக்க காலத்தில் ஊர் பனங்காடாக இருந்த நிலையிலும்,

சோழர் காலச் சுக போகங்களை அனுபவித்து வளர்ந்து நிறைவுற்றிருந்த போதிலும்,

13-ஆம் நூற்றாண்டின் பின் ஆட்சிகளின் எழுச்சியும் வீழ்ச்சியும் சாதாரண நிகழ்ச்சிகளாகி விட்ட போது அரசுகள் தமது தெய்விக வாரிசுரிமையையும் கோயில்கள் தமது ராஜீயச் சார்பையும் சற்று விட்டுக் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்ட போது, அந்த நிர்ப்பந்தத்தால் பாதிக்கப்பட்ட போதும்,

தனது இழந்து போன கடந்த காலப்புகழை முற்றிலும் திரும்பப் பெற முடியா விட்டாலும், அற்ற குளம் என்ற நிலைக்கு ஆளாகி விடாதபடி ஆதரித்த கோனேரிராயன் முதலிய மன்னர்களின் அரவணைப்பிலும்,

திருமழபாடி வைத்தியநாதசுவாமி கோயிலின் சரித்திரம் நிமிர்ந்தும் தவழ்ந்தும் நிலைத்து வந்திருக்கிறது.

இந்தச் சரித்திரம் பற்றிய ஆராய்ச்சி, மூன்று பகுதிகளாகப் பகுக்கப்படுகிறது. ஊர், கோயில் - இவற்றின் நெருக்கமும் தனித்தன்மைகளும் நிறைந்த வாழ்க்கை வரலாறு முதற் பகுதியாக அமைகிறது. இதற்குக் கோயிலிலுள்ள

கல்வெட்டுகள் பெருமளவில் துணை புரிகின்றன என்றாலும், நூற்று நாற்பதுக்கும் மேற்பட்ட அந்தக் கல்வெட்டு களிலிருந்து பகுத்தும் தொகுத்தும் பார்க்க வேண்டிய பல விஷயங்கள் இருக்கின்றன என்பதால் கல்வெட்டுகள் பற்றிய ஆராய்ச்சி இரண்டாம் பகுதியாக அமைக்கப்படுகிறது.

நூலின் இடையே சேர்க்க முடியாத பல செய்திகள் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளன. இவை மூன்றும் பகுதி யாகின்றன.

இந்தத் திருமழபாடி பற்றிய முழுமையான கலை, வரலாற்று ஆராய்ச்சியில் ஈடுபடுமாறு எனக்கு ஊக்கமும் தூண்டுதலும் தந்தவர் தொல்பொருள் ஆய்வுத்துறையின் இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்கள்.

உள்ளபடியே, துறையின் சார்பில் நடைபெற்று வரும் கல்வெட்டுப் பயிற்சி நிறுவனத்தில் இயக்குநரின் கீழ் ஓராண்டு பயிற்சி பெற்ற மாணவன் என்ற தகுதி விளைத்த தன் னம்பிக்கையால் தான் இந்த ஆராய்ச்சியிலேயே ஈடுபட்டிருக் கிறேன். ஓரளவு சுயதிருப்தி இதில் ஏற்பட்டிருக்கிறது.

இப்பணியில் பலர் உதவி புரிந்திருக்கிறார்கள். உள்ளூரிலிருக்கின்ற உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. சிவசங்கரன், ஆசிரியர்கள் திரு. ஐயாவு, திரு. சண்முக சுந்தரம், திரு. ராஜகோபால் ஆகியோருடைய உறவு உணர்ச்சிக்கு என் உள்ளன்பு உரியது. ஆசிரிய நண்பர் திரு. ஐயாக்கண்ணு பல இடங்களையும் மனிதர்களையும் அறிமுகம் செய்து வைத்தார். ஊரைப் பற்றிய அவரது பெருமித உணர்வுக்கு என் தலை தாழ்ந்த வணக்கம்.

கோயிலின் நிர்வாக அலுவலர், குருக்கள், பணி யாளர்கள் ஆகியோருக்கு என் நன்றி.

திருச்சி மாவட்டப் பதிவு அலுவலர் திரு. அப்துல்மஜீத் அவர்கள் இன்முகத்தோடு நிழற்படங்கள் காட்டி உதவினார். அவருக்கு என் பணிவான வணக்கம்.

உள்ளூர் மக்கள், தங்களுடைய ஊரைப் பற்றிய புத்தகம் எழுதும் முயற்சி என்று கேள்விப்பட்டதும் தான் எவ்வளவு ஆர்வம் காட்டினார்கள்! அவர்களுக்கு என் மனம் நெகிழ்ந்த வணக்கம் உரியது.

— ஆசிரியர்.

# உள்ளடக்கம்

ஊரும் கோயிலும்



கல்வெட்டுகள்



செய்திச் சிதறல்கள்

# தூர தரிசனம்

சைவத் திருமுறைகளில் மழபாடி என்ற பெயரில் குறிப்பிடப்படும் தலங்கள் இரண்டு. குடந்தையை அடுத்துள்ள பட்டீச்சுரம் ஒன்று. இது பழையாறை மழபாடி என அழைக்கப்பட்டது.[1] மற்றொன்று, திருச்சிராப்பள்ளி மாவட்டம், அரியலூர் வட்டத்திலமைந்திருக்கும் நமது மழபாடி.

ஆயினும் தேவார காலத்திலேயே பழையாறை மழபாடியைத் தன் "பொன்னார் மேனி" யின் முன் ஒளிகுன்றச் செய்து, மாமழபாடியாகவும்[2-a] திருமழபாடியாகவும்[2-b] உயர்ந்து, தனக்கெனத் தனியிடத்தைப் பெற்றுவிட்டது இவ்வூர்.

## இருப்பிடம்

சங்ககால அரிசில் என்று கருதப்படும் அரியலூரிலிருந்து புள்ளம்பாடி செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவில் திருமழபாடி உள்ளது. கொள்ளிடத்தின் வடகரைத் தலமாகவும் திருச்சி மாவட்டத்தின் தெற்கு எல்லையாகவும் ஊர் அமைகிறது.

தென்கிழக்கில், சுமார் ஐந்து கி.மீ. தொலைவில்தான் இருக்கிறது தேசம் போற்றும் திருவையாறு. கொள்ளிட ஆற்றில் தண்ணீர் ஓடாத காலங்களில், அகன்று கிடக்கும் அந்த மணற்பரப்பைக் கடந்துவிட்டால் திருவையாற்றை அடைவது எளிது.

பல்லவர் காலத்திலிருந்தே புகழ் படைத்திருந்த ஆலம்பாக்கம்* மழபாடிக்கருகில்தான் உள்ளது.

அரியலூரிலிருந்து திருமழபாடி வருகின்ற வழியில் மன்னு பெரும் "பழுவூர்" அமைந்துள்ளது.

வரலாற்றில் பெறும் இடம்

மழபாடியைப் பற்றி நமக்குக் கிடைக்கும் முதற் குறிப்பு, கி.பி. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவ மன்னன் சிம்மவர்மனென்று கருதப்படும் ஐயடிகள் காடவர் கோன் பாடலாகும். இதன்பின் தேவாரப் பாடல்களும், கோயிற் கல்வெட்டுகளும், உள்ளூர்க் கதைகளும் வழக்குகளும், தலபுராணமும் சேர்ந்து தமிழக வரலாற்றில் திருமழபாடிக்கென்று ஒரு தனியிடத்தை உருவாக்கிக் கொடுக்கின்றன.

இவையன்றி, நின்ற நிலையில் ஒரு தொலைநோக்காக இவ்வூரைப் பார்க்கும்போதும் சிறு சிறு வரலாற்றுத் துணுக்குகள் அகப்படாமலில்லை.

மழபாடி மனிதர்கள்

பல்லவ மன்னர்கள் காலத்தில் மழபாடியின் நிலை குடத்திலிட்ட விளக்காகவே இருந்திருக்கிறது. சரித்திரத்தை வழிநடத்திய, அல்லது சரித்திரத்தில் இடம் பெற்ற மனிதர் யாரும் இங்குத் தோன்றியதாகத் தெரியவில்லை. ஆனால் சோழர் ஆட்சியில் ஊரின் புகழ் சிற்றரசுகளின் எல்லையைக் கடந்து பரவத் தொடங்குகிறது. "மழபாடித் தென்னவன் மாதேவி" என்ற பெண் உத்தம சோழனுக்கு மண முடித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறாள்.[3]

சோழர்குல மணிமுடியாகிய ராஜராஜனின் ஆட்சியில் மழபாடியின் புகழ் பேரரசு எல்லைகளையும் கடந்து பரவுகிறது. தஞ்சாவூர்க் கூற்றத்துக் காருகுடியில் குறுநிலத்தலைவனாக இருந்த பரமன் மழபாடியாரான மும்முடிச் சோழன், ராஜராஜனின் படைத்தலைவர்களிலொருவன். இவன் தலைமையிற் சென்ற படைகள்தாம் சீட்புலி, பாகி நாடுகளை வென்றன.[4]

சற்றேறப்ப நான்கு நூற்றாண்டுகளுக்கு நின்று நிலைத்திருந்த சோழராட்சியை வேரோடு பிடுங்கி வீசியெறிந்த பாண்டியர்களிடத்திலும் திருமழபாடியைச் சேர்ந்த

வனொருவன் அதிகாரியாக இருந்திருக்கிறான். "அழகியதிருமழ பாடியுடையான் தென்னவதரையன்" என்ற பெயருடைய அந்த மனிதன் சடையவர்மன் சுந்தரபாண்டியனிடத்துப் பணிபுரிந்ததாகக் கோவிலடி என்ற ஊரிலுள்ள கல்வெட் டொன்றினால் அறிகிறோம்.[5]

தஞ்சைக் கோயிற் கல்வெட்டுகளில் மழபாடி என்ற சொல்லைத் தங்கள் பெயருடன் சேர்த்துக் குறிப்பிட்டுக் கொள் வோர் பலர் இடம்பெறுகிறார்கள். இவர்கள் அனைவரும் இவ் வூரினர் தாமா என்பது சந்தேகத்திற்குரியதுதான். என்றாலும் ஆட்பெயராகவோ துணைப்பெயராகவோ சூட்டிக்கொள்ளு மளவுக்கு மழபாடி புகழ்பெற்று விளங்கியிருக்கிறதென்று துணியலாம்.

"சிப்பன் மழபாடியான கேரளாந்தகப் பெருந்தய் யான்" என்பவன் ராஜராஜனால் நியமிக்கப்பட்டு அக்கோயி லில் ஒருபங்கு காணியாட்சியனுபவித்துவந்தவன்.[6]

கோயிலுக்குரிய ஆடுகளின் பொறுப்பேற்றிருந்த இடையர் பலர் மழபாடி என்ற பெயருடையோராக இருந்த தும் அக்கோயிற் கல்வெட்டுகளால் தெரிகிறது.[7]

இவர்களைப் போன்ற, வரலாற்றுப் பாதையின் மௌன வழிபோக்கர் பலர், பல்வேறு சிறிய, பெரிய பொறுப்புக்களை வகித்தோர், மழபாடி என்ற பெயருடையோர். பழுவூர், கோவந்தபுத்தூர்க் கல்வெட்டுகளில் இத்தகையோரைக் காணமுடிகிறது. வரலாறு வளர்ந்து செல்லச் செல்ல இத் தகையோர் பலரை நாம் சந்திக்க முடியும்.

---

* இக்கோயில் தற்போது தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

1. திரு. 3, பதி. 73
2. (A) திரு. 3, பதி. 28, பா. 1, 2, 3, முதலியன
   (B) திரு. 3, பதி 48, பா, 4, 5

3. பிற்காலச் சோழர் சரித்திரம்—T. V. சதாசிவப் பண்டாரத்தார் பக்கம் 86.

4 Cholas; K.A.N. Sastri; p. 178

5 தென்னிந்தியக் கோயில் சாசனங்கள், T. N. சுப்பிரமணியம் vol. III part I p. 1176

6 தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள், இரா. நாக சாமி, தொ. பொ. ஆய்வுத்துறை, பக். 98

7 பாண்டி குலாசநி வளநாட்டு கள்ளை மூலநாட்டுக் கொற்ற மங்கலத்து இருக்கும் இடையன் மழபாடி பட்டன் (த. பெ. கோ. க. பக். 172) இவன் அடைகுடி இவனுடன் பிறந்த மழபாடி...... (பக். 172) இன்னாட்டு மீய்வழி நாட்டுக் காட்டி ஞாழல் இருக்கும் இடையன் சூற்றியன் மழபாடி (பக். 172) ராஜராஜவளநாட்டுக் கிழ் வேங்கைநாட்டு ஜெயங்கொண்ட சோழ நல்லூர் இருக்கும் இடையன் பட்டன் மழபாடி (பக். 174) நித்த விநோத வள நாட்டு நல்லூர் நாட்டு பெருங்கறை இருக்கும் இடையன் மழ பாடி பூவடி (பக். 181) இவன் அடைகுடி இவனுடன் பிறந்த மழ பாடி வாஞ்சியப் பேரையன், மழபாடி மழவன், மழபாடி சோழன் (பக். 181) தஞ்சாவூர் புறம்படி ராஜராஜ பிரும்ம மஹாராஜந் அங்காடியிருக்கும் மழபாடி சேரமான் (பக். 183) பாண்டி குலாசநி வளநாட்டுப் புன்றிற் கூற்றத்து விரைக் குடியி ருக்கும் இடையன் தாழிமழபாடி (பக். 189) தஞ்சாவூர்ப்புறம்படி உத்தம சிலியார் வேளத்து இருக்கும் இடையன் காரிமழபாடி (பக். 189) பாண்டிகுலாசநி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத் துப் பூதிகுடி இருக்கும் இடையன் மழபாடி சிகிட்டன் (பக். 190) தஞ்சாவூர்......திருமஞ்சனத்தார் வேளத்து இருக்கும் சத்துரு மழபாடி (பக். 198) தஞ்சாவூர்ப்புறம்படி ஆனைக்கடுவார் தெரு வில் இருக்கும் இடையன் மழபாடி குமரன், இவன் உடன் பிறந்த மழபாடி சூற்றி (பக். 205) பாண்டி குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்து பெருமங்கலத்து இருக்கும் இடையன் எழுவன் ஆய்ப்பாடி மகன் ஆய்பாடி மழபாடி (பக். 206)......ன் அடைகுடி இவன் நன்மச்சுதன் மழபாடி சுற்றளி (பக். 214).

# திருச்சுற்று உலா

ஊரின் கிழக்கு வாயிலாகக் கோயிலும் மேற்கு வாயிலாக உயர்நிலைப் பள்ளியும் அமைய இடையில் சுமார் ஒரு கிலோ மீட்டர் தூரத்திற்கு அதிகம் நெருக்கமின்றி நீண்டு கிடக்கும் ஊர், சுமார் 2200 மக்களுடன் அமைதியாக வாழ்கிறது. ஊரின் மையத்தில் சதுக்கம்போன்று அமைந்திருக்கும் "மார்க்கெட்" மட்டும் சிறு வியாபாரப் பேச்சுகளுக்கும் அவ்வப்போது கேட்கும் நல விசாரிப்புகளுக்கும், ஊரின் ஜீவனை அடையாளங்காட்டும் கலந்துரையாடல்களுக்கும் இடமாக இருப்பதால் கலகலப்பாகக் காணப்படுகிறது.

## நாட்டு வருணனை

ஊராட்சி என்ற நிலைக்குச் சுருங்கிவிட்ட சிற்றூராக இன்று இருந்தாலும் திருமழபாடியின் அதிகாரம் ஒரு குறிப்பிட்ட சுற்றளவுக்கு அங்கீகரிக்கப்பட்டே உள்ளது. சுற்றியுள்ள ஊர்கள் சிலவற்றைச் சேர்த்துத் திருமழபாடி நாடு என்று குறிப்பிடும் வழக்கு பேச்சளவில் இன்றும் இருக்கிறது. கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் இந்த வழக்கு இருந்ததென்பதை அருகில், கண்டராதித்தம் என்ற ஊரிலுள்ள ஹொய்சள வீரராமநாதனின் கல்வெட்டு வெளிப்படுத்துகிறது.[1]

உள்ளூர்க் கைக்கோளரிடையே வழங்கும் செவி வழிச் செய்தியிலிருந்து நமக்கொரு பயனுள்ள குறிப்பு கிடைக்கிறது. திருமழபாடி நாட்டில் 16 சிறு நாடுகள் அடங்கியிருந்ததாகவும் திருமழபாடியில் விசேடமான நிகழ்ச்சி, திருவிழா ஏதாகிலும் நடைபெற்றால் 16 நாட்டாண்மைக்காரரும் கூடிடுவர் என்றும் அச்செய்தி கூறுகிறது.

திருமழபாடிக் கோயிலில் நடைபெறும் தேர்த் திருவிழாவின்போது 15 நாட்டாண்மைக்காரர்கள் (அல்லது

அவர்களின் பிரதிநிதிகள்) வருவார்களென்றும் கோயில் பொற்பண்டாரி (தலைமை ஸ்தானிகர்) அவர்களைப் பெயர் விளித்துக் கூப்பிடுவார் என்றும் தெரிகிறது. இந்த நாட்டாண்மைக்காரர்களின் நாடுகள் (ஊர்கள்) திருமழபாடி நாட்டுக்கு உட்பட்டவை.

கொள்ளிடத்தின் தென்கரையில் வைத்தியநாதபுரம் என்ற ஊர் உள்ளது. இது திருமழபாடி இறைவரின் பெயரால் ஏற்படுத்தப்பட்ட ஊர். இதேபோல் ஊருக்கு வடக்கில் வைத்தியநாதன்பேட்டை என்ற ஊர் உள்ளது. இவை திருமழபாடி நாட்டுக்கு உட்பட்டவை.

மேற்கில் இரண்டு கிலோமீட்டர் தொலைவிலமைந்திருக்கும் கண்டராதித்தம் என்ற ஊர் சோழர் காலத்திய சதுர்வேதி மங்கலங்களுள் ஒன்று.[2] இதனருகில் செம்பியக்குடி என்ற ஊர் உள்ளது. செம்பியன்மாதேவிக்குடி என்பதே இதன் சரியான பெயராகக் கருதப்படுகிறது.

வடக்கில் பாளையப்பாடி, அரண்மனைக் குறிச்சி முதலிய ஊர்கள், அரச இருக்கையோடு தமக்கிருந்த பிற்காலத் தொடர்பை அறிவிக்கின்றன. இவையும் மழபாடி நாட்டுக் குட்பட்டவை.

திருமழபாடி நாட்டுக்கு எல்லையாகத் தெற்கில் கொள்ளிடத்தின் மறுகரையிலுள்ள வைத்தியநாதபுரத்திலும், வடக்கில் அரண்மனைக்குறிச்சியிலும், மேற்கில் செம்பியக்குடியிலும், கிழக்கில் கொள்ளிடத்தைக் கடந்து புனவாசல் என்ற ஊரிலும் பிள்ளையாரைப் பிரதிஷ்டித்து எல்லை வகுத்ததாகவும் கைக்கோளர்களிடையே செவிவழிச் செய்தி நிலவுகிறது.

புனவாசல் என்ற ஊரின் சரியான பெயர் புனல்வாயில் என்பதாகும். இவ்வூரில் ஆதித்தசோழன் காலத்திலேயே கணபதி கோயில் இருந்துள்ளது.[3]

## நந்தன் மேடு

அகழ்வாராய்ச்சிக்குரிய ஓர் இடம் கண்டராதித்தத்தின் அருகிலுள்ளது. புதுக்கோட்டை என்றழைக்கப்படும் சிறு

கிராமத்தையொட்டிக் கொள்ளிடக் கரையிலமைந்திருக்கும் அகன்ற மண்மேடு, நந்தன்பார் அல்லது நந்தன்மேடு என்று அழைக்கப்படுகிறது. சிலர் நந்தன்பிடாரிமேடு என்று அழைக்கின்றனர். நந்தன் என்ற அரசன் வாழ்ந்த இடமென்றும் பிடாரி கோயிலொன்று இங்கு இருந்ததாகவும் பேசப்படுகிறது. அரசுசார் நாகரிகம் ஒன்றைத் தன்னுள் புதைத்து வைத்திருப்பதாகப் பேசப்படும் இந்த நந்தன் மேட்டிலிருந்து புதையற் குடம், வைரக் கிரீடம் முதலியன கிடைத்திருப்பதாகச் சில செய்திகள் பரவலாகப் பேசப்படுகின்றன.

இங்கு கட்டிடப்பகுதிகள், உறைகேணி முதலியன இருந்தன என்றும் காற்று வாக்கில் சில செய்திகள் காதில் விழுகின்றன. இங்கிருந்து கிடைத்ததாகக் கூறப்படும் அம்மியும் குழவியும் உள்ளூரைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் வசம் உள்ளன.

இந்த நந்தன்மேட்டை "நந்தன்மோடு" என்று, கி.பி. 1740 ஆம் ஆண்டில் அரியலூர் மழவராயரால் வெளியிடப்பட்ட திருமழபாடிச் செப்பேடு குறிப்பிடுகிறது.[4] எனவே இது தொன்மையான-ஒருவேளை சோழர் காலத்திய-சிற்றரசு இனத்தோடு தொடர்புடைய பிரதேசமாக இருக்கலாம்.

நந்தன் என்ற பெயர் குறித்துத் தெளிவாக ஏதும் குறிப்பிட இயலவில்லை. நந்த வம்சத்து அரசர்கள் கங்கையாற்றில் தமது நிதியத்தை ஒளித்து வைத்ததாக வழங்கிய பழங்கதையிலிருந்து ஒப்புமையாக்கமாக இப்பெயரை மக்கள் உருவாக்கியிருக்கக்கூடும். ஆற்றுப்படுகை, புதையல், அரசிருக்கை முதலிய அனைத்தும் ஒத்துக் காணப்படுகின்றன அல்லவா?[5]

சுற்று வட்டாரத்தில் பல இடங்களில் புதையல் கிடைத்துள்ளதாகக் கூறப்படுகிறது. கண்டராதித்தத்தில் புதையற் பானை ஒன்று கிடைத்ததாகவும், அதிலிருந்த நாணயங்கள், சிறிய செப்பு விக்கிரகங்கள் ஆகியவற்றை அவரவர் அள்ளிச் சென்றுவிட்டதாகவும் கூறுகின்றனர்.[6]

கொள்ளிட ஆற்றுப்படுகையிலும் நாணயங்கள் கிடைத்துள்ளனவாம். சிலர் இப்பகுதியில் பண்டைய நாள்களில் நாணயச்சாலை (Mint) இருந்திருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். இந்த ஊகத்திற்குச் சரியான அடிப்படை இருக்கிறதா, அல்லது தேவாரப்பாடல்களில் பொன், முத்து, பவழம், வயிரம், மாணிக்கம் போன்ற சொற்கள் இவ்வூர்ப் பதிகங்களைப் பொறுத்தவரை அதிகமாகப் பயன்படுத்தப்படுவதற்கும் இந்த ஊகத்திற்கும் தொடர்பிருக்கிறதா என்பது ஆராய்ச்சிக்குரியது.

மழபாடி நாட்டின் சாம்ராஜ்ஜியப் பெரும் புகழை வெளிக் கொணரும் ஓர் அகழ்வாராய்ச்சியை ஆர்வத்துடன் எதிர்பார்க்கின்றனர் இப்பகுதி மக்கள்.

---

1. போசள வீர ராமநாத தேவற்கு யாண்டு 13 — "ராஜராஜ வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழபாடி நாட்டு . . . . ." என்று அந்தக் கல்வெட்டுக் கூறுகிறது. (பதிப்பிக்கப்படாத கல்வெட்டு).

2. கண்டராதித்தச் சதுர்வேதி மங்கலம் பற்றி நூலின் பிற்பகுதியில் கூறப்பட்டுள்ளது.

3 S. I. I. Vol. XIII No. 55 "புனல் வாயில் ஸ்ரீகோயில் கணபதி படாரர்க்கு"

4 தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் Vol. II No. 693.

5 தேவாரப் பாடல்களில் மழபாடி என்ற பெயரில் குறிப்பிடப்படும் மற்றொரு தலமான பழையாறையிலும் நந்தன்மேடு என்ற இடம் உள்ளது. அங்கு இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் அகழ்வாராய்ச்சி நடத்தப்பட்டுள்ளது.

6 பால்ராஜ் என்ற இளைஞர் வசம், ஈழமனிதன் உருவம் பொறித்த சில காசுகளும் 6 செ. மீ. நீளமுள்ள தவழும் கண்ணன் விக்கிரகமொன்றும் உள்ளன. இவை அந்தப் புதையற் குடத்திலிருந்து கிடைத்ததாகக் கூறினர்.

# குலமும் நிலமும்

## மழவர்களின் பாடி

காடும் காடு சார்ந்த இடமுமான முல்லை நிலத்தைச் சேர்ந்த ஊர்கள் பாடி என்று அழைக்கப்படுவது தமிழ் மரபு.[1] ஆயர்பாடி, காட்டுப்பாடி முதலிய தொடர்கள், தாம் சார்ந்து நின்ற முல்லை நிலை நாகரிகத்தை (pastoral stage of civilization) நமக்கு உணர்த்துகின்றன.

இத்தகைய பாடிகள் தாம் சார்ந்து நின்ற நாகரிகத்திற் கேற்ப இடப்பெயர்ச்சிக்குரியனவாக, இலைதழைகளாலான குடில்களைக் கொண்டு விளங்கியிருக்கவேண்டும். ஆயினும் இயற்கையான காட்டு அரண் இருந்ததால் இவை எளிதில் அடைதற்குரியனவோ, எதிரிகளின் தாக்குதலுக்கு ஆளாகக் கூடியனவோ அல்ல.

இந்தப் பின்னணியில்தான் பாடி என்ற சொல் பாசறையைக் குறிப்பதாகப் பின்னாள்களில் வழங்கியிருக்கிறது.[2]

வேட்டையாடியும், ஆனிரை கவர்ந்தும், காட்டு வழியில் பயணம் செய்யும் மக்களிடம் வழிப்பறி செய்தும் வாழ்ந்த சங்ககால மழவர்களின் குடியிருப்பு மழபாடி என்று வழங்கப் பட்டது என்று அனுமானிப்பது பொருத்தமானது.

## "மழ"வும் "மழு"வும்

போர்களாலும் ஆனிரை கவரும் பூசல்களாலும்[3] வாழ்க்கையை நடத்திய நிலையற்ற "வில்லோர் வாழ்வின" ராகிய மழவர்கள் இயற்கையிலேயே வீரஞ்செறிந்த மரபினர். 'மழவர்' என்ற சொல் இளமை என்ற பொருள்தரும். 'மழ' என்ற சொல்லின் தொடர்பில் பிறந்தது என்று ஊகித்து, முதுமை காரணமாக இறப்பது இழுக்கென்றும் இளமையில் போரிட்டு மடிவதே விரும்பத் தக்கதென்றும் கருதிய மறத்

தமிழ் மரபைத் தம் ஊகத்துக்குப் பக்கபலமாக நிறுத்துவார் திரு. மொ. அ. துரை அரங்கனுர்.[4]

மழு என்ற ஆயுதப் பெயர் அடிப்படையிலும் இச்சொல் தோன்றியிருக்கலாம். வேட்டையாடுதல், விறகு வெட்டுதல் போன்றவற்றுக்குக் கோடரி பயன்பட்டிருக்க நியாயமுண்டு. என்ருலும் இவர்கள் மழுவேந்தித் திரிந்ததாக இலக்கியங்கள் பேசவில்லை. மாருக, வில்லும் அம்புமே இவர்களுடைய ஆயுதமாக இருந்து வந்திருக்கிறது.[5]

## மறவரும் மழவரும்

மொழி வழக்குகளில் றகர ழகர மயக்கம் இயல்பாக ஏற்படக்கூடியது என்பதனுல்[6] மறவர் என்ற சொல்லின் திரிபாக இச்சொல் இருக்கக்கூடும் என்றும் கருதப்படுகிறது. பிற ஊகங்களை விட இதுவே பொருத்தமாகத் தோன்றுகிறது.

ஆயினும் மறவரும், மழவரும் வெவ்வேறு இனத்தவராகவே சங்ககாலத்தில் கருதப்பட்டிருக்கின்றனர்.[7] குழுச்சமூகம் தன் தனித்தன்மையை நிலை நிறுத்திக்கொள்ளும் கால கட்டத்தையே இது காட்டுகிறது.

எயினர், மறவர் ஆகிய இனத்தவரைவிட முற்பட்ட நாகரிக முற்றவராக மழவர் இருந்திருக்கின்றனர் என டாக்டர் இரா. நாகசாமி கருதுகிருர்.[8] வேங்கடத்தை ஆண்ட கள்வர் கோமான் புல்லி, மழபுலத்தை அடிப்படுத்தியவனுகப் புகழப்படுவதைப்[9] பார்க்கையில் எயினர், மறவர்போல் அல்லாது, ஆங்காங்கு அரசு நிறுவுமளவு சங்க காலத்திலேயே மழவர்கள் நாகரிகமடைந்திருந்த நிலை புலப்படுகிறது.

## மழநாடும் மழபாடியும்

கொல்லிமலையை ஆண்ட வல்வில்ஓரி, மழவர் பெருமகன் எனச் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிருன். பாச்சிலாச்சிராமத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட கொல்லி மழவன் என்ற மன்னனைப் பற்றிப் பெரியபுராணம் குறிப்பிடுகிறது. இந்தக் கொல்லி மழவன் கி.பி. 7-ஆம் நூற்ருண்டைச்

சேர்ந்தவனாக இருக்க வேண்டும். இவ்விரு குறிப்புகளையும் தொடர்புபடுத்தி, தொடக்கத்தில் மழவர்கள் கொல்லி மலைப் பகுதியையே ஆண்டிருக்கவேண்டுமென்றும், பின்னர் முல்லை நிலத்தையும் மருத நிலத்தையும் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வந்திருக்கவேண்டுமென்றும் கருதுவர்.[10]

மழவர்களில், கொல்லிமலையையாண்ட பிரிவினர் தமது பாரம்பரியத்தின் தனித்தன்மையை நிலைநாட்டிக் கொண்டதனையே இச்செய்திகள் காட்டுவதாகக் கொள்ளலாம். ஏனென்றால், மழவர்கள் முல்லை நில நாகரிக் கூறுகள் உடையவர்கள் என்பதற்கே சங்க இலக்கியங்களில் சான்றுகள் அதிகம் உள்ளன.

சிற்றரசுகள் பேரரசராகிய பல்லவர்கீழ் அடங்குகின்ற நிலையில் காவிரியின் வடகரையிலிருந்து கொல்லிமலை வரை "மழநாடு" பரவியிருந்தது.[11]

வடநாட்டிலிருந்து பேரளவில் தமிழகத்திற்கு வந்து குடியேறிய பிராமணப் பிரிவினர் பிரகத் சரணம் (grand migration) எனப்படுவர். இவர்களில் லால்குடியைச் சேர்ந்தவர்கள் மழநாட்டு பிரகத் சரணம் என்று அழைத்துக் கொள்வது இன்றளவும் வழக்கமாக இருந்து வருகிறது.

ஆனால் மழவர்களுடன் தன்பெயரால் தனியுறவு கொண்டாடும் மழபாடி, தொடக்ககாலக் கல்வெட்டுகளில் மழநாட்டைச் சேர்ந்ததாகக் குறிப்பிடப்படவில்லை. பொய்கை நாடு என்ற பிரிவைச் சேர்ந்ததாகவே பேசப்படுகிறது.

ராஜராஜனின் ஆட்சியில் வளநாடு என்ற பிரிவு அறிமுகப் படுத்தப்படும்போது மழநாடு, ராஜாஸ்ரய வளநாடு என்று பெயர் பெறுகிறது. அப்போதும் மழபாடி ராஜாஸ்ரய வளநாட்டைச் சேர்ந்ததாகக் குறிப்பிடப்படவில்லை. "ராஜேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுப்" பிரிவினுள் அடங்கியே குறிப்பிடப்படுகிறது.

வளநாட்டுப் பிரிவுகள் இதன் பின்னர் பலமுறை மாற்றப்பட்டன. மழநாடாகிய ராஜாஸ்ரய வளநாடு ராஜராஜ

வளநாடு என்று பெயர் மாற்ற முறும்போது[12] திருமழபாடி இந்த ராஜராஜ வளநாட்டில் சேர்க்கப்படுகிறது. அப்போதும் பொய்கைநாடு என்ற உட்பிரிவு நீடிக்கிறது.

மழவர்கள் தமது பாடிகளைப் பிரிந்து பேரூர்களை நாடிச் சென்று விட்ட நிலையில், அவர்களது ஆதிக்கத் தொடர்போ ஒட்டி உறவாடும் உணர்வோ இல்லாத இந்த இடைக்கால நிலையில் மழபாடி தன் பெயரையும்கூட இழந்திருக்கிறது.

மழுவாடி

12-ஆம் நூற்றூண்டின் இடைப்பகுதிவரை, மழபாடி 'மழுவாடி' என்றே கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறது. மார்க் கண்டேயன் இந்தத் தலத்தில் தவம் செய்ததாகவும் இறைவன் மழு ஏந்தி ஆடும் கோலத்தில் அவனுக்குத் தரிசனம் கொடுத்த தாகவும் அதனாலேயே ஊர் மழுவாடி என்று பெயர் பெற்ற தாகவும் பின்னாள்களில் கதையொன்று வழங்கியது. இந்த நம்பிக்கை தொடக்க காலத்திலேயே இருந்திருக்க வேண்டும்.

ஆனால், சரித்திர உணர்வோடு முரண் கொள்ளாத பக்தியைப் போற்றிய சேக்கிழார், தமது பெரியபுராணத்தில் மழபாடியை மழபாடி என்றே குறிக்கிறார்.

ஏறத்தாழ இந்தக் காலகட்டத்தில்தான் மழபாடி மழ நாட்டோடு இணைகிறது. இதன்பின் கல்வெட்டுகளிலும் ஊர் தனக்கு உரிய பெயரைப் பெறுகிறது.

மழவர்களுடன் தம் ஊர் பெற்றிருந்த கடந்த காலத் தொடர்பு பற்றிய பிரக்ஞை மக்களிடையே ஏற்பட்டுவிட்ட தென்பதனையே இக்குறிப்பு நமக்கு உணர்த்துகிறது.

சோழர்கள், ஹொய்சளர்களுக்குப் பின் ஆட்சி புரிந்த மாறவர்மன் குலசேகர பாண்டியனுடைய கல்வெட்டொன் றில் கையெழுத்திட்டுள்ள ஓர் அதிகாரி சுந்தர பாண்டிய மழ வராயன் என்ற பெயரில் திகழ்ந்திருக்கிறான்.[13] 16-ஆம் நூற் றூண்டுக் கல்வெட்டொன்றில் செவ்வப்ப மழவராய சோழகன் என்பவன் இடம் பெறுகிறான்.[14] இவன் யாரென அறிவது

கடினமாக இருப்பினும் விஜயநகர அரசர் காலத்தில் மழவரா யர் குலத்தவனைத் தன்னைக் குறிப்பிட்டுக் கொள்ளும் ஒரு குறு நிலத்தலைவன் இங்கு ஆட்சி புரிந்திருக்கிறான் என்று அறிய முடிகிறது. இவன் தஞ்சைச் சீமையின் முதல் நாயக்க அரச னாகிய செவ்வப்ப நாயக்கனின் அதிகாரியாக இருக்கவும் கூடும்.

மழவராயர்கள் அரியலூரைத் தலைநகராக வைத்துத் தம் சிற்றரசை நிறுவியது, 16-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியிலென்று கருதப்படுகிறது.[15] மழவராயர்கள் அதன் பின் தொடர்ந்து தம் ஆதிக்கத்தை இங்கு செலுத்தி வந்திருக் கிறார்கள் என்று நம்புவதற்கு ஆதாரமிருக்கிறது. 18-ஆம் நூற்றாண்டில் ஆண்ட விஜய ஒப்பிலாத மழவராயர், மழ பாடிக் கோயிலுக்குக் கொள்ளிட ஆற்றின் கரையிலிருந்த காணல் படுகை முதலான நிலங்களைக் கொடையாக அளித் திருக்கிறார்.[16]

இக்காலத்திலெல்லாம் மழபாடி என்ற வடிவமே பெரும் அளவில் கையாளப்பட்டுள்ளது. ஆயினும் மழுவாடி என்ற பெயர் தனது தெய்விக, புராணச் சார்பினால் மக்கள் மனதில் நீங்காது நிலைத்து விட்டதென்பதனை 16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய "மழுவாடித்தல புராணம்" உணர்த்துகிறது.

சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்த நூற்றாண் டின் தொடக்கத்திலும் திருமழுவாடி, திருமழபாடி என்ற வடி வங்களுடன், ஆங்கிலேயரின் மழலையில் மக்களுக்கு விளைந்த "மயக்கத்தை"க் காட்டுவதாகத் திருமலவாடி என்ற வடிவ மும் பயன்படுத்தப்பட்டது.[17]

இப்போது பேச்சு வழக்கில் திருமழவாடி என்ற வடிவ மும் எழுதுகையில் திருமழபாடி என்ற வடிவமும் மக்களால் கையாளப்படுகிறது. ஊரின் கிழக்கெல்லையிலுள்ள மைல் கல் திருமழப்பாடி என்று அழுத்தந்திருத்தமாக அறிவிக்கிறது.

## இயற்கை அமைப்பு

ஒரு நாட்டின் நிலவியலமைப்பு அந்நாட்டின் நாகரி கத்தை, அது சார்ந்த அரசியல் வரலாற்றை நிர்ணயிப்பதில்

பெரும் பங்கு வகிக்கிறது. நிலவியலமைப்பால் மனித குலங்கள் துண்டிக்கப்பட்ட தீவுகள்போல் தொடர்பின்றித் தனித்து விடப்படுவதால்தான் இருண்ட கண்டங்கள் தோன்றுகின்றன. மக்கள் பயணம் செய்ய அஞ்சும் வனாந்தரங்கள், அப்பகுதி மக்களைக் கலப்பற்ற, தனித்தன்மைகள் நிரம்பிய நாகரிகத்தவராக ஆக்கி விடுகின்றன. தமிழகத்தில் இத்தகைய இனங்கள் பல இருந்த நிலையைச் சங்க இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன.

காடுவெட்டிகள் காலத்தில் இந்த இனங்களும் குழுச் சமூகங்களும், அவை சுமந்து கொண்டிருந்த நம்பிக்கைகளும் மரபுகளும் அணையுடைத்த வெள்ளம்போல மோதிச் சமர் புரிந்து பின் முயங்கிக் கலக்கத் தொடங்குகின்றன. பனங்காடு (தாலவனம்) என்று தலபுராணம் பேசும் இந்தக் காடு சார்ந்த நிலமும் இந்நிலம் சார்ந்த மக்கள் தொகுதியும், நாகரிகம் நோக்கிச் செல்லும் அந்தக் கலப்பு அணி வகுப்பில் தமக்கோர் இடத்தைப் பெற்றிருந்திருக்குமென நம்பலாம்.

நாயன்மார்கள் பாடலில் மழபாடி சோலைகள் சூழ்ந்த ஊராக வருணிக்கப்படுகிறது.[18] ஆனால் மிகைபடப்புனைதல், ஏற்று கொள்ளப்பட்ட இலக்கியமரபாக இருந்த அக்கால நிலை, இச் சோலைவருணனைகளைச் சுதந்திரமாக ஏற்றுக் கொள்ள விடாமல் நம்மைத் தடுக்கிறது. வயல்கள் கவரி வீசும் வளஞ்செறிந்த நன்செய் நிலமாக இல்லாமல், மரங்கள் அடர்ந்த முல்லை நிலமாக-காட்டுப்பிரதேசமாக-இப்பகுதி இருந்த நிலையைத்தான் அப்பாடல்கள் நளினமாக அங்கீகரிக்கின்றன; அறிவிக்கின்றன என்று வேண்டுமானால் சமாதானம் கூறலாம்.

தாலவனம் என்ற பெயருக்கேற்ப ஊரில் பனைமரங்கள் நிரம்ப நின்ற நிலையைச் சம்பந்தரின் பாடலொன்று சுட்டுகிறது.[19]

சோழர்கால நிலவுடைமைச் சமுதாயத்தில் கரும்புத் தோட்டங்களும் கமுகந் தோப்புகளும் ஊரில் செழித்து நின்றதனைச் சேக்கிழார் காட்டுகிறார்.[20] அக்காலக் கல்வெட்டுகள்

மூலம் இப்பகுதியில் நன்செய் நிலங்கள் பல்கி வந்ததனை அறிகிறோம்.

கமுகந் தோட்டமொன்றைக் கோயிலுக்குத் திருமஞ் சனப் புறமாகக் கொடுத்த செய்தியைப் பாண்டியர் கல்வெட் டொன்று தெரிவிக்கிறது.[21]

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் நந்தியாற்றுப் பாசனத் தொடர்பு ஏற்பட்டதால் நன்செய் நிலங்கள் மேலும் பெருகின. அதற்கு முன்பு பயிர்கள் மழையைச் சார்ந்தனவாகவே இருந் தன.[22]

இன்றளவும் இவ்வட்டாரத்தின் சிறப்பான விளை பொருள்கள் கரும்பும் பாக்குந்தான். பாக்கு வைத்தல் எனப் படும் திருமண அழைப்பு வைபவத்தில் திருமழபாடி நாட்டுப் பாக்கு வைத்த பின்னர்தான் பிறநாட்டுப் பாக்கு வைக்கின் றனர் இப்பகுதி மக்கள்.

கொள்ளிட ஆறு

புள்ளம்பாடியிலிருந்து திருமழபாடி நோக்கிக் கிழக்காக ஓடும் சாலை கொள்ளிடத்தின் வடகரையிலமைந்துள்ளது. ஊரை நெருங்கியதும் ஆறும் சாலையும் நெருங்கி வருகின்றன. ஊர் மத்தியிலமைந்துள்ள பஸ் நிலயத்திலிருந்து சுமார் 200 மீட்டர் தொலைவு ஆற்றுடன் கைகோத்து நடைபோடும் சாலை, தாயின் கரம்பற்றிச் செல்லும் குழந்தைபோல் தோற்ற மளிக்கிறது. ஊரின் கிழக்கெல்லையிலுள்ள கோயிலைக் கடந்த வுடன் ஆறும் சாலையும் வடமுகமாகத் திரும்பிக் கோயிலின் கோபுரத்தின் முன் கடந்து செல்கின்றன. உத்தரவாகினி என்றழைக்கப்பெறும் சிறப்பைப் பெறுவதற்காகவே ஆறு இப்படித் திரும்புகிறதோ என்று தோன்றும்படி இக்காட்சி மிக அழகாக அமைகிறது. கோயிலுக்கெதிரில் ஆற்றில் படித் துறையொன்றும் அமைந்துள்ளது. இது சிவகங்கை என அழைக்கப்படுகிறது.

நதிமூலம்

சமய குரவர்கள் காலத்தில் திருமழபாடி கொள்ளிடக் கரையிலமைந்திருந்ததாகத் தெரியவில்லை. கோவந்த புத்தூரும்[23] காருட்டு முள்ளூம்[24] கொள்ளிடக்கரைத் தலங்களாகப் பேசப்படும்போது மழபாடி மட்டும் அவ்வாறு குறிப்பிடப் படாததிலிருந்து கொள்ளிடம் இவ்வூரையும் சுற்றுப்பகுதிகளையும் அணைத்துச் செல்லும் ஆருக ஓடவில்லையோ என்ற ஐயம் தோன்றுகிறது.

பனைமரங்கள் நிறைந்த, குறிப்பாகச் சொல்வதானுல் வளமற்ற, காட்டு நிலமாக ஊர் இருந்தபோது, மக்களின் சமுதாய வாழ்வில் வலியுறுத்திச் சொல்லத்தக்க அளவில் ஆதிக்கஞ் செலுத்தாத சின்னஞ்சிறிய ஆருக-அல்லது வாய்க் காலாகக் கொள்ளிடம் இருந்திருக்கலாம்.[25] காடுகளைத் திருத்தி நாடாக்கும் முயற்சிகள் பேரளவில் நடைபெற்றபோது கொள்ளிடம் நீண்ட ஆருக மாறியிருக்கலாம். காடுகள் வெட்டியழிக்கப்படுவதால் ஆறுகள் தடம் மாறுவது இயல்பாக நிகழக் கூடியதுதான்.

சோழர் காலத்தில் ஊரின் நிலவியலமைப்பு மாறுபடுவதற்கும் கொள்ளிடம் பெருமளவு காரணமாக இருந்திருக்க வேண்டும். முதல் ராஜேந்திரன் கல்வெட்டொன்று, பயிர் நிலங்கள் மணலடித்துப் பாழ்பட்டுக் கிடந்ததையும் மீண்டும் அவற்றைத் திருத்தி விளை நிலங்களாக மாற்றிய நிகழ்ச்சியையும் கூறுகிறது.[26] இவ்வாறு பயிர் நிலங்கள் ஆற்றுப் போக்கால் மணலடித்துப் பாழ்படுவதற்கும் காடுகள் அழிக்கப்படுவதே காரணமாகும்.

ஆருக வெட்டி அகலப்படுத்தி.....

கொள்ளிட ஆற்றைத் தெற்கே பெயர்த்து அகலப் படுத்தி ஊருக்கு ரட்சை செய்ததாகத் தெற்றி பெரியானுன எதிரிலி சோழ மூவேந்த வேளான் என்பவன் மூன்றும் ராஜ ராஜன் கல்வெட்டொன்றில் பாராட்டப்படுகிருன்.[27] வெள்ளக் காலங்களில் ஆற்றுக்கருகிலுள்ள நிலங்களுக்குச் சேதம்

விளைவதும் ஊருக்குள் தண்ணீர் புகுவதும் வழக்கமாக நிகழ்ந்திருக்கவேண்டும். எனவே இவ்வாறு ஆற்றை விரிவு படுத்தி இருக்கிறார்கள். தெற்கில் பெயர்த்து விரிவு படுத்தியதாகக் குறிப்பிடுவதனால் வடக்கில் விரிவு படுத்த முடியாத அளவு கோயிலையொட்டி ஆறு ஓடியிருக்கவேண்டுமென்பது புலப்படுகிறது. இப்போது ஆற்றின் தென்கரையில் இவ்வூர் இறைவர் பெயராலமைந்துள்ள வைத்தியநாதபுரம் என்ற ஊர் உள்ளது.

சோழராட்சியின் இறுதிக் காலத்திலும் அது தொட்டு வந்த ஹொய்சளர் ஆட்சிக் காலத்திலும் கோயிலில் நித்ய அபிஷேகத்திற்காகக் காவிரியாற்றிலிருந்து நீரெடுத்து வரப் பலர் நியமிக்கப்பட்டனர்.[28] கொள்ளிடம் தனித்த ஆறாகக் கருதப்பட்டதும் காவிரியளவுக்குப் புனிதத்துவம் பெற்றுவிடவில்லை என்பதும் இதனால் புலனாகின்றன.

## புறக்கணிப்பும் புனிதம் பெறுதலும்

சோழரின் ஆட்சிப் பிரிவுகளுள் வடகரை ராஜேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாடு என்பது திருமழபாடியை உள்ளடக்கிய பிரிவு. இங்கு வடகரை என்பது காவிரியையே குறிக்கிறது. பொதுவாக வளநாடென்பது இரு ஆறுகளுக்குட்பட்ட பிரதேசத்தைக் குறிப்பதாகக் கொள்வர். காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் இடைப்பட்ட பகுதி மட்டுமின்றி, கொள்ளிடத்தின் வடகரையிலமைந்துள்ள திருமழபாடியும் இந்த வளநாட்டைச் சேர்ந்திருப்பதால் கொள்ளிடத்தை ஓர் ஆறாகவே கருதாமல் புறக்கணித்திருக்கிறார்களென்பது புலப்படுகிறது. பொய்கை நாடு என்ற பிரிவையமைப்பதிலும் கொள்ளிடம் குறிப்பிடத்தக்க பங்கு வகிக்கவில்லை.[29]

சுந்தரமூர்த்தி நாயனார் காவிரியின் தென்கரைத் தலமான திருவாலம்பொழிலைத் தரிசித்தபின் "காவிரியின் வடபால் ஏறி"த் திருமழபாடியை அடைந்ததாகச் சேக்கிழார் வருணிக்கிறார்.[30] இங்கும் கொள்ளிடம் குறிப்பிடப்படவில்லை.

இவ்வாறெல்லாம் இருப்பினும் இதன் காரணத்தைப் புரிந்துகொள்வது அரிதல்ல. உலகு தழுவிய திரிபுவன அரச

பரமும், பிரபஞ்சந்தழுவிய அத்வைதச் சிந்தனையும் உயிர்களுக்கெல்லாம் ஒரு நெறி என்ற கூக்குரலும் கருத்தளவிலாவது மலர்ந்துவிட்ட கால நிலையில், சோழமண்டலத்தின் தரையெல்லாம் தங்கமாக்கி ரசவாதம் செய்யும் பொன்னி நதியை மையமாக வைத்து நாட்டையும் தலங்களையும் பிரித்துப் பார்ப்பது என்பது மனித உணர்வுகளுக்கு உட்பட்ட செயலாகத்தானே இருக்க முடியும்!

ஒன்றை மையமாக வைத்து எல்லாவற்றையும் பார்ப்பது என்ற இந்த நெறியின் வளர்ச்சி, எல்லாவற்றையும் ஒன்ருகப் பார்ப்பது என்ற நிலையை ஒரு கால கட்டத்தில் அடைகிறது. சிற்ருருக ஓடியபோது அலட்சியப்படுத்தப்பட்ட நதிகள், பொங்கிப் பெருகும் புனலாக மாறியபின், தாம் பிரிந்து வந்த மூல நதியின் பெயராலேயே சுட்டப்பெறுகின்றன. மகத்துவத்தையே அங்கீகரிக்கும் மனித இயல்பும், தகுதி பெற்றவுடன் உயர்ந்த நிலையிலிருக்கும் மூலக்கிளையுடன் ஒன்றிக் கொள்ளும்—அடையாளங் காட்டிக் கொள்ளும்—விழைவும் குலங்களுக்கு மட்டுமின்றி நதிகளுக்கும் உரியவைதாம் போலும். கொள்ளிடம் சிறுகச் சிறுக விரிந்து பேராருக மாறி விட்ட போது இதனைக் காவிரி என்றே மக்கள் போற்றிப் புனிதங் கற்பிக்க ஆரம்பிக்கின்றனர். 16-ஆம் நூற்ருண்டிலெழுதப்பட்ட தலபுராணம், கொள்ளிட ஆற்றைக் காவிரி என்றே குறிப்பிடுகிறது. தீர்த்த மகிமையைப் பலபடப் பேசும் இத்தலபுராணம் கொள்ளிடம் என்ற பெயரை ஒரு இடத்தில் கூடப் பயன்படுத்தவில்லை.[31]

### இன்றைய நிலை

கிழக்கு நோக்கி ஓடும் ஆறு கோயிலைக் கண்டதும் வடமுகமாகத் திரும்பிக் கோயிலின் வாயிலுக்கெதிரில் கடந்து செல்கிறது. நிமிர்ந்த கோபுரமும் வளைந்து முன் செல்லும் பரந்த ஆற்றுப் படுகையுமாக நம்முன் ஒரு மகோன்னதமான காட்சியைச் சிருஷ்டித்து விடுகின்றன. கொள்ளிடத்தின் இந்த வடிவம் சற்றுப் புதியதுதான். இருப்பினும் தலபுராணம் தோன்றிய காலத்திலேயே ஓரளவு இதனோடு ஒத்த வடிவம் பெற்று விட்டதென்று துணிவதற்கு ஆதாரமிருக்கிறது.

ஆற்றுத்தீர்த்தப் படித்துறையாகிய சிவகங்கை கோயிலுக் கெதிரிலமைந்திருப்பதாகவும் காவிரியாறு இங்கு வந்து புனித முற்றதாகவும், இத்தலபுராணம் பேசுவது "உத்தரவாகினி" என்ற கருத்தை உள்ளடக்கியதே.[32]

கரையும் வெள்ளங்களும்

ஆற்றுப் படுகையில், இப்போதுள்ள கரைக்கு முன்னால் ஒரு பழைய செங்கற்சுவர்த் தொடர் காணப்படுகிறது. இது நெடுந்தொலைவு சென்றிருக்கும் என்று தோன்றுகிறது. இந்தச் செங்கற் சுவரில் விளக்குகள் வைப்பதற்காகவென்றே அமைக்கப்பட்டவைபோல மாடங்கள் சிறிய அளவில் கட்டப் பட்டுள்ளன. செங்கல்லின் அமைப்பு சற்றுப் பிற்காலத்தைச் சேர்ந்தது. இக்கரை நாயக்க மன்னர் காலத்தில் கட்டப்பட் டிருக்கலாம். கோயிலுக்கு வெளிமதில்போலவோ, கோயிலை ஆற்று வெள்ளத்திலிருந்து காக்கும் தடுப்புச் சுவர்போலவோ இச்சுவர் இருந்திருக்கலாம்.

1924-ஆம் ஆண்டில் இப்பகுதியில் பெருத்த வெள்ளச் சேதங்கள் ஏற்பட்டன. அப்போது அரசினரால் எடுக்கப் பட்ட நிவாரண நடவடிக்கைகளைக் குறிப்பிடும் கல்வெட் டொன்று, அருகிலுள்ள புதுக்கோட்டை என்ற ஊரில் நாட் டப்பட்டுள்ளது. அந்த வெள்ளத்தில் பல நிலங்களை ஆறு தன் மயமாக்கிக் கொண்டதாகத் தெரிகிறது. அதற்கு முன் பல வெள்ளங்களுக்குத் தலைவணங்காத இலுப்பைத்தோப் பொன்று அலையாத்தோப்பென்று பெயர் பெற்றிருந்ததாக வும் அந்தத்தோப்பும் இந்த வெள்ளத்தில் அழிந்து விட்டதா கவும் கூறப்படுகிறது. இந்த வெள்ளத்தின்போது கோயிலுக் குள் நுழைய முடியாத அளவு வெள்ளம் புகுந்துவிட்டதாக வும் வெளியே சாலைக்கு மறுபுறமிருக்கும் கல்யாண மண்டபத் திலிருந்துகொண்டே பூஜைகளை முடித்துச் சென்றனர் என் றும் சொல்கிறார்கள். இதனையொட்டிச் சில சுவையான சம் பவங்களும் கூறப்படுகின்றன.[33]

1964-இலும் பெருவெள்ளமொன்று நேர்ந்திருக்கிறது. அப்போது கோயிலுக்குள் இடுப்பளவிற்குத் தண்ணீர் நின்ற

தாகவும் குருக்கள் மட்டும் உள்ளே சென்று பூசை செய்து திரும்பியதாகவும் தெரிகிறது. கோயிலின் திருச்சுற்று மதி லில் சுற்றிலும் சுமார் மூன்று அடி உயரத்திற்கு சிமெண்ட் பூசியதுபோன்ற கறை படிந்துள்ளது. இது வெள்ளத்தினு லேற்பட்ட கறை என்கின்றனர்.

ஆற்று வெள்ளம் நிலத்தின் ஊடறுத்து ஓடுவதை வாரி என வழங்குகின்றனர். ஓடைவாரி யொன்று கோயிலை யொட்டி ஓடுகிறது.[34]

இலந்தைக்கூடம் என்ற ஊரில் பாய்பின்னுகின்ற தொழில் செய்யும் பல்லவராயர் என்ற இனத்தவர் வாழ்கின்ற னர். இவர்கள் கொள்ளிடத்தில் ஓடம் விடும் தொழில் செய் தவர்கள் என்றும் கூறப்படுகிறது.

வெள்ளங்களால் ஈர்க்கப்பட்டும் மணலடித்தும் பழைய ஊர்ப்பகுதிகள் பல புதைந்து போயிருக்கவேண்டும். நந்தன் மேடு இவ்வாறு புதைந்து போனதுதான். கல்வெட்டுகளில் குறிப்பிடப்படும்-இப்போது சுவடு கூட இல்லாத-ஊர்கள் சில இவ்வாறுதான் கொள்ளிடத்தின் மடியில் புதைந்து உறங்கு கின்றனவோ?

---

1 திவாகரம், University Tamil Lexican Vol. V Part. I. p. 2595.

2 பாசறை என்ற சொல்லும் பசிய இலைகளாலான அறை என்றே பொருள்படும். மரங்களடர்ந்த காட்டினிடையே தாம் இருப் பதே புலப்படாது, எதிரிகளின் பார்வையிலிருந்து தப்புவதற்கு இவற்றின் இலை-தழையமைப்பு உதவும்.

3 இடப்பெயர்ச்சி நாகரிகத்திற்கேற்பக் கால்நடைகளே செல்வ மாகக் கருதப்பட்ட நிலையைத் தான் 'மாடு' என்ற சொல் தெளி வாக்குகிறது. (ஆங்கிலத்திலும் செல்வம் என்று பொருள்படும் pecuniary என்ற சொல் 'கால்நடை' என்ற பொருளுடைய pecudes என்ற சொல்லிலிருந்தே தோன்றியுள்ளது).

4 சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் - பக். 252 (மொ. அ. துரை அரங்கனர்).

5 'தோன்றிலை மழவர்' அகம். 119

6 தமிழ் என்ற சொல் த்ரமிர என்று காரவேலனின் ஹத்தி கும்பாக் கல்வெட்டில் வழங்கியுள்ளது. சோழ மண்டலம் கோரமண்டல் என ஐரோப்பியர் நாவில் திரிந்தது. சோழர் என்ற சொல்லையே சோரர் (கள்வர்) என்ற சொல்லின் திரிபாகச் சிலரும் சோறர் (சோற்று வளமுடையோர்) என்ற சொல்லின் திரிபாகச் சிலரும் கருதுவர்.

7 சங்க காலச் சிறப்புப் பெயர்கள்–பக். 252.

8 யாவரும் கேளிர்–பக். 136.

9 அகம் 61.

10 திருவெள்ளறை, வெ. வேதாசலம், பக். 7

11 Political Geography of the Chola country, Y. Subbarayalu, p. 75

12 Political Geography of the Chola country, Y. Subbarayalu, p 65

13 A. R. E. 103/1920.

14 A. R. E. 50/1920. சோழகன் என்பது வன்னிய இனத்தவருடைய ஒரு பட்டமாகும். மழவராயர், வன்னிய இனத்தவராகவே தம்மைக் குறிப்பிட்டுக் கொள்வர்.

15 1976 டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற திருச்சி மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கில் திரு. ஆர். ராமசேஷனல் படிக்கப்பட்ட 'அரியலூர் மழவராயர்கள்' என்ற கட்டுரை–பக். 2.

16 தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்–Vol. II No. 693.

17 கண்டராதித்தம் திரு. விசுவநாதன், M.A. சில பத்திரங்களைக் காண்பித்தார். அவற்றில் இந்த வடிவங்கள் காணப்படுகின்றன.

18 சம்பந்தர்–திரு. 2, பதி. 9, பா. 7. திரு. 3, பதி. 28, பா. 9. திரு. 7, பதி. 24, பா. 3, 4, 5, 6, 7, 8.

19 பாடெலாம் பெண்ணையின் பழம் விழப் பைம்பொழில்
மாடெலாம் மல்கு சீர் மாமழ பாடியே–திரு. 3, பதி. 28, பா. 9.

20 புடைவளர்மென் கரும்பினொடு பூகம்மிடை மழபாடி–பெரியபு. சம்பந்தர் புரா–பா. 305.

21 S.I.I. V No. 649–கோச்சடையன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு.

22 Tirumalavadi—area on which crops are always precarious—Tiruchirapalli Dt. Map. (Reg. No. 1476) in 'A Statistical Atlas of Madras Presidency' by Charles Benson—year 1895.

23 அப்பர்-திரு. 5, பதி. 71, பா. 3

24 சுந்தரர்-திரு. 7, பதி. 40.

25 கொள்ளிடம் ஆருக உருவெடுத்தது சற்றுப் பிற்படத்தான் என்று திருச்சி மாவட்டக் குறிப்பேடும் கருதுகிறது. பார்க்க: Tiruchirapalli District Gazetteer Vol. II p. 64.

26. '......இன்னிலம் மணற் குன்றும் களரும்கற்ருழையும் இசங்கும் எழுந்து ஒவளர்ந்தி மேடா......ற்றெரு பயிர் செய்ய விண் ஞதே யாண்டு உ௰க(21) வரையிலும் பாழாய்க்கிடந்ததில் ஒருமட்டுபோத நிலாமட்டு இரண்டு மட்டும் நீர்பூசி நெல் விளையிதன் ஸ்வம்மிட்டுக் கல்லித்தரு......' கல்வெட்டு சிதைந்துள்ளது இறுதிப்பகுதி நிலத்தில் புதைந்துள்ளது: (குறிப்பு: A.R.E. 75/1920)

இன்றளவும் கொள்ளிடம் போக்கு மாறுவதும் மணலடிப்பதும் நிறைந்த அளவில் நிகழ்கின்றன. இதனுல் கொள்ளிடம் உக்ரமான ஆறு (Ferocious River) என்று பெயர்பெற்றுள்ளது. கொள்ளிடக் கரையிலமைந்துள்ள கோவிலடி என்ற ஊரி லுள்ள கோயிலைச் சுற்றிச் சமீபகாலம் வரை மணலடித்து நிரம் பியிருந்தது. இக்கோயில் இப்பொழுது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் செப்பனிடப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

27 A. R. E. 91/1920 'கல்வெட்டுகள்' அத்தியாயத்தில் தெற்றி பெரியானுன எதிரிலிசோழ முவேந்தவேளான் பற்றிய குறிப் பில் பார்க்க.

28 'வழிபாடு' அத்தியாயத்தில் 'அபிஷேகம்' என்ற தலைப்பின் கீழ் பார்க்க.

19 கொள்ளிடத்தின் மறுகரையிலிருக்கும் திருவையாறும் பொய்கை நாட்டைச் சேர்ந்ததாகவே கல்வெட்டுகளில் குறிப்பிடப்படு கிறது. பார்க்க: திருவையாறு-சு. இராஜகோபால் பக். 94.

30 பெரிய புராணம் - ஏயர்கோன் கலிக்காம நாயனுர் புராணம் பா. 71.

31 திருவரங்கம், திருத்துருத்தி ஆகிய வைணவ, சைவத் தலங்கள் காவேரியாற்றின் இரு கிளைகளுக்கு இடையிலிருப்பதாகவே அவ் வச் சமய அடியார்கள் பாடியிருக்கின்றனர். ஆனுல், ஆறு பிரிந்து சற்றுத்தொலைவில் மீண்டும் ஒன்று சேர்வதன் முலம்

உருவாக்கப்பட்ட தீவுகள் இவை என்பதை இவற்றின் பெயரே தெரிவிக்கிறது. கொள்ளிடம் தனித்த ஆருக உருவெடுத்துத் தன் தனித்தன்மையை நிலைநிறுத்திக் கொண்ட பின் காவிரியோடு ஒன்றித்துப் பேசப்படும் இந்நிலை, பிரிந்து சிறிது தொலைவு சென்று மீண்டும் கூடிவிடும் இரு கிளைகளும் காவிரியாகவே பேசப்படும் அந்நிலையிலிருந்து தத்துவ ரீதியில் வேறுபட்டது.

35 'முன்னுறுஞ் சிவகங்கை யம்புனல்'—வசிட்டச் சருக்கம் பா. 37 'பொன்னிமாநதி புனிதமாவதற்கு வந்திறைஞ்சும் ...' — தலசருக்கம் பா. 74.

33 ஒருமுறை இக்கோயிலின் ரிஷப வாகனம் வெள்ளத்தில் அடித்துச் சென்று திருப்புறம்பியத்திற் சேர்ந்ததாகப் பேசிக் கொள்கிருர்கள். இச்செய்திகளைக் கூறியவர் கோயிலின் முன்னுள் அறங்காவலர்.

34 ஆறு ஊடறுத்து ஓடி மணலடித்துப் போன நிலங்கள் 'வெள்ள வாரி' என்று குறிப்பிடப்படுவது கல்வெட்டு மரபு

<★>

# ஆலயத்தில்

ஊரின் கிழக்கெல்லையில், அருகில் ஒன்றிரண்டு வீடுகளு டன் தனித்து நிற்கிறது கோயில். கோயிலின் வலப்புறம், நெடுந்தொலைவு வந்த ஆவல் தீரும் வகையில் கோயிலைத் தரிசிக்கத் திரும்பும் ஆறும் சாலையும். உயர்ந்த கோபுரம், எதிரில் சாலையைக் கடந்து அமைந்திருக்கும் கொள்ளிட ஆற் றுப்படித்துறை, ஆள் நடமாட்டம் அதிகமில்லாது - ஆனால் நெருக்கமாக - வடபால் அமைந்து கிடக்கும் மடவிளாகம். ஏதோ ஒருவகை ஓசையற்ற மௌனம் நிலவுவதுபோல ஒரு தோற்றம்.

கோயிலுக்குத் தென்மேற்கில் சாலையையொட்டி வாழ் கின்ற ஒட்டர்களின் சேரியையும் சேர்த்து ஊர் முழுவதையும் தன் பின்னால் நிற்க வைத்துத் தானொரு "மெய்மறை" போல் நிமிர்ந்து நிற்கிறது கோயில்.

## நிலமட்டம்

எதிரிலுள்ள சாலையோடு ஒப்பிடும்போது கோயில் சுமார் ஐந்து அடி கீழே பள்ளத்தில் அமைந்துள்ளது. முதற் கோபுரத்தில் நுழைவதற்குச் சரிவாக இறங்கிச் செல்லும் தளம் அமைக்கப்பட்டுள்ளது. வெளியிலுள்ள அதிஷ்டானப் பகுதிகள் முற்றிலும் தரையில் புதைந்துள்ளன.

மூன்றும் திருச்சுற்றில் இருக்கின்ற துவஜஸ்தம்ப பீடம் இந்தத் தரைமட்டத்துக்கும் கீழே சுமார் ஐந்து அடி ஆழத் தில் புதைந்துள்ளது. சற்றேறப்பப் பத்து நூற்றாண்டுகளில் சுற்றுப்புறத் தரைமட்டம் பத்தடி உயர்ந்து மேடிட்டுள்ளது. இது கொள்ளிட ஆற்றுப் போக்கின் காரணமாகவே இருக்க வேண்டும்.

கோயில் இரண்டு கோபுரங்களும் மூன்று திருச்சுற்று களும் உடையது. கிழக்கு மேற்காக 550 அடி; வடக்கு தெற்

காக 400 அடி நீள அகலமுடைய நிலப்பரப்பில் கோயிலமைந் துள்ளது.

கோயிலைச்சுற்றி

வெளிக்கோபுரத்தின் எதிரிலேயே சாலையை ஒட்டிக் கோயிலுக்குரிய தேர் நிறுத்தப்பட்டுள்ளது. இதன் அருகில் கோயிலுக்குரிய கல்யாணமண்டபம் உள்ளது. நந்திகேஸ்வரர் திருமணம் என்ற கோயில் விழா இங்கு நடைபெறுவது வழக்கம். இந்த மண்டபம் புதியது; பெயரளவிலேயே மண்டபமாக நிற்பது.

கோபுரத்தின் வடபுறம் திருச்சுற்று மதிலினையொட்டி மணிகட்டி ஐயனார் எனப்படும் தெய்வமும் அவரது காவல் தெய்வமும் வெட்ட வெளியில் நிற்கிறார்கள். திருச்சுற்றுமதில் மேற்காகத் திரும்புமிடத்தில் கொத்தள விநாயகர் கோயில் உள்ளது. திருச்சுற்று மதிலின் பின்புறம் சற்று மேடான பகுதியும் சில இடிபாடுகளும் உள்ளன. இங்கு ஆகாசஐயனார் கோயில் எனப்படும் சிறுமாடம் உள்ளது. நித்ய பூஜையில் இந்த ஆகாச ஐயனாருக்கும் இடம் உண்டு.

இத்திருச்சுற்று மதில் சுமார் 20 அடி உயரமுடையது. இது கட்டப்பட்டபின் இதன் உயரம் கூட்டப்பட்டுச் சிலமுறை புதுப்பித்துக் கட்டப்பட்டிருக்க வேண்டும். முதற்கோபுரத்திலுள்ள வீரபாண்டியன் கல்வெட்டில் பெரியகாட்டான் திரு மதில் என்ற மதிற்சுவர் குறிப்பிடப்படுகிறது.[1] அது இந்தத் திருச்சுற்று மதிலாக இருக்கலாம்.

மூன்றும் திருச்சுற்றில்

மூன்றும் திருச்சுற்றின் வடபுறத்தில் சுந்தராம்பாள் சன்னிதி எனப்படும் தேவி கோயில் உள்ளது. கோயிலின் எதிரில் லக்ஷ்மிதீர்த்தம் எனப்படும் குளம் உள்ளது. நித்திய உற்சவத்தில் தேவிக்கு, உரிய இடம் அளிக்கப்படுகிறது.

இந்தக் கோயில், சிதைந்துபோன ஒரு கோயிலின் கற்களைக்கொண்டு பின்னாள்களில் கட்டப்பட்டிருக்கவேண்டும்.[2]

இரண்டாம் திருச்சுற்றில்

இரண்டாவது கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்ருல் நூற்றுக்கால் மண்டபம் எனப்படும் அலங்கார மண்டபம் உள்ளது. இங்கு கோயில் நிர்வாக அதிகாரியின் அலுவலகமும் உள்ளது.

இந்த மண்டபத்தின் வடபால், முற்றிலும் இடிந்து போய்ச் சுவடாக மட்டும் நிற்கும் நெல்குத்தி மண்டபம் என்ற மண்டபம் உள்ளது. இந்த நெல்குத்தி மண்டபத்தில் ராஜ ராஜ சோழனுடைய கல்வெட்டொன்று இருந்ததென்று தெரிகிறது. அக்கல்வெட்டு தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி ஐந்தில் வெளிவந்துள்ளது.

நூற்றுக்கால் மண்டபத்தின் வலப்புறம் யாகசாலை உள்ளது. யாகசாலையைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடுவதற்கொன்றுமில்லையாயினும் இது சற்றுப் பழமையானதாக இருக்கலாம் எனத்தோன்றுகிறது. முன்னல் நிற்கும் இரு தூண்கள் சோழர் காலத்தவை.

இந்தத் திருச்சுற்றின் தென்கிழக்கில் மடைப்பள்ளி உள்ளது. இது பழமையான அமைப்புடையது.

திருச்சுற்றின் பின்புற வாயில், அதிஷ்டானப் பகுதிகளுடன் நிற்கிறது. இது இப்போது பயன்படுத்தப்படுவதில்லை.

முதல் திருச்சுற்றில்

முதல் திருச்சுற்றுக்குரிய நுழைவாயில், கோபுரமாக இல்லாமல் வளைவு (arch) வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இந்தத் திருச்சுற்றுமதில் இரு தளங்களுடன் கம்பீரமாக அமைந்துள்ளது. இதனைக் கடந்து உள்ளே நுழைந்தால், வாயிலுக்கும் மூலஸ்தானத்து முகமண்டபத்துக்கும் இடையில் தூண்கள்; தூண்கள் மயம். வடபுறம் சிற்சபை அமைந்துள்ளது. அதற்கு உரிய மகாமண்டபமாக அமைக்கப்பட்ட தூண்கள் இவை. திருச்சுற்றின் முற்பகுதியை இருட்டடித்துப்போகச் செய்து, திணிக்கப்பட்ட ஓர் உணர்வை இவை ஏற்படுத்துகின்றன.

இந்தத் திருச்சுற்று முழுவதும் நடைமாளிகையாக ஆக்கப்பட்டு ஆங்காங்கு தெய்வ உருவங்கள் பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளன.

சன்னிதிகள்

மூலஸ்தானம் :

வைத்தியநாதசுவாமி சன்னிதி எனப்படும் சன்னிதி மையமாக அமைந்துள்ளது. விமானத்துடன் கூடிய இந்தச் சன்னிதி, கருவறை, அர்த்த மண்டபம், முகமண்டபங்களுடையது. அர்த்த மண்டப நுழை வாயிலையொட்டி இடப்புறம் சண்டேஸ்வரர்க்குரிய சிறிய சன்னிதி உள்ளது.

உற்சவ விக்ரக சன்னிதி :

சுவாமி சன்னிதியின் வலப்புறம் உற்சவ விக்ரகங்கள் வைக்கப்பட்டுள்ள சன்னிதி உள்ளது. இங்கு நித்ய பூஜையில் பங்கு பெறும் விடங்க லிங்கங்கள் உள்ளன. எனவே இதை விடங்கர் சன்னிதி என்றும் அழைக்கின்றனர். அமைப்பில் இச்சன்னிதி, மண்டபம் போலக் காட்சியளிக்கிறது.

இவ்விரு சன்னிதிகளுக்குமிடையிலுள்ள இடைவெளி தனியறையாக மாற்றப்பட்டு நகைகள், சில அரிய விக்ரகங்கள் வைக்கப்பட்டுள்ளன.

சுந்தர விநாயகர் சன்னதி :

உற்சவ விக்ரக சன்னிதியின் முன்புறம் தெற்கு நோக்கி இச்சன்னிதி அமைந்துள்ளது. சிறிய அமைப்பு.

இந்தச் சுந்தர விநாயகர், சோழர் காலக் கல்வெட்டுகளில் அழகிய பிள்ளையார் எனக்குறிப்பிடப்படுகிறார். "விக்கிரம சோழன் சந்தி"யெனப்பட்ட ஏதோ ஒரு நித்தியோத்ஸவத்தில் இவர்க்குத் தனிப்படத் திருவமுது செய்விக்கப்பட்டது.[3] புனல்வாயில் என்ற ஊர் "விக்கிரம சோழன் சந்திமங்கலம்" என அழைக்கப்பட்ட குறிப்புக் கிடைப்பதால் இந்த விநாயகருக்காக அவ்வூர் தேவதானமாகத் தரப்பட்டதெனக் கருதலாம்.[4]

ஜுரேஸ்வரர் சன்னிதி:

மூலஸ்தானத்து முகமண்டபத்தின் வடபுறம், மேற்கு நோக்கிய சன்னிதி ஒன்று இருக்கிறது. கருவறை, அர்த்தமண் டபத்துடன் கூடிய எளிமையான இந்தச் சன்னிதியில், வட புறம் நோக்கிய ஆவுடையாளோடு கூடிய லிங்கம் பிரதிஷ் டிக்கப்பட்டுள்ளது. விமானம் இல்லை. சன்னிதிக்குரிய எந் தவிதக் கட்டட அமைப்பும் இல்லை.

மேற்கு நோக்கியிருக்கும் இந்த ஜுரேஸ்வரர் சன்னி திக்கும் மூலஸ்தான முகமண்டபத்துக்கும் இடையிலுள்ள இடைவெளி மறைத்து மூடப்பட்டுள்ளது. சிறிய சாளரம் போன்ற நுழைவாயில் அமைக்கப்பட்டுள்ளது. இதன் கதவு மூடப்பட்டுள்ளது. இதனுள் யாரும் சென்று பார்த்ததில்லை என்கின்றனர்.

பாலாம்பிகை சன்னிதி :

முதல் திருச்சுற்றின் வடகிழக்கில், சிற்சபைக்கு வலப் புறத்தில் பாலாம்பிகை எனும் தேவியின் சன்னிதியுள்ளது. இதனைச் சன்னிதி என்றே குறிப்பிட முடியாது. தேவி இங்கு பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கிறாள் என்றுதான் குறிப்பிடமுடியும். நித்யோத்ஸவத்தில் இவளுக்கும் ஓரிடமுண்டு. ஆயினும் மூன் றும் திருச்சுற்றில் தனியாகக் கோயில் கொண்டுள்ள சுந்தராம் பாள்தான் இறைவனின் முதன்மையான தேவியாகக் கருதப் படுகிறாள்.

இந்த பாலாம்பிகையின் இயற்பெயர் புவனபதி நாச்சி யார் என்பது. மூன்றும் ராஜராஜன் காலத்தில் இவள் எழுந் தருள்விக்கப்பட்டாள்.[5]

---

1 A. R. E. 99 of 1920

2 சுந்தராம்பாள் சன்னிதி பற்றிச் "செய்திச் சிதறல்கள்" என்ற பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

3 A. R. E 24 of 1920. பார்த்துப் படிக்கப்பட்டது.

4 S. I. I. Vol. V No. 629. புனல் வாயிலில் ஆதித்த சோழன் காலத்திலேயே விநாயகர் கோயில் இருந்துள்ளது. இதனைக் குறிப்பிடும் கல்வெட்டு சுந்தராம்பாள் சன்னிதி முன்பிருந்த ஒரு இடிந்துபோன மண்டபத்திலிருந்ததெனத் தெரிகிறது. (A.R.E. 98/1920. & S. I I. XIII-55.) புனல்வாயில் கோயிலுக்குரிய கல்வெட்டு இங்கு காணப்படுவதற்குக் காரணம் இருக்க வேண்டும். புனல்வாயில் விநாயகர், தெளிவாக அறிய இயலாத சில காரணங்களால் இங்கு கொண்டு வந்து பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கலாம் அவ்வாறிருப்பின் இந்தச் சுந்தர விநாயகரே ஆதித்த சோழன் காலத்திய புனல்வாயில் ஸ்ரீ கோயில் கணபதி படாரராகவும் இருக்கக்கூடும்.

5 '...கணக்கு நெற்குப்பையுடையான் பட்டாலகன் திருமழபாடியுடையான் திருச்சிற்றம்பலமுடையான் திருவுணுழிகைப் பிரியனேன்... இக்கோயில் முதற் பிரகாரத்து வடக்கில் திருநடை மாளிகையில் வடபாரிசத்து நான் எழுந்தருள்வித்த புவனபதி நாச்சியார்க்கு...' மூன்றும் ராஜராஜனின் 19-ஆம் ஆண்டுக் கல்வெட்டு. பார்த்துப் படிக்கப்பட்டது. (குறிப்பு : A. R. E. 38/1920).

<✲>

# திருநாமம் பல பாடி....

இன்று வைத்தியநாதசுவாமி என்றழைக்கப்படும் மழபாடி இறைவர் காலத்திற்கேற்ப மாறுபடும் கருத்துகளைப் பிரதிபலிக்கும் வகையில் பல பெயர்களைப் பெற்றுத் திகழ்ந்திருக்கிறார்.

**மழபாடி**

வரிந்த வெஞ்சிலை யொன்றுடையான் மழபாடியைப்
புரிந்து கை தொழுமின் வினையாயின போகுமே[1]

என்று சம்பந்தர் பாடுகையில் மழபாடி என்ற சொல் ஊரைக் குறிப்பதாக மட்டுமின்றி இறைவனையும் குறிப்பதாக வழங்கப்பட்டிருப்பது தெரிகிறது. பொருள் தொடர்பு இல்லாவிட்டாலுங்கூட ஊர்ப் பெயரையே இறைவனையும் குறிப்பதற்குப் பயன்படுத்தும் மரபு நிலவிவந்திருப்பதற்கு நாயன்மார்கள் பாடலில் உதாரணங்கள் பல உள்ளன.[2] அவ்வகையிலேயே மழபாடி என்ற இப்பெயரும் கையாளப்பட்டுள்ளது.

இந்தப்பெயரைக் கல்வெட்டுகள், இறைவனைக் குறிப்பதற்கு வழங்காவிட்டாலும், மேற்குறித்த இலக்கிய மரபைப் பின்னாளில் வந்தவர்கள் ஏற்றிருக்கிறார்கள்; இசைந்திருக்கிறார்கள்.

"வாச்ச மாளிகை சூழ் மழபாடி" என்ற சம்பந்தரின் தொடரினை யொட்டிக் கோயில் திருச்சுற்றுமதிலை "வாச்ச மாளிகை" என்று பிற்காலச் சோழர் ஆட்சியில் பெயரிட்டமைத்திருப்பது, அவர்கள் மழபாடி என்பது இறைவரையும் அவர் இருந்தருளும் மூலஸ்தானத்தையும் குறித்ததாகப் பொருள் கொண்டிருப்பதைப் புலப்படுத்துகிறது.[3]

**மழுவாடி**

மழபாடி என்ற ஊரின் பெயரையே இறைவனையும் குறிப்பதற்கு ஆண்ட இலக்கிய மரபுக்கு முற்றிலும் மாறாக

மழுவாடி என்ற இறைவனின் பெயரே ஊரையும் குறிப்ப தற்கு விரிந்ததாக ஊரார் கருதியிருக்கின்றனர். இதற்கு நேர்ச்சான்று எதுவுமில்லாவிடினும் திருமழுவாடி என்று ஊர் குறிப்பிடப்படுவதற்கு வேறு காரணமிருக்க வழியில்லை.

விநாசம் (கேடு) இல்லாதவன் என்று பொருள்படும் அவிநாசி என்ற இறைவன் பெயர் ஊருக்கும் ஆகிவந்தது போல இப்பெயரை மக்கள் கருதியிருக்க வேண்டும்.

மழுவாடி பற்றிய புராணக்கதைக்கு அதிகார பூர்வ மான சான்று 16-ஆம் நூற்றுண்டிலெழுந்த தலபுராணம்தான் என்றாலும் விக்கிரம சோழன் காலத்தில் கோயில் தச்சாசாரி யனாக இருந்த கோட்டையூர் ஆசாரியன் ஒருவன் "மழுவாடி வீரன்" என்று பெயர் பெற்றிருந்தது[4] "மழுவாடி" பற்றிய மக்களின் மதிப்பீட்டைப் புலப்படுத்துகிறது.

தொடக்க காலக் கல்வெட்டுகளில் இறைவர்

திருமழுவாடி உடையார் (1/1920)
திருமழுவாடி மகாதேவர் (2/1920)
திருமழுவாடி ஆழ்வார் (7/1920)
திருமழுவாடி பெருமானடிகள் (12/1920)

என்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளார். பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இவ்வடிவங்களே போற்றப்படு கின்றன.

திருமழுவாடி உடையார் (S.I.I. V 651)
திருமழுவாடி மாதேவற் (Ibid 639)

என்ற வடிவங்கள் முதல் ராஜேந்திரன் கல்வெட்டுகளி லும், "திருமழுவாடி உடைய மகாதேவர்" (Ibid 640) என்ற வடிவம் முதற்குலோத்துங்கனின் கல்வெட்டிலும் காணப்படு கின்றன[5]

உடையார் திருமழுவாடி உடையார்[6]

என்று இரண்டாம் இராஜராஜனின் கல்வெட்டில் காணப்படும் தொடர்,

உடையார் திருமழபாடி உடையார்[7]

என்று, ஊர்ப்பெயர் திருத்தமுற்ற வடிவில், இறுதிக் காலச் சோழர் கல்வெட்டுகளில் இடம் பெறுகிறது.

உடையார் திருமழபாடி உடைய நாயனுர்[8]

என்று பாண்டியர் கல்வெட்டிலும்

திருமழபாடி உடையார் நயினுர்[9]

என்று கோனேரிராயனின் கி.பி. 1492-ஆம் ஆண்டுக் கல் வெட்டிலும் சில வடிவங்கள் காணப்படுகின்றன.

இக்கல்வெட்டுகளிலெல்லாம் திருமழபாடி என்பது ஊரைக்குறித்தது என்பது, பெரும்பாலான கல்வெட்டுகளில் தேவதானம் என்ற சொல்லும் இதற்கு முன்னுல் இணைந்து காணப்படுவதனுல் விளங்குகிறது.

கோயிலிலுள்ள வேறு இறைவர்களுடன் சேர்த்துக் குறிப்பிடவேண்டிய நிலையில் ஆளுடைய நாயனுர்[10] என்று இறைவரை அழைத்துள்ளனர்.

வயிரத்தூண்

அப்பர் தமது "அலையடுத்த" பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் மழபாடி இறைவரை "வயிரத்தூணே" என்று விளித்து உருகுகிருர். வயிரத்தூண் என்பது விண்ணுக்கும் மண்ணுக்குமாக அடிமுடிகாண இயலாத நிலையில் நின்ற அழற்பிழம்பை-லிங்கோத்பவரை-க் குறித்திருக்க வேண்டும்.[11]

கல்வெட்டுகள் இப்பெயரால் இறைவரைக் குறிப்பிட வில்லையாயினும் மக்களிடையே இவ்வழக்கு இருந்திருக்கிறது என்பது 'ஆணைமங்கலமுடையான் பஞ்சநதி வயிரத்தூண்' என்ற பெயருடைய ஒரு மனிதன் குறிப்பிடப்படுவதால் தெரிகிறது.[12]

சேக்கிழார் வயிரமணித்தூண் என்று இறைவரைக் குறிப்பிட்டுள்ளார். ஆனுல் இப்பெயரை இறைவர்க்குச் சூட்டிய அப்பர் இத்தலத்திற்கு வந்து தொழுத நிகழ்ச்சியைப்

பாடும்போது இத்தொடரைக் கையாளாமல், சம்பந்தர் வருகையைப் பாடும்போது கையாள்கிறார். இதன் காரணம் தெளிவுறவில்லை.[13]

வயிரத்தூணர், வச்சிரலிங்கம் என்ற தொடர்களைத் தல புராணம் கையாள்கிறது. பிரம்மலோகத்திலிருந்து கொண்டு வரப்பட்ட வைரலிங்கம் என்ற விவரத்தையும் தருகிறது.

வயிரத்தூண் என்ற தொடரை உருவகப் புகழுரையாகக் கொள்ளாமல், மூலஸ்தான லிங்கம் நல்ல ஒளிவீசக் கூடியதென்றும், முன்பெல்லாம் சூரிய ஒளி நேராகக் கருவறையில் வீசும்போது அது மின்னுமென்றும் உள்ளூர் மக்களில் பலர் பேசிப் பெருமிதமடைகின்றனர். கோயிலுக்கு எதிரில் கொள்ளிடக் கரை உயர்ந்துவிட்டதால் சூரிய ஒளி மூலஸ்தானத்தில் விழுவதற்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டதாம்.

### வைத்தியநாதர்

திருமழபாடிக் கோயில், அருள்மிகு வைத்தியநாத சுவாமி திருக்கோயில் என்று இப்போது அழைக்கப்படுகிறது. மூலவரை வைத்தியநாதசுவாமி என்று குறிப்பிடுகின்றனர். வைத்தியநாதபுரம், வைத்தியநாதன்பேட்டை முதலிய சுற்றுப்புற ஊர்கள், கோயிலோடு கொண்டிருந்த தொடர்பைத் தம் பெயராலேயே அறிவிக்கின்றன.

வைத்தியநாதன் என்ற பெயர் இறைவர்க்கு ஏற்பட்ட விதத்தை நின்று நிதானித்துக் கவனிக்கும்போது வியப்பிற்குரிய ஒரு செய்தி வெளிப்படுகிறது.

### வைச்சியநாதர்

கல்வெட்டுகள் அனைத்தும் திருமழுவாடி உடையார் என்றோ அதனோடு தொடர்புடைய சொல்லாலோ இறைவரைக் குறிப்பிடுகையில், முதல் ராஜேந்திரனின் 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டு[14] (கி.பி. 1028) ஒன்று "திருமழுவாடி ஸ்ரீவைச்சியநாத தெவ்வர்"க்கு நந்தா விளக்கெரிப்பதற்கு நடந்துள்ள ஏற்பாட்டைப் பேசுகிறது. இந்தக் கல்வெட்டு

தொடங்குகின்ற முறையைப் பார்க்கும்போதே திருமழுவாடி ஸ்ரீவைச்சியநாத தேவர் என்ற இந்த இறைவர், திருமழுவாடி உடையாரினின்று வேறுபட்ட, வேறொரு இறைவராக இருப்பாரோ என்ற சந்தேகம் தோன்றுகிறது.

இதே அரசனின் 22-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, "உடையார் வைச்சியநாத தேவர்க்கு"த் தந்தக்கால் பள்ளிக்கட்டில் முதலான சில பொருள்கள் கொடுக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.[15]

இதன் பின்னர் மூன்றும் குலோத்துங்கனின் கல்வெட்டொன்றும் "வயிச்சியநாதப் பெருமாள்" என்ற இறைவரைக் குறிப்பிடுகிறது.[16] இக்கல்வெட்டுகள் நம் ஐயத்தை வலுப்படுத்துகின்றன.

ஆளுடையநாயனார்க்கும் வைத்தியன்னுதைப் பெருமாளுக்கும்

கோயிலிலிருக்கும் சோமாஸ்கந்த மண்டபம் எனப்படும் உற்சவ விக்ரக சன்னிதிச் சுவரிலிருக்கும் மூன்றும் ராஜராஜன் காலத்திய கல்வெட்டொன்று, நமது சந்தேகத்திற்கு முற்றுப் புள்ளி வைக்கும் விதத்தில் இந்த இறைவரை நமக்கு அறிமுகம் செய்கிறது. "ஆளுடையநாயனார்க்கும் வைத்தியன்னுதைப் பெருமாளுக்கும்" இரு நந்தாவிளக்குகள் எரிப்பது பற்றி அந்தக் கல்வெட்டு[17] கூறும்போதே, ஆளுடையநாயனார் என்று மூலவர் மட்டுமே அழைக்கப்படும் மரபு நம் நினைவிற்கு வருகிறது. வைத்தியநாததேவர் என்ற பெயரால் குறிப்பிடப்பட்டவர் மூலவர் அல்லர் என்று தெளிவு பெறுகிறோம்.

வைச்சியநாதீஸ்வரமுடையார்

மூன்றும் ராஜராஜனின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1230) "இக்கோயில் கும்பிட்டு இருக்கும் ஸ்ரீமாஹேஸ்வரரில் எயிற்பாக்கிழையான் எம்பிரான் சம்பந்தர் எழுந்தருளிவித்த வயிச்சியநாதீச்சுரமுடைய நாயனர்" என்றும் 'உடையார் வைஜ்யநாதீஸ்வரமுடையார்'என்றும் குறிப்பிட்டு, இவர் தமக்கெனத் தனிச்சன்னிதிகொண்ட இறைவர் என்று நமக்கு உணர்த்துகின்றது.[18]

ஆனல் புதிய சந்தேகமொன்று இப்பொழுது இங்குத் தோன்றுகின்றது. கி.பி. 1028-ஆம் ஆண்டிலேயே கோயிலில் எழுந்தருளியிருந்த ஓர் இறைவர், ஏறத்தாழ 200 ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் எழுந்தருள்விக்கப்பட்டதாகக் கூறப்படுவதேன் என்ற புதிய சிக்கல் எழுகிறது. அதனேடு இந்த வைத்தியநாதீஸ்வரம் எது, இவர் ஏன் வைத்தியநாதர் என்று பெயர் பெற்ருர் என்ற வினக்களும் சூழ்கின்றன.

வைத்தியநாதர் - ஜுரேஸ்வரர்

மூலஸ்தானத்தின் இடப்புறம் முகமண்டபத்தை யொட்டி ஒரு சன்னிதி உள்ளது. இதன் மூலவர் ஜுரேஸ்வரர் என்று அழைக்கப்படுகிருர். கோயிலினுள் "ஈஸ்வரம்" என்று குறிப்பிடத்தக்க சன்னிதி, மூலஸ்தானந்தவிர, இது ஒன்றுதான். மேலும் இச்சன்னிதிச் சுவரில் மூன்ரும் ராஜ ரரஜன், ஹெய்சள வீரராமநாதன் ஆகியோரின் கல்வெட்டு இருப்பதுகொண்டு, இச்சன்னிதி 13-ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் கட்டப்பட்டதெனத் தெளியலாம். எனவே வைத்தியநாதீஸ்வரமுடையார் தாம் இன்றைய ஜுரேஸ்வரராகப் பெயர் மாற்றம் பெற்றிருக்கிருரென்ற முடிவுக்கு வருவது சிரமமல்ல.

13-ஆம் நூற்ருண்டின் தொடக்கப் பகுதியில் கோயில் பல மாற்றங்களுக்கு ஆட்பட்டிருக்கிறது. கோயிலின் இரண்டாம் திருச்சுற்றும் கோபுரமும் இக்காலத்தில்தான் எடுக்கப்பட்டிருக்கவேண்டும். முன்னர் இருந்த அமைப்புகள் முற்றிலும் மாற்றப்பட்டு மூலஸ்தானத்தின் வலப்புறம் உற்சவ விக்ரக சன்னிதியும் இடப்புறம் வைத்திய நாதீஸ்வரர் சன்னிதியும் இக்காலத்திலேயே கட்டப்பட்டிருக்கவேண்டும்.[19]

கோயிலின் பல பகுதிகள் சிறுத்துப்போய் 'ஸ்தான சங்கடமாக' இருந்த நிலையை மாற்றி அவற்றை விரிவுபடுத்தியதாகத் தெற்றி பெரியாஞன எதிரிலிசோழ மூவேந்தவேளான் என்பவன் கி.பி: 1223-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் போற்றப்படுகிருன்.[20] இந்நிலையில் வைத்தியநாதீஸ்வரம் புதிதாகக் கட்டப்பட்ட செய்தியே, வைத்தியநாதீஸ்வரமுடையார் எழுந்தருள்விக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கவேண்டும்.

மழபாடி மருந்து

வைத்தியநாதன் என்ற வழக்கு சற்றுப் பிற்படத் தோன்றினுலுங்கூட இதற்குரிய மூலவித்து சம்பந்தருடைய பாடல்களில் புதைந்துள்ளது.

'மழபாடியுள் மேய மருந்து'[21]

'மழபாடி மருந்து'[22]

என்பன அவரது உருவகங்கள்.

'மன்னிலங்கிய மாமழபாடியை
உன்னில் அங்க உறுபிணி யில்லையே'[23]

என்ற அவரது சொற்கள், இத்தலத்தை (அல்லது இறைவனை) நினைத்தாலே உடற்பிணி நீங்கிவிடும் என்று முழங்குகின்றன.

இவ்வாறின்றி, வைச்சிய நாதர், வைஜ்ய நாதர் என்ற தொடர்களே கல்வெட்டு வழக்கில் அதிகமாகக் காணப்படுவது கொண்டு, வயிரத்தூணர் என்ற சொல்லின் மூல வடிவமான 'வஜ்ரஸ்தம்ப நாதர்' என்ற தொடரே இவ்வாறு திரிந்திருக்கிறதோ என்ற ஐயமும் தோன்ருமலில்லை.[24]

வைரத்தூண் என்பது அடிமுடி காண இயலாத அனற்பிழம்பைக் குறித்திருக்க வேண்டுமாதலால் நோய்களையும் அசுத்தங்களையும் தான் உண்டு, மாற்ருக அவியுணவு நல்கி அழியாத வாழ்வினை அளிக்கின்ற தீயின்தன்மை வைரத்தூணினை வைத்தியநாதராக்கியிருக்கலாம் என்று தோன்றுகிறது.

ருத்ரனை வைத்தியர்களுள் பெரிய வைத்தியனுக ரிக் வேதம் போற்றுவதும் அவனது அக்னித் தன்மையினுலேயே ஆகவேண்டும்.[25]

ஈசான : சர்வ வித்யானும் :

எவ்வித மனத்தடையுமின்றி நாம் இந்த ஊகங்களை மேற்கொண்டாலுங் கூட, வைத்தியநாதர் என்ற பெயர் நியாயமான முறையில் மூலவரைத் தானே குறித்திருக்க வேண்டும்; திருமழபாடி உடையாரினின்று வேறுபட்ட ஓர் இறைவரை

இப்பெயரில் எழுந்தருள்வித்தது ஏனென்ற கேள்வி தோன்றத் தான் செய்கிறது.

அண்டத்தின் இயக்கங்களையெல்லாம் தன்னுள் கொண்டு நடமாடுங் கோயிலாக இயங்கும் மனித உடலின் சூட்சுமங்களை அறிந்திடும் வித்தையே மகாவித்தையாகத் தத்துவவாதிகளால் போற்றப்படுகிறது. அணுக் கூட்டங் களின் சேர்க்கையை மாற்றுவதன் மூலம் உலோகங்களைப் பொன்னாக்கும் ரசவாதக் கலை கண்ட சித்தர்கள் இதே கொள் கையைக் கையாண்டு மனித உடலில் எண்வகைச் சித்திகளை நிகழ்த்தினர். ககனசாரணர்களாக வானில் பறக்கவும் கற்றிருந்த இந்த 'அறிவர்கள்' வித்யாதரர் என்று போற்றப் படவும் இவர்கள் மனித உடல் பற்றிக் கண்ட உண்மை "வைத்யம்" என்று பெயரிடப்படவும் இதுதான் காரண மாயிருந்திருக்கவேண்டும். வித்தைகளுள் மகாவித்தையான, மனித உடல் பற்றிய அறிவே 'வைத்யம்' எனப்பட்டது.[26]

வைத்தியர்களின் நாதனாகக் குறிப்பிடப்படும் தகுதி பெற்ற இறைவன், அனைத்து வித்தைகளுக்கும் உரிய திசை யான ஈசான திசையில் எழுந்தருள்விக்கப்படுவதுதானே முறை?[27]

இந்த மரபினைப் பின்பற்றியே மூலவருக்கு வடகிழக்குத் திசையில், மூலவர் நோக்கிற்கு எதிர்த்திக்கினை நோக்கிய வண் ணம் வைத்தியநாதர் எழுந்தருளியிருக்கிறார்.

முதல் ராஜராஜன் காலத்தில் மழபாடிக் கோயில் முற் றிலும் புதுப்பித்துக் கட்டப்பட்டது.[28] நாயன்மார் பாடல் களில் காணப்படும் வைத்தியநாதர் என்ற கருத்தோட்டமும், நோய்தீர்க்கும் தலமகிமை பற்றிய மக்களின் நம்பிக்கையும், ஆகம மரபுகளும் அப்போது இந்த வகையில் ஒருங்கே கௌர விக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.[29]

தன்மயமாதல்

சோழராட்சியின் இறுதிக் காலத்தில் வைத்தியநாதன் என்ற பெயர் ஊர் மக்களிடையே மிகுந்து வழங்குகிறது.

வயிச்சியநாதபட்டன், வயிச்சியநாதன் பொன்னுர்மேனி, வயிச்சியநாதகோன் என்ற பெயருடையோர் மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டுகளில் காணப்படுகின்றனர்.30 ஹொய்சள வீரராமநாதன் கல்வெட்டில் "கோயில் சாமுதாய கணக்கு வையிச்சிநாத மூவேந்தவேளான்"31 என்பவன் குறிப்பிடப்படுகிறுன். ஊரில் ஒரு தெரு 'வயிச்சியநாத பெருந்தெரு'32 என்று பெயர் சூட்டப்பட்டிருந்தது.

இதன் பின் மற்ற பெயர்களைப் பின் நிறுத்தி வைத்திய நாதன் என்ற இந்தப் பெயர் மக்களின் வாழ்விலும் நம்பிக்கையிலும் பெருமளவில் ஆட்சி கொள்கிறது. இதன் விளைவாகவோ உடனிகழ்ச்சியாகவோ மூலவரே இந்தப் பெயரைச் சிறுகச் சிறுகத் தன்மயமாக்கிக் கொண்டு விடுகிருர். 16-ஆம் நூற்றுண்டில் எழுதப்பட்ட தலபுராணம், சந்திரனின் க்ஷய நோயைத் தீர்த்ததால் மழபாடி இறைவரே வைத்தியநாதன் என்று பெயர் பெற்றதாக நிலை நாட்டுகிறது.33

## பெயர் மாற்றப் பின்னணிகள்

சோழர்கள் ஆட்சிக்குப்பின் தமிழகத்தில் தொடர்ந்து நிகழ்ந்த அரசியல் நிலை மாற்றங்களும் அவற்ருல் மக்கள் மன நிலையில் ஏற்பட்ட பாதிப்புகளும் பல துறைகளில் பிரதிபலித்தன. அன்ருட வாழ்வில் சிக்கல்களும் ஸ்திரமற்ற தன்மையும் வளர வளர, நேற்று நடந்ததை நிரந்தரமாக மறந்துவிடும் நிலைக்கு மக்களின் மனப்பாங்கு மாற்றமுற்றது. தத்துவம், கலை, இலக்கியம் முதலிய எல்லாத் துறைகளிலும் வியாபாரயுக தர்மம் வியாபித்தது. இந்நிலையில் மக்களின் கஷ்டநஷ்டங்களில் நேரடியாகப் பங்கேற்கும், குறைதீர்க்கும் வல்லமை பெற்ற வைத்தியநாதர் என்ற பெயர், மழுவாடி, மழபாடி உடையார் முதலிய மற்ற பெயர்களைவிடத் தனக்கு மக்களிடம் இருக்கும் செல்வாக்கினுல் மூலவருடன் நெருங்கிய உறவு கொள்ள நேர்வது வியப்பிற்குரியதல்ல.34

## ஜுரேஸ்வரர்

வைத்தியநாதீஸ்வரமுடையார், தம்முடைய பெயர் மூலவர்க்கு உரியதாக ஆக்கப்பட்ட பின்னர் ஜுரேஸ்வரர் என்ற

பெயரை எப்படிப் பெற்ருர் என்ற விவரத்தை நாம் ஊகங்களின் அடிப்படையிலேயே வளர்க்க வேண்டிய நிலையிலிருக்கிரேம். வழிபாட்டிலும் மக்களின் வழக்கிலும் ஓரளவு புறக்கணிக்கப்பட்ட நிலையில் நிற்கும் இவ்விறைவர் குறித்துத் தலபுராணமும் ஏதும் பேசவில்லை.

### ஜுரமும் கொட்டாவியும்

சிவன் ஜுரேஸ்வரர் என்று பெயர் பெற்றது பற்றிப் புராணங்களில் ஒருகதை கூறப்படுகிறது. கிருஷ்ணன் வாணுசுரனுடன் போரிடுகையில், தன்பக்தனுகிய வாணனுக்கு உதவ விரும்பிய சிவன் தன் ஆற்றலை ஒன்றுதிரட்டி, ஜுரவடிவில் அனுப்புகிருன். கிருஷ்ணனும் தனது ஜுரத்தை ஏவி அவனுடன் போரிடுகிருன். இறுதியில் கொட்டாவி ஆயுதத்தை ஏவி சிவஜுரத்தை வெல்கிருன். இது அக்கினி புராணம்[35] கூறும் கதை. இக்கதையின் வேறுபட்ட சில வடிவங்களும் உள்ளன. ஜுரமும் கொட்டாவியும் இவ்வாறு சித்திரிக்கப்பட்டிருப்பது சிவனது அக்கினித் தன்மையையும் திருமாலின் துயில்கின்ற-அறிதுயில் - நிலையையும் குறித்த வேடிக்கையான உருவகப் புனைகதையாக இருக்கலாம்.

### சிற்பங்களில் ஜுரேஸ்வரர்

ஜுரேஸ்வரர் என்று அழைக்கப்படும் சிற்பங்கள் சில தமிழகத்தில் உள்ளன. இவை பொதுவாக, மூன்று தலை, மூன்று கை, மூன்று கால்களுடையனவாய்ச் சூலந்தாங்கிப் போரிடும் கோலத்தில் படைக்கப்பட்டிருக்கும்.

வெப்பத்தின் காரணமாக ஏற்படுகின்ற தலையிடி, காய்ச்சலால் வருந்துபவர்கள் இவரைத் தொழுவதும், இவரது மேனியில் அரைத்துக்காப்பிடப்பட்ட மிளகினைப் பிரசாதமாக உண்பதும் தமிழகத்தின் சில பகுதிகளில் வழக்கத்திலிருந்து வருகின்றன. தாம் எதிரிட முடியாத உக்கிரசக்தியைத் தெய்வமாகப் பாவித்துப் பராவியும் பலி கொடுத்தும் 'சாந்தி' செய்து, அதிலிருந்து மீள முயன்ற தொல்குடி மரபின் தொடர்ச்சி இது.

நோய்க்கு காரணமான பொருளே நோயைக் குணப் படுத்தவும் கூடியது என்ற மருத்துவ நூற் கோட்பாடும் இந்த நம்பிக்கைக்குப் பக்கபலமாக நிற்கிறது. இவ்வாறு, தான் ஜுரவடிவமாக நின்று, மற்றவர்கள் ஜுரத்தைக் குணப்படுத் தும் ஆற்றலால் ஜுரேஸ்வரரே "ஜுரஹரர்" என்று அழைக்கப்படுவதும் உண்டு.

## நோய் தீர்க்கும் துணையாளர்

சிவலிங்க வடிவில் எழுந்தருளியிருக்கும் நமது ஜுரேஸ் வரர் குறித்து இத்தகைய நம்பிக்கையேதும் ஊர் மக்களிடை யே இல்லை. தமக்கு உரிய பெயரும் தன்மையும் மூலவருக்கு உரியவையாகிவிட்ட பின்னர், அவருக்குக் கீழ்ப்பட்டவராகவும் அதே வேளையில் நோய் தீர்க்கும் ஆற்றல் படைத்தவராகவும் இவரைச் சித்திரிப்பதற்கு ஜுரேஸ்வரர் என்ற பெயர் துணை புரிந்திருக்கக்கூடும் என்ற அளவில், கருத்துகளைப் பொருத் திப் பார்க்கும் நம் ஊகங்கள் நின்று விடுகின்றன.

---

1 திரு 2, பதி. 9, பா. 6

2 காளத்தி, மணஞ்சேரி முதலிய ஊர்ப் பெயர்கள், எவ்விதப் பொருள் தொடர்பும் இல்லாதபோதும் இறைவனைக் குறிப்ப தற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

'காளத்தியானவன் என்கண்ணுளானே'–திரு. 6, பதி. 9, பா. 2, 5, 6, 7, 8, 9, 10. 'மணஞ்சேரி, அருளெனக் கொடுத்தனன் கொற்ற வாளொடு நாமமே' திரு. 5, பதி. 87, பா. 10.

3 'கல்வெட்டுகள்' அத்தியாயத்தில் 'கல்வெட்டுகளில் திருமுறைச் சொல்லாட்சி' என்ற பகுதியில் பார்க்க.

4 S. I. I. V. 642.

5 திருமழுவாடி மகாதேவர் என்ற வடிவம் காணப்படும் ஒரு கல் வெட்டிலேயே ஒரு மனிதனின் பெயராகக் 'கண்டன் மழபாடி' என்ற தொடரும் இடம் பெற்றுள்ளது தஞ்சைக் கோயிற் கல் வெட்டுகளிலும் ஆட் பெயராக 'மழுவாடி' என்ற வடிவம் காணப்படவில்லை. பரம்பரையாகத் தொடர்ந்து வரும் குடும்பப் பெயர்கள் தம் தனித் தன்மையைக் காத்துக்கொள்வதனை இவை நமக்கு உணர்த்துகின்றன.

6 சேக்கிழார் கல்வெட்டில் இவ்வடிவம் காணப்படுகிறது. (95/1920).

7 கல்வெட்டுகள் பார்த்துப் படிக்கப்பட்டன. (84/1920 முதலியன).

8 பார்த்துப் படிக்கப்பட்டது. (103/1920; S. I. I. V 628).

9 — do — (51/1920)

10 — do — (27/1920).

11 லிங்கோத்பவருடைய நெருப்புத் தன்மையைக் காட்டுவதற்காகச் சிற்பங்களில் இரு பக்கங்களிலும் தீச்சுடர்களைச் சித்திரிக்கும் மரபு உண்டு.

12 S. I. I. V 632.

13 ''நீடிய அப்பதி நின்று நெய்த்தானமே முதலாக
மாடுயர் தானம் பணிந்து 'மழபாடியாரை' வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக்கரியார் திருப்பூந்துருத்தியைச் சேர்ந்தார்''

என்று திருநாவுக்கரசரின் பயண நிகழ்ச்சி நிரலையும், (திருநாவு. புரா, 386.)

'''மழபாடி வயிரமணித் தூணமர்ந்து' மகிழ்கோயில் வலங்கொண் டெய்திச்
செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ் சென்றுதாழ்ந் தெழுந்து நின்று
ஒழியாத நேசமுடன் உடையவரைக் கும்பிட்டங் குறைந்தார் சின்னாள்''

என்று சம்பந்தர் இங்கு தங்கிய விவரத்தையும் (சம்பந்தர் புராணம். 307) குறிப்பிடுகிறார் சேக்கிழார். மழபாடி இறைவரைச் சம்பந்தர் ''கனவயிரத்திரள்'' என்று ஒரு பாடலில் உருவகிக்கிறார். (காச்சிலாத பொன்னெக்கும் கனவயிரத்திரள் ஆச்சிலாத பளிங்கினன்—திரு. 2. பதி. 9. பா. 2) அப்பர் ''கனவயிரத் திரள் தூணே'' என்று ஒரு பாடலில் விளிக்கிறார். (கறைகலந்த பொழிற்கச்சிக் கம்பம்மேய கனவயிரத் திரள்தூணே கலிசூழ் மாடம்—மறை கலந்த மழபாடி வயிரத்தூணே—திரு 6, பதி. 40, பா. 2.) எனவே வைரத்தூண் என்ற கருத்து (Concept) சைவத் திருமுறைகளின் 'அரச குரு' பீடத்தை வகிக்கும் ஞானசம்பந்தராலேயே உருவாக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், அப்பர் இதனைப் பின்பற்றியிருக்க வேண்டுமென்றும் சேக்கிழார் கருதியிருக்கலாம். எங்ஙனமாயினும் இது காரணத்துடனேயே சேக்கிழாரால் கையாளப் பட்டிருக்க வேண்டும்.

14 A. R. E. 67/1920 இக்குறிப்பு தெளிவாக இடம் பெறவில்லை.

15 S. I. I. V 638

16 A. R. E. 86/1920.

17 A. R. E. 27/1920 பார்த்தும் படிக்கப்பட்டது.

18 A. R. E. 92/1920 – do –

19 கோயிலமைப்பு பற்றிய செய்திகள் குறிப்பிடுகையில் இவை விளக்கமாகப் பேசப்படும்.

20 A. R. E. 91/1920

21 திரு. 2, பதி. 9, பா. 4.

22 திரு. 2, பதி. 9, பா. 7.

23 திரு. 3, பதி. 48, பா. 8.

24 வைத்தீஸ்வரன் என்று அழைக்கப்படும் புள்ளிருக்குவேளூர் இறைவனும் வயிரமாகவும் (மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை – வளரொளியை 'வயிரத்தை' மாசொன் றில்லாப் – பொன்னுருவை... திரு. 6, பதி. 54, பா. 5) வைத் தியனாகவும் (தீரா நோய் தீர்த்தருள வல்லான்–அதே பதிகம் பா. 8) பாராட்டப்படுவதைப் பார்க்கையில் வஜ்ரேஸ்வரர், வைத் தீஸ்வரர் ஆகிய இருகருத்தோட்டங்களும் (Concepts) நாயன்மார் காலத்திலேயே ஒன்றுகலந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் உதிக்கிறது.

25 ருத்ரன் வைத்தியர்களுள் சிறந்தவனாகவும் கையில் மருந்துப் பொருள்களை வைத்துக் கொண்டு சுற்றித்திரிபவனாகவும் வருணிக் கப்படுகிறான். (ரிக்வேதம் 4ஆம் அனுவாகம்–2ஆம் சூக்தம்– 33ஆம் சுலோகம்) அக்கினியும் ருத்ரனும் பல சுலோகங்களில் ஒருவராகவே பேசப்படுகின்றனர். (Elements of Hindu Iconography-Gopinatha Rao, Vol. II. part II. p. 420.)

26 வைத்தியத் தொழில் புரிவோர் பண்டிதர் எனக் குறிப்பிடப்படு வதும், வைத்திய அறிவியல்துறை ஆயுர்வேதம் என வழங்கப்ப டுவதும் நினைத்துப் பார்க்கத் தக்கவை.

27 வைத்தீஸ்வரன் கோயிலில் ஈசான திசையிலமைந்துள்ள தீர்த்தம் 'வித்யாதர தீர்த்தம்' எனப்படுகிறது. (புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்–வித்யாதர தீர்த்தச் சருக்கம்–பா. 2)

28 S. I. I. V 652.

29 சுந்தரர் கையாண்ட 'பொன்னார்மேனி' என்ற தொடர்ப் பெயரில் ஒரு செப்புத்திருமேனி 2ஆம் ராஜேந்திரன் காலத்தில் கோயிலில் எழுந்தருள்விக்கப்பட்டது. (S. I. I. V 652.) அச்செய்தி இதனோடு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

30 பார்த்தும் படிக்கப்பட்டது. A. R. E. 83, 84, 86/1920

31 — do — A. R. E. 23/1920.

32 — do — A. R. E. 82/1920.

33 தலபுராணம்-வைத்தியநாதச் சருக்கம்.

34 தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 5இல் (S. I. I Vol. V) ஜுரேஸ்வரர் சன்னிதி முகப்பிலுள்ள கல்வெட்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டின் இருப்பிடம் 'ஜுனேஸ்வரர் சன்னிதி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. Jureswarar என்று எழுதி, பின்னர் Juneswarar என்று பிழையாகப் படித்திருக்க வேண்டும். 1920 ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டு ஆண்டறிக்கையிலும் ஜுனேஸ்வரர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. 1944ஆம் ஆண்டு, கோயில் தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட 'திருமழபாடிக் கோயில் வரலாறு' என்ற நூலிலும் ஜுனேஸ்வரர் என்ற வடிவமே காணப்படுகிறது. இது கல்வெட்டு ஆண்டறிக்கையையே பின்பற்றியுள்ளது. மக்களின் கவனத்திலிருந்து 'ஜுரேஸ்வரர்' எந்த அளவுக்கு விலகிச் சென்று விட்டார் என்பதனை இவை நமக்கு உணர்த்துகின்றன.

35 "Visnuism and Sivaism-A Camparison" by J. Gonda-p. 80.

<★>

# வழிபாடு-அன்றும் இன்றும்

சைவாசார்யம்

கோயிலில் ஆரம்பகாலத்திலிருந்து சிவப்பிராமணரே பூசைப் பணி புரிந்து வந்துள்ளனர். கோப்பரகேசரிவர்மனின் மூன்றுமாண்டில் சாலப்பாடி வையழிபாக்கமுடையான் பெரு மந்திரி என்பவன் ஒரு தானம் கொடுத்திருக்கிறான். இதனைத் 'திருமழுவாடி பன்மநாவபட்டரிடைக்கு பிரமேயத்திலே' கொடுத்ததாகக் குறிப்பிடப்படுகிறது.[1] இந்தப் பத்மநாப பட்டர் என்பவர் கோயில் சிவாச்சார்யராக இருக்கலாம்.

திருமழுவாடி உடையாரைத் திருவாராதனை செய்யும் பெருந்தோட்டத்து காவிணியன் (கௌண்டின்ய கோத்திரத் தைச் சேர்ந்தவன்) வேங்கடவன் மழுவாடி என்பவன் முதல் ராஜேந்திரனின் கல்வெட்டொன்றில் இடம்பெறுகிறான்.[2]

இவ்விரு பெயர்களும் வைணவப் பெயராக இருப்பது சைவ வைணவ பேதங்கள் வேருன்று நிலையைக்காட்டுவதாகக் கொள்ளலாம்.

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில்-14ஆம் ஆட்சி யாண்டில்-'சந்திரபூஷணபட்டாதி சைவாச்சார்யக் காணி யாக'க் கொடுத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.[3] கோனே ரின்மை கொண்டான் என்ற தொடர் கல்வெட்டில் இடம்பெறு வதால் இந்நியமனம் அரசனது நேர் ஆணைப்படி நடந்ததாகத் தெரிகிறது.

மூன்றும் இராஜராஜனின் 7-ஆம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட ஒரு கல்வெட்டில் சைவாசாரியம் திருமழபாடி உடையான் சன்திரபூஷணபட்டன் என்பவன் கையெழுத்திட் டுள்ளான்.[4] இவ்விரு கல்வெட்டுகளுக்கும் (கி.பி. 1147-1225) 78-ஆண்டுகள் இடைவெளியிருப்பதால் இவ்விருவரும் ஒருவர் தாமா என்பது முடிவு செய்ய இயலாதிருக்கிறது.

இவர்களைத் தவிர வேறுசில சிவாசார்யர்களும் குறிப்பி டப்படுகின்றனர். முப்பது வட்டத்துக்காணி உடைய சிவப் பிராமணர் பற்றிய குறிப்பும் உள்ளது.

இப்போது கோயிலில், நியமிக்கப்பட்ட சிவாசார்யர் (appointed) ஒருவர் பூசைப்பணி புரிந்து வருகிறுர். சென்ற தலை முறையோடு சிவாசார்யர் பரம்பரை முட்டுற்றுப் போனதாக வும் அதனுல் இவ்வாறு நியமிக்க வேண்டிய நிலை ஏற்பட்டதாக வும் தெரிகிறது. இரு பரிசாரகர்கள், குருக்களுக்கு உதவி புரி கின்றனர்.

தினமும் நான்கு நேரப் பூசை நடைபெறுகிறது. வழக் கம் போலவே இவை காலைசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தஜாமம் என அழைக்கப்படுகின்றன.

கல்வெட்டுகள் விக்கிரமசோழன் சந்தி என்ற நித்திய சந் தியைக் குறிப்பிடுகின்றன.[5] இது எந்நேரச் சந்தியெனத் தெரி யவில்லை.

உஷாபூஜையில் நடைபெறும் நைவேத்தியம் பற்றி முதல் ராஜேந்திரனின் கல்வெட்டொன்று கூறுகிறது.[6] இதற்காகத் தனியே நிலம் விடப்பட்டிருந்தது. "திருப்பள்ளி யெழுச்சி" என்ற தொடர் ஹொய்சள வீரராமநாதன் கல்வெட் டில் காணப்படுகிறது.[7] உஷாபூஜையில் பால் படைக்கப் பட்டதென்பது முதல் ராஜேந்திரனின் ஒரு கல்வெட்டால் தெரிகிறது.[8] இப்போது உஷாபூஜை தனியாக நடைபெறு வதில்லை. அபிஷேக நைவேத்தியங்கள் காலைசந்தியில்தான் நடைபெறுகின்றன. (உஷாபூஜையை வைத்து ஆகமத்தை முடிவு செய்யமுடியாது என்று கூறப்படுகிறது)

கணேசம் மூலபேரஞ்சைவ தாண்டவஞ்ச உமாபதிம்
பஸ்சாது அம்பிகாஞ்சைவ பரிவாரம் ப்ரபூஜயேத்

என்ற விதிப்படி அழகிய பிள்ளையார், மூலஸ்தான இறைவர், நடராஜர், அர்த்தநாரி, தேவி, பின்னர் பரிவாரதேவதைகள் என்ற முறைப்படி பூஜை நடைபெறுகிறது.

விடங்கர் பூசை

நித்ய பூசையில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியது காலை 9-00 மணிக்கு நடைபெறும் "விடங்கர் பூசை"யாகும். காலை சந்தியின் இறுதிக் கட்டமாக இது விளங்குகிறது.

உற்சவ விக்ரக சன்னிதியிலுள்ள தனியறையொன்றில் மூன்று படிக லிங்கங்களும் கரிய மரலிங்கம் ஒன்றும் பாது காப்பாகப் பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டு, அந்தப் பெட்டி இன்னொரு பெரிய பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டுள்ளது. ஸ்தானிகரிடமிருந்து அவரால் நியமிக்கப்பட்டுள்ள மெய்கா வல் திறவு கோல்களை வாங்கிவந்து திறக்கிறார். மூலஸ்தான இறைவர்க்குரிய அபிஷேக நைவேத்யங்களை முடித்தவுடன் குருக்கள் உற்சவ விக்ரக அறைக்கு வந்து, பெட்டியுடன் இந்த லிங்கங்களை எடுத்து அருகிலுள்ள மேடைமேல் வைக்கிறார். லிங்கங்களை ஒவ்வொன்றாக எடுத்து, சுற்றிக் கட்டப்பட்டுள்ள வஸ்திரத்தை அவிழ்த்து, அபிஷேகம் மாலை சூட்டல் முதலியன செய்து முடிக்கிறார். நீறுபூசுதல் சந்தனம் வைத்தலும் நடைபெறுகின்றன. பரிசாரகர் நைவேத்தியத் தட்டுடன் வர நைவேத்யம் முடித்து மீண்டும் பழைய முறைப்படி வஸ்திரங் களைச் சுற்றி லிங்கங்களைப் பெட்டியில் எடுத்து வைக்கிறார்.

இதன்பின் மற்ற தெய்வங்களுக்கு நைவேத்யம் தொடர் கிறது. இந்தப் பூசை விடங்கர் பூசை என்று அழைக்கப்படக் காரணம் இந்த லிங்கங்கள் கல்லினால் செய்யப்படாது-உளி யின் தொடர்பின்றி-படிகத்தாலும், மரத்தாலும் அமைந்தவை என்ற காரணத்தினால் ஆகலாம். அல்லது மனிதனது கைக் கருவிகளினால் அமைக்கப்படாது சுயம்புவாக அமைந்தவை என்ற கருத்தினாலும் இவை விடங்கர் என்று அழைக்கப்பட் டிருக்கலாம்.[9]

விடங்கர் பூசையைக் குருக்கள் தனியாக இருந்தே மேற் கொள்கிறார். அடியார்கள் தரிசிப்பதற்குத் தடையேதுமில்லை யாயினும் உற்சவ விக்ரக சன்னிதிக்குள் கூடி நின்று தரிசிக்க வசதியில்லையென்பதாலும் மிகச்சிறிய லிங்கங்கள் என்பதால்

அவ்வாறு தரிசிப்பதற் குரியவையாக இல்லாததாலும் இவ் வாறு தனியாகப் பூசை மேற்கொள்ளப்படுகிறது.

இதன்பின் காலைசந்தி முடிவடைகிறது. நண்பகல் பன்னிரண்டு மணிக்கு நடைபெறும் பூசை உச்சிகாலம் எனப் படுகிறது. உச்சம்போது அமுது செய்தருளிய சோற்றைச் சிவ யோகிகளுக்கும் தபஸ்விகளுக்கும் அருந்துவித்த செய்தியை முதல் ராஜேந்திரன் கல்வெட்டிலிருந்து அறிய முடிகிறது. 10 இப்போது உச்சிகால பூசையில் குறிப்பிடத்தக்க அம்சம் ஏது மில்லை. பூசை முடிவடைந்ததும் கோயில் சாத்தப்படுகிறது. கோயில் கதவையடைக்கத் தாமதம் நேரிடுமென்று தெரிந் தால் பூசையும் நேரங்கழித்தே செய்யப்படுகிறது. பிரமுகர்கள் வருகை போன்ற காரணங்களால் இவ்வாறு நேர்வதுண்டு. பூசை முடிந்ததும் கோயிலைச் சிறிதும் தாமதமின்றிச் சாத்தி விடுகின்றனர்.

பிற்பகல் நான்கு மணிக்குக் கோயில் மீண்டும் திறக்கப் படுகிறது. சாயரட்சை, எளிமையாக நடைபெறுகிறது. மாலைநேரத்தில் ஸ்தானிகர், நெற்றிப்பட்டம் யக்ஞோபவீதம் எடுத்துக் கொடுக்கிறார். இரவு பூசையில் இவை இறைவர்க் குச் சூட்டப்படுகின்றன.

அபிஷேகம்

மூன்று நேரங்களில் நடைபெறும் திருமஞ்சனம் பற்றி முதல் ராஜேந்திரனின் ஒரு கல்வெட்டில் காணமுடிகிறது. 11

'நிச்சல்படி ஆடியருளும் பால் நானாழி' என்று இவ னது ஆட்சிக் காலத்துக் கல்வெட்டு வேறொன்று அறிவிக் கிறது. 12

விக்கிரம சோழன் ஆட்சியின்போது இறைவரின் திரு மஞ்சனத்துக்குக் காவிரியிலிருந்து தண்ணீர் எடுத்து வருவ தற்கு நால்வர் நியமிக்கப்பட்டனர். 13

சோழராட்சியின் இறுதியில் தமிழகத்தில் பெருமளவு ஆதிக்கஞ் செலுத்திய ஹொய்சளர், காவேரித் திருமஞ்சன

நீர் கொண்டு வருவதற்காகப் பலரை நியமித்தனர். ஹொய் சள அதிகாரிகள் பலர், இவ்வாறு நியமிக்கப்பட்ட ஆண்டார் களுக்கு நிவந்தம் அளித்துள்ளனர். ஹொய்சளரது மேலாதிக் கத்துக்குக் கட்டுப்பட்ட மூன்றும் ராஜராஜன் முதலாகச் சில பாண்டிய அரசர்களின் ஆட்சியாண்டுக் குறிப்பு களுடன் தனிப்பட்டோர் நிவந்தமாகவும் இதற்கு நியமனங்கள் நடந் துள்ளன.[14] இதனைக் கணக்கிட்டுப் பார்த்தால் 26 கல்வெட்டு களில் இச்செய்தி குறிப்பிடப்படக் காணலாம்.

இரண்டு குடம் திருமஞ்சனம் என்பது இரு தூணிப் பதக்கு என்ற விளக்கம் ஒரு கல்வெட்டால் தெரிகிறது.[15]

காவிரியாறு இவ்வூரிலிருந்து நான்கு கி.மீ. தொலைவில் உள்ளது. கொள்ளிடத்தைக் குறுக்கே கடந்து செல்ல வேண்டும். குறுக்கு வழியில் இதற்கென்று ஒரு பாதை அமைக்கப்பட்டதாகக் கருத இடமுண்டு. திருமஞ்சனப் பெரு வழி என்ற பாதை கண்டராதித்தத்திலுள்ள ஹொய்சள வீரராமநாதனின் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.[16] அதுவே திருமழபாடி இறைவர்க்குரிய திருமஞ்சனநீர்கொண்டு வருவதற்காக அமைக்கப்பட்ட பாதையாக இருக்கவேண்டும். ‘திருமஞ்சன வெட்டி’ என்றழைக்கப்படும் பாதை யொன்று ஊருக்கருகில் இப்போதும் இருப்பதாகத் தெரிகிறது.

முதல் திருச்சுற்றில் கருவறையின் பின்னால் உள்ள கிணற்றிலிருந்து அபிஷேகத்திற்குரிய நீர் எடுத்துக் கொள்வது இந்நாளைய வழக்கமாக இருக்கிறது.

திருமாலை

‘நிச்சற்படி சாத்தியருளும் தும்பைப்பூத் திருப்பள்ளித் தாமம் இருநாழி’ என்று, பாலபிஷேகத்தைக் குறிப்பிடும் கல் வெட்டே தெரிவிக்கிறது. தும்பைப்பூ சிவனுக்குகந்தது என் பது, கஞ்சனூர்ப் பதிகத்தில் அப்பர் பாடியுள்ள ஒரு பாடலில் சொல்லப்படுகிறது.[16] இப்பூ காசித் தும்பை (Cucas Linifolia) என வழங்கும் மலராகும்.

இப்போது நந்தியாவட்டை போன்ற வெண்ணிற மலர் கள் சூட்டப்படுகின்றன. விடங்கர்க்கு மஞ்சள்நிறச் சிவந்தி சூட்டப்படுகிறது.

தீபங்கள்

மூலவர்க்கு மட்டுமே தனியாகக் குத்து விளக்கு எரிக்கப் படுகிறது. முக மண்டபத்தில் விளக்கு சிவை (பாவை, விளக்கு) ஒன்றும் உள்ளது. இவற்றிலும் நந்தா விளக் கென்று குறிப்பிடத்தக்கது ஏதுமில்லே. பிற தெய்வங்களுக்கு அகல் விளக்கு எரிக்கப்படுகிறது. விளக்குகளுக்காகத் தின மும் ஒரு லிட்டர் இலுப்பை எண்ணெய் பயன்படுத்தப்படு கிறது.

கோயிலுக்கு உரிய இலுப்பைக் கொட்டைகளே வாணி யச் செட்டியார் சேகரித்துச் சென்று, ஒரு கலம் கொட்டை களுக்கு எட்டு லிட்டர் எண்ணெய் கொடுப்பாராம். இதற்குக் கூலியாகப் பிண்ணுக்கை எடுத்துக் கொள்கிருர்.

கல்வெட்டுகளில் பல நந்தா விளக்குகள் கூறப்பட்டுள் ளன. பகலில் மட்டும் எரியும் விளக்குகளும் கொடுக்கப்பட் டுள்ளன. இவை பகல் விளக்கு, (S.I.I. V 656, 657) பகல் நொந்தா விளக்கு (A.R.E. 10/1920) என்று கூறப்பட்டன. நந்தாவிளக்குக்குத் தொண் ணூறு ஆடுகளும் பகல் விளக்குக்கு நாற்பத்தைந்து ஆடுகளும் கொடுக்கப்பட்டன. தெய்வத் திருப்பணிக்குப் பயன்படும் இந்த ஆடுகளின் வம்சாவளி தடையின்றித் தொடர வேண்டுமென்பதற்காகப் பொலிதகர் கிடா ஒன்றும் இவற்றுடன் கொடுக்கப்பட்டது. இந்த ஆடு வித்துகிடா, விச்சுகிடா என்றும் அழைக்கப்பட்டது.

சில தெய்வங்களுக்குத் தனித்தனியாக நந்தா விளக்கு கள் எரிக்கப்பட்டுள்ளன. அழகிய பிள்ளையார்-சுந்தர விநாய கர்-(24/1920) வைத்தியனதைப் பெருமாள்-ஜுரேஸ்வரர்-(27/ 1920) ஆகியோர்க்கு எரிக்கப்பட்ட நந்தா விளக்குகள் பற்றிய குறிப்புகள் உள்ளன.

திருமேனி பொன்னுர்மேனியார்க்கு நாள்தோறும் விளக்குக்காக ஒரு நாழி நெல் கொடுக்கப்பட்டுள்ளது (S.I I. V 644). இது நந்தா விளக்காகவே இருக்கவேண்டும் என்ப தனை நெல்லின் அளவைக்கொண்டே அறியலாம்.

சோழர் காலத்தின் இறுதி வரை நந்தா விளக்குகளும் அவற்றுக்காக ஆடுகளும், சில நேரங்களில் பணமும் கொடுக் கப்பட்டுள்ளன. தீபவிளக்கத்தின் உருவகமாக மட்டுமின்றிக் கோயிலுக்குள் நிலவக்கூடிய இருளைப்போக்கவும் இந்த நந்தா விளக்குகள் பயன்பட்டன. இப்போது கருவறை தவிரக் கோயிலின் பெரும் பகுதி மின்சாரத் தொடர்பு பெற்றுவிட்ட தால் மின் விளக்குகள் இப்பணியை ஆற்றுகின்றன.

நைவேத்தியம்

கல்வெட்டுகளில் இறைவர்களுக்குத் தனித் தனியாகத் திருவமுது செய்வதற்காக நிலங்கள் கொடுக்கப்பட்ட செய்தி கள் கிடைக்கின்றன.

ஆளுடைய பிள்ளையார்க்கு நாள்தோறும் திருவமுது செய்தருளும் சோற்றில் ஸ்ரீமாஹேஸ்வரர்க்குச் சட்டிப் பிரசா தம் அளிக்கும் செய்தி,[17]

விக்கிரமசோழன்சந்தியில் அழகியபிள்ளையார்க்கு அமுது செய்தருளும் மாவலி நாழி பற்றிய குறிப்பு,[18]

இதே அழகியபிள்ளையார்க்குக் கி. பி. 1433-இல் நாள் தோறும் திருப்பண்ணியாரம் அமுது செய்யப் பண்ணியது (44/1920),

நந்திகேஸ்வர தேவர்க்குத் திருவமுதுக்கு நாள் ஒன்று க்கு ஊர்க்காலால் நெல் தூணிப்பதக்கு அளிக்கப்பட்ட செய்தி (S. I. I. V. 642),

திருமேனி பொன்னூர் மேனியார்க்கு நாள் ஒன்றுக்குத் திருவமுதுக்கு,அரிசி குறுணிநானாழி கிடைக்கும் வகையில் நெல் முக்குறுணி அறுநாழி, கறியமுதுக்கு நெல் மூந்நாழி, நெய்

யமுது ஒரு நாழி, தயிரமுது நாழி உரிக்கு நெல் முந்நாழி, அடைக்காயமுதுக்கு வறுங்காய் ஆறும் வெற்றிலை பன்னிரண்டுக்குமாக நெல் நாழி, திருவமுது போனகப்பானை ஒன்றுக்கும் கறியமுது சட்டி ஒன்றுக்கும் நெல் குறுணி என்ற கணக்கில் அளிக்கப்பட்ட விவரங்கள், (do–644)

இந்தப் பொன்னார்மேனியார்க்குக் கி. பி. 1740-இல் அரியலூர் மழவராயர், காலசந்தி, அர்த்தஜாம பூஜைகளில் நைவேத்யம் படைப்பதற்காக நிலமளித்தது,[19]

ஜயங்கொண்ட சோழ விடங்கர், இவர் நம்பிராட்டியார், மகாவிஷ்ணு, இவர் நம்பிராட்டியார், பிரம்மா ஆகியோர்க்குத் திருச் செங்கல நடைக்கு நித்தம் கலம் நெல் படைத்து வந்தது,[20] திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையதேவர், நம்பி ஆரூரனார்க்குத் திருவமுதுக்காக நெல் அளித்தது, (37/1920)

இவை தவிரப் புவனவதி நாச்சியாருக்குத் திருப்படி மாற்றுக்கு நிலமளித்த செய்தி, (38/1920).

பிக்ஷாடன தேவர்க்குத் திருநாமத்துக் காணியாக நிலமளித்தது (82/1920) முதலிய செய்திகளும் உள்ளன.

திருமழுவாடி உடையார்க்கு வெற்றிலை அடைக்காயமுது அளித்த செய்தி பரகேசரிவர்மனின் கல்வெட்டில் (1/1920) காணப்படுகிறது. இது ஷோடச உபசாரங்களுள் ஒன்று.

இப்போது தினமும் மடைப்பள்ளியில் 14.5 படி அரிசி சமைக்கப்படுகிறது. இதில் ஒரு பகுதி நைவேத்யமாகப் படைக்கப்படுகிறது. ஒரு படி அரிசிக்கு நான்கு பட்டை சாதம் என்ற கணக்கில் பணியாளர்களுக்கு வினியோகிக்கப் படுகிறது.

ஸ்ரீபலி.

அஸ்திர (சூல)தேவரை எழுந்தருள்வித்துப் பரிவார தேவதைகளுக்கு உணவு படைக்கும் ஸ்ரீபலி வழக்கிலிருந்த

தென்பதற்கு ராஜகேசரிவர்மனின் கல்வெட்டும் (S.I.I. XIII 145) பரகேசரிவர்மனின் கல்வெட்டும் (7/1920) சான்றுகளாகும்.

கி.பி. 1492-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று "திருமழபாடி உடையார் நயினர் திருக்கோயிலுக்கு முன் எழுந்தருளியிருந்து மக பூசை கொண்டு . . . நின்ற ஒரு படி நாயன்மார்" பற்றிக் குறிப்பிடுகிறது. இங்கு மக பூசை என்பது ஸ்ரீபலியையே குறிப்பதாகத் தோன்றுகிறது. ஒரு படி நாயன்மார் என்ற தொடர் நித்யப்படித்தரத்தில் ஸ்ரீபலி என்ற ஒரு அங்கத்தில் மட்டும் பங்கேற்கும் நாயன்மார் என்று பொருள் படலாம்.[21]

இப்போது, மூலவர்க்கு நைவேத்யம் முடிவடைந்ததும் சுற்றிலும் உள்ள தெய்வங்களுக்கெல்லாம் - கோஷ்ட தெய்வம் உட்பட - மணியடித்து நைவேத்தியத் தட்டைத் திறந்து காட்டிச் செல்கின்றனர். சண்டிகேசுவரரோடு ஸ்ரீபலி முடிவடைகிறது. "சௌராதி சண்டபர்யந்தம்" (சூரியன் முதல் சண்டிகேசுவரர் வரை) என்பது வழக்கமான ஒரு தொடராகும்.

மாலைசந்தியின்போது கோயிலின் பின்புறமுள்ள, ஆகாச ஐயனர் என வழங்கும் மாடத்திற்கு உணவு படைத்து வருகின்றனர்.

நைமித்திகம்

நைமித்திக உத்ஸவத்தில் இருவகைகள் உள்ளன. ஒன்று, குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் நித்ய கர்மங்களுக்குத் தூய்மைக்கேடு நேரிடுவதைத் தடுப்பதற்காக நடைபெறும் வாஸ்துசாந்தி போன்றவை. இரண்டாவது வகை, வார, மாத உத்ஸவங்களும் திருவிழாக்களும்.

தினமும் மாலையில் கோயிலுக்குப் பின்னுலுள்ள ஆகாச ஐயனர்க்கு (ஐயனரைப் பிரதிநிதித்துவப்படுத்தும் மாடத்துக்கு) நைவேத்யம் படைப்பது நித்யோத்ஸவத்தின் ஓர் அங்கமாகும். இதற்கு மடவிளாகம் வழியாகச் செல்லவேண்டியிருக்கும். மடவிளாகத்தில் சாவு ஏதாகிலும் நேர்ந்துவிட்டால்

விரைவிலேயே பிணத்தை எடுப்பதற்கு வகை செய்துவிட்டுக் கோயிலில் வாஸ்துசாந்தி செய்வர். மாத உத்ஸவங்கள் நடைபெறும் நாள்களில் சுவாமி பவனி வரும் தெருக்களில் சாவு ஏதாகிலும் நேர்ந்தாலும் கோயிலில் வாஸ்துசாந்தி நடைபெறும்.

செவ்வாய்க் கிழமையும் வெள்ளிக் கிழமையும் கோயிலில் வார உத்ஸவ நாள்கள். அன்று விசேட அர்ச்சனை நடைபெறுகிறது. பிரதோஷம், அமாவாசை, கார்த்திகை நாள் ஆகியவற்றின்போது மாத உத்ஸவம் நடைபெறும். அன்று கொள்ளிடத்தில் தீர்த்தவாரி நிகழும்.

தொடக்க காலக் கல்வெட்டுகளில் திருவாதிரை நாளன்று இறைவர்க்கு இருநாழி அரிசி திருவமுது படைத்து ஐந்து பேர்களை உண்பித்த செய்தி கிடைக்கிறது. (12/1920)

திருவாதிரை நட்சத்திரம் ராஜேந்திர சோழனின் ஜென்ம நட்சத்திரமாகையால் மாதந்தோறும் இறைவனது திருமேனியை எழுந்தருளச் செய்து திருவிழா நடத்தவும் பெருந்திருவமுது படைக்கவும் ராஜாதிராஜனின் 26-ஆம் ஆண்டில் கண்டராதித்தச் சதுர்வேதிமங்கலத்து மகாசபையினர் ஏற்பாடு செய்திருக்கின்றனர்.[22] (S.I.I. V 633)

மாசி சஷ்டி, ஆனி அஷ்டமித் திருநாள்களில் கோயிலில் சிவயோகிகளுக்கும் மாஹேஸ்வரர்க்கும் உணவளிக்கச் செய்யப்பட்ட ஏற்பாட்டினை முதல் ராஜேந்திரனின் ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. (73/1920)

இப்போது கோயிலில் மாசி மகம் பிரம்மோத்ஸவமாகக் கொண்டாடப்படுகிறது.

"திருமாசித் திருநாளைக்கும் திருவாநித் திருநாளைக்கும் ஆளுடையபிள்ளையார் எழுந்தருளும் திருநாளைக்கு" திருப்பண்ணியாரம் (பணியாரம்) படைக்கும் வழக்கம் மூன்றும் ராஜராஜனின் மூன்றும் ஆட்சியாண்டில் ஏற்பட்டது. இச்செய்தியைக் கூறும் கல்வெட்டு (76/1920) இத்திருநாள்களை

விளக்கமாகக் குறிப்பிடாவிட்டாலும் இவை மாசி சஷ்டி, ஆனி அஷ்டமி நாள்களாகவே இருக்கவேண்டுமென்று ஊகிக்க முடி கிறது.

"உடையார்க்கு ஸ்ரீகாவேரியிலே தீர்த்தம் பிரஸாதிக்க தேவர்கள் பெருமாள் திருத்தோப்பாகச் செய்ய" என்று மூன் ரும் ராஜராஜனின் நான்காம் ஆண்டுக் கல்வெட்டு (79/1920) கூறுவதால் இறைவர் காவிரியாற்றில் எழுந்தருளி அத்தீர்த்தத் தினைப் புனிதப்படுத்தும் தீர்த்தவாரி விழா நடைபெற்றுள்ள தென்பதும் அப்போது கோயிலைச் சேர்ந்த திருத்தோப்பாக ஒரு நிலத்தை உருவாக்குவதற்காகக் கோயில் அதிகாரிகள், சம் பந்தப்பட்ட அரச அதிகாரியைக் கேட்டிருக்கிறார்கள் என்ப தும் விளங்குகின்றன. இக்கல்வெட்டில் சிங்கநாயற்று அஷ்ட மித் திதி குறிப்பிடப்படுவதால் ஆவணி அஷ்டமியில் நடை பெற்றிருக்கிறது மேற்குறித்த தீர்த்தவாரி என்று தெரிகிறது. மாதந்தோறும் காவிரித்தீர்த்தவாரி நிகழும் வழக்கமுமிருந் திருக்கவேண்டும்.[23]

கோச்சடையன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு ஒன்று, (S.I.I. V 628) "திருத் தைப் பூசத்திருப்பாவாடை"க்கு இறைவர் காவேரியாற்றில் எழுந்தருளும் வழக்கமிருந்ததைக் கூறுகிறது. இதற்காகக்'காவேரியாற்றில் திருமண்டபமும் கட் டித் திருக்காவணமும் இட்டு, அமுதுபடி சாத்துப்படி வெஞ்ச னம் உள்ளிட்ட பல வற்கத்துக்கும் வேண்டும் பணத்துக்கும் நெல்லுக்கும் இறையிலியாக' விறைநாட்டு நாட்டார் நிலம் கொடுத்திருக்கிறார்கள்.

விறைநாடு என்பது பொய்கை நாட்டுக்கு உட்பட்ட தென்பதும் காவிரியாற்றை ஒட்டியிருந்ததென்பதும் அறிய முடிகிறதாயினும் இந்த மண்டபத்தையும் காவனத்தையும் அடையாளங்காண இயலவில்லை. இப்போது மாதாந்தர தீர்த்தவாரி கோயிலுக்கெதிரிலுள்ள கொள்ளிட ஆற்றிலேயே நடைபெறுகிறது. சோமாஸ்கந்தரை எழுந்தருள்வித்து அஸ்திரதேவரை நீராட்டித் திரும்புகின்றனர்.

அமாவாசை நாள்களிலும் கார்த்திகை தினத்தன்றும் மாதத் தீர்த்த வாரி நடைபெறுகிறது.

மாத விசேட நாள்களில் இறைவர் வடக்கு வீதி, மேலே வீதி வழியாகப் பவனி வருகிறார். தைப்பூசத்தன்று மட்டும் மடவிளாகத்தின் வழியாக வருகிறார்.

வைகாசி விசாகத்தில் தான், இறைவன் மழு ஏந்தி மார்க்கண்டேயனுக்கு நடன தரிசனம் கொடுத்ததாகத் தல புராணம் கூறுகிறது. இந்த தினத் தன்று ஆண்டு தோறும் நவக்கிரக பூஜை நடைபெறுகிறது. சன்னிதி முகமண்டபத் தரையிலுள்ள மூன்று குழிகளில் எள்துணிப் பொட்டலத்தில் எண்ணெய் ஊற்றி எரிக்கப்படுகிறது. மார்க்கண்டேயன் போல் ஆயுள் நீடிக்கச் செய்வதற்காகவே இப்பூஜை என்று தோன்றுகிறது. இவற்றில் முன்பு குங்கிலியம் எரிக்கப் பட்டிருக்கலாம்

பிரம்மோற்சவம்

கொடியேற்றத்துடன் தொடங்கி தேரோட்டம், தீர்த்த வாரியுடன் முடியும் பிரம்மோற்சவம் மாசி மாதம் அஸ்வதி நாளில் தொடங்குகிறது. தொடங்குவதற்கு முதல்நாள் மாலை யில் அனுக்ஞை, விக்னேஸ்வரபூஜை, வாஸ்துசாந்தி - இவை நடைபெறுகின்றன.

இதன் செலவு கோயிலால் ஏற்கப்படுகிறது. அடுத்த நாள் கொடியேற்றத்திலிருந்து பன்னிரண்டாம் நாள் வரை தனிப் பட்டோரே மண்டகப்படி தாரர்களாக இருக்கின்றனர்.

1. பகலில் கொடியேற்றம் - இரவு, மஞ்சத்தில் திருவுலாக் காட்சி.
2. ஆதிசேஷ வாகனத்தில் இறைவர் எழுந்தருள்தல்
3. பூத வாகனம்
4. கைலாச வாகனம்
5. ரிஷப வாகனம்
6. யானை வாகனம்

7. திருக்கல்யாணம்

8. குதிரை வாகனம்

என்ற முறையில் எட்டு நாள்கள் நிகழ்ச்சிகள் நடந்தேறு கின்றன. ஒன்பதாம் நாள் காலை, தேரில் இறைவர் ஏற்றப் படுகிறார். மாலையில் தேர் வடம்பிடித்தல் நிகழ்ச்சி. தேர் நிலைக்கு வந்ததும் பிராயச்சித்த அபிஷேகம் நடைபெறுகிறது.

பத்தாம் நாள் (பூரம்)தீர்த்த வாரி

பதினொன்றாம் நாள் விடயாத்தி (விடாயாற்றி)

பன்னிரண்டாம் நாள் மொத்தத் திருவிழாவுக்கும் சேர்த்து பிராயச்சித்தம் நடைபெறுகிறது.

கடந்த மூன்று ஆண்டுகளாகத் தேரோட்டம் நடை பெறவில்லை. தேர் இழுப்பதற்குரிய ஆள்பலம் போதாததால் திருவிழாவே நின்று போயிற்று.[24]

நந்திகேஸ்வரர் திருமணம்

பங்குனி புனர்பூச நாளன்று இவ்விழா நடைபெறு கிறது. இவ்விழாவில் திருவையாற்று இறைவராகிய ஐயாறப் பரே முதன்மையான பங்கு வகிக்கிறார். திருவையாற்றிலுள்ள அந்தணக் குறிச்சியில் தான் முளைப்பாலிகை எடுப்பார்களாம். இத் திருமணம் நடைபெறும் இடம் என்பதைத் தவிர மழபாடிக்கு முக்கியத்துவம் இல்லை. சிலாத மகரிஷி மகனும் சிவனது சாயுஜ்ய பதவியை யடுத்த சாரூப பதவி (சிவனது முழு வடிவம்) பெற்றவருமான நந்திதேவர், வசிஷ்டர் மகளா கிய ஷர்மிளை எனப்படும் சுயசாம்பிகையைத் திருமணம் செய்துகொள்ளும் சடங்காகும் இது.

திருமழபாடி பெண் விடாகக் கருதப்பட்டிருக்க வேண் டும் என்ற முடிவுக்கு நாம் வர முடிகிறது. கோயிலின் மூன்றாம் திருச்சுற்றில் உள்ள சுந்தராம்பாள் சன்னிதியி லுள்ள துண்டுக் கல்வெட்டுகள் சிலவற்றில் “பிடாகை வதிட் டாச்சிராமம்” என்ற தொடர் காணப்படுகிறது. வசிட்டரு டைய ஆசிரமமாகக் குறிப்பிடப்பட்ட ஒரு பகுதி அருகிலிருந் திருக்க வேண்டும் என்பது இதனால் தெரிகிறது. எனவே நந்தி

கேஸ்வரர் திருமண வைபவம் சோழர் காலத்திலேயே இங்கு நடைபெறத் தொடங்கியிருக்கலாம்.

வேறுசில குறிப்புகள்

1. தேவதாசி முறை அமுலிலிருந்தபோது மார்கழித் திருவாதிரையன்று திருவூடல் என்ற நிகழ்ச்சி கோயிலில் நிகழ்ந்து வந்ததாகக் கூறப்படுகிறது.

திருவீதி வலம்வந்து கோயிலுக்குள் செல்லும்போது அம்பிகையை மட்டும் கோயிலுக்குள் எழுந்தருளச் செய்து இறைவரை வெளியிலேயே நிறுத்தி விடுவார்கள். உலாப் போகையிலே பெண்கள் இவர்பால் மோகிக்கக் கண்டு தேவி ஊடல் கொண்டதாகக் கருத்து. பின்னர் சுந்தரர் எழுந்தருள் விக்கப்படுவார். கோயில் ஓதுவார் சுந்தரரின் ஸ்தானத்தில் நின்று நடிப்பாரென்றும் தேவதாசியர், தேவியின் தோழியரைப் பிரதிநிதித்வம் செய்து நடிப்பாரென்றும் கூறப்படுகிறது. இவ்வூர் அப்பர் அருள்நெறி மன்றத்தினரால் பதிப்பிக்கப்பட்டுள்ள "திருவூடல்" நூலுள் இச்செய்திகள்-சிறிது மாற்றத்துடன்-குறிப்பிடப்பட்டுள்ளன.

2. 1944-ஆம் ஆண்டு, தேவஸ்தான வெளியீடாகப் பதிப்பிக்கப்பட்டுள்ள திருமழபாடிக்கோயில் வரலாறு என்ற சிறு நூல் (ஆசிரியர்-திரு. பஞ்சநதம் பிள்ளை) "சுமார் இரண்டாண்டு காலமாக மாதந்தோறும் பௌர்ணமி நாளிலும் கோயிலுக்கு வெளியிலுள்ள கல்யாண மண்டபத்தில் சமயச் சொற்பொழிவுகளும் தேவார பாராயணமும் நடைபெறுவதாக"க் குறிப்பிட்டுள்ளது.

3. 1969-ஆம் ஆண்டு முதல், வாரந்தோறும் வெள்ளிக்கிழமையன்று கோயிலின் உள்ளிருக்கும் நூற்றுக்கால் மண்டபத்தில் குடந்தை இசைப்புலவர் திரு. ப. சுந்தரேசனார் அவர்கள் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் போன்றவற்றைச் சொற்பொழிவில் விவரித்து வருகிறார். இப்பணி அப்பர் அருள்நெறி மன்றத்தின் முயற்சி. இம்மன்றம் தெய்வீகப் பேரவையோடு இணைந்திருந்தது.

காம்யம்

தனிப்பட்டோர் விருப்பத்தின் காரணமாகவும், பக்தி மேலீட்டாலும், நேர்ச்சையாகவும் ஏற்படுத்தும் பூசைகள், செய்யும் திருப்பணிகள் இதனிலடங்கும்.

அரசனின் உடல் நலத்துக்காகச் செய்யப்பட்ட விசேட ஏற்பாடுகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஹொய் சள வீரராமநாதனின் "திருமேனிக்கு நன்ருக" இறைவரின் திருப்பள்ளி எழுச்சிக்கு நிலம் கொடுக்கப்பட்டது. (59/1920) கோமாறவர்மன் குலசேகர பாண்டியனின் நலனுக்காக அவ னது இரண்டாம் ஆட்சியாண்டு ஐப்பசி மாதம் முதல் (கி.பி. 1270) கோயிலில் நடைபெறும் திருப்பணிகளுக்கு உடலாக (திருப்பணிகள் முடிவுறும்வரை பயன்படுத்திக் கொள்ள) நிலம் கொடுக்கப்பட்டது. (103/1920)

கோயிலில் இப்போது நைமித்திக உற்சவமாக நடை பெறும் தனுர்மாதத் திருப்பள்ளியெழுச்சிக்குரிய (மண்டகப் படி எனப்படும்) செலவுகள் எல்லாம் தனிப்பட்டோர் உபய மாகவே நடைபெறுகின்றன. எண்ணெய்க்காப்பு, பூமாலை முதலிய அலங்காரங்களும் விசேட நைவேத்தியமும் இதில் உட்பட்டவை.

கோயிலில் நவக்கிரகம் இல்லை. முகமண்டபத்தில் தரையில் மூன்று குழிகள் உள்ளன. நவக்கிரக அர்ச்சனை புரிய வருபவர்கள் எள்ளைத் துணியில் இட்டுப் பொட்டலமாகக் கட்டிக் கொடுக்கிருர்கள். அது இக்குழிகளில் போடப்பட்டு எண்ணெய் ஊற்றி எரிக்கப்படுகிறது. நவக்கிரக அஷ்டோத் திரம் சிவனுக்கே சொல்லப்படுகிறது. சனி பகவானுக்குக் கொடுக்கவேண்டிய கறுப்பு வஸ்திரம் பக்தர்களால் கொடுக் கப்பட்டாலும் அது சிவனுக்கே சாத்தப்படும். (பொது வாகச் சிவனுக்குக் கறுப்புத்துணி சாத்துவதில்லை).

நந்திகேஸ்வரர் திருமணம் நடைபெறுகின்ற தலமாத லால் கோயிலில் பக்தர்களின் குடும்பத் திருமணங்கள் நடை பெறுவது வழக்கமாக உள்ளது.

ஊரில் சாவு காரியங்கள் நேர்ந்தால் பிணத்தைச் சுடு காட்டில் எரித்துவிட்டு அஸ்தியைக் கோயிலுக் கெதிரில் உள்ள சிவகங்கையில் கரைக்கிறார்கள். படித்துறை அள வுக்குத் தண்ணீர் நெருங்கி வராதபோது சிவகங்கையில் கரைப்பதாகப் பாவித்து, சற்றுத் தொலைவில் ஓடும் நீரில் கரைக்கின்றனர். சிவகங்கைத் தீர்த்தத்தின் மகிமையைப் பேசும்போது, பஞ்சமாபாதகம் புரிந்த சுசேனன் என்பவ னது எலும்பு இந்தத் தீர்த்தத்தில் விழுந்ததனால் அவன் சிவ னது சாரூபம் பெற்று உய்ந்ததாகத் தலபுராணம் கூறு கிறது. எனவே அப்போதே இந்த வழக்கம் நிலவி வந்திருக் கும் எனலாம்.

---

1 A. R. E. 12/1920

2 S. I. I. V. 651

3 A. R. E. 19/1920

4 -do- 91/1920

5 -do- 24/1920—இக்குறிப்பு இடம்பெறவில்லை.

6 -do- 61/1920

7 -do- 59/1920

8 -do- 68/1920

9 விடங்கன் என்ற சொல் விடலை என்ற சொல்லோடு தொடர் புடையது. காமப் பார்வையாலும் ஜாடையான பேச்சாலும் பெண்களை மயக்கித்திரிந்த பிக்ஷாடனர் விடங்கர் என்று அழைக் கப்பட்டார். (வீதிகள் தோறும் தலைக்கையேந்தி-விடங்கராகித் திரிவதென்னே-சுந்தரர்.) வட்டணைகள் படநடந்து மாயம்பேசிப் பெண்டிரின் நிறையழித்து உலாவந்த பிக்ஷாடனக் கோலம் இவ் வாறு விடங்கர் என்று அழைக்கப்பட்ட நிலைமாறி, உலா வருகின்ற தெய்வத் திருக்கோலங்க ளெல்லாம் விடங்கர் என்ற ழைக்கப்படும் நிலை தேவாரக்காலத்திலேயே உருவாகி விட்டது. உலாப்போகும் தெய்வ உருவங்கள், உலோகத்தால் வார்த்துச் செய்யப்பட்டனவாதலால் டங்கத்தின் (உளியின்) தொடர்பற்ற வர் என்று பொருள் காண்பது எளிதாயிற்று. பின்னாள்களில் கைபுனைந்தியற்றாத தெய்விக உருவங்களும் சுயம்பு என்ற கருத் தில் விடங்கர் என்று அழைக்கப்பட்டன.

10 A. R. E. 75/1920

11 -do- 70/1920

12 S. I. I. V. 638

13 -do- 642

14 ஹொய்சள வீர சோமேஸ்வரன்: -do- 629, 630, 631
ஹொய்சள வீர ராமநாதன்: -do- 634, 653; A. R. E. 20, 21, 23, 41, 42, 45, 47, 48, 53, 56, 58/1920
மூன்றும் ராஜராஜன்: 22, 38, 43, 57, 72, 77/1920
மூன்றும் ராஜேந்திரன்: 29/1920
கோச்சடையன் சுந்தரபாண்டியன்: S. I. I. V 649; A. R. E. 31/1920
வீரபாண்டியன்: 34/1920

15 A. R. E. 77/1920 'கல்வெட்டுகள்' அத்தியாயத்தில் சமுதாய நிலை பற்றிய குறிப்பில் இக்கல்வெட்டு குறிப்பிடப்பட்டுள்ளது.

16 'ஏடேறு மலர்க் கொன்றை யரவு தும்பை
இளமதியம் எருக்கு வானிழிந்தகங்கை
சேடேறிந்த சடையான்'–திரு. 6, பதி. 90. பா. 6.

17 பார்த்துப் படிக்கப்பட்டது. ஆண்டறிக்கை 76/1920

18 - do – 24/1920

19 தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் Vol. II No. 693

20 பார்த்துப் படிக்கப்பட்டது. ஆண்டறிக்கை 78/1920

21 பார்த்துப் படித்தது. ஆண்டறிக்கை 51/1920. இந்த மக பூசை நடத்துகையில் ஆதிசண்டேஸ்வரர் திருவாய் மலர்ந்தருளி தேவ தானமாக நிலங்கள் கொடுத்ததாகக் கல்வெட்டு கூறுவதாலும் நம் முடிவு வலிவு பெறுகிறது.

22 இந்த மாத உத்ஸவத்தில் எழுந்தருளுபவர், 'ஜெயங்கொண்ட சோழ விடங்கர்' என்று ராஜாதிராஜனின் 33–ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிப்பிடப்படும் இறைவராக இருக்கலாம், ('கல் வெட்டுகள்' அத்தியாயத்தில் திருமேனிகள் பற்றிய குறிப்பைப் பார்க்க).

23 காவிரியாற்றிற்குச் செல்வதற்குக் கொள்ளிடத்தைக் கடந்து தான் செல்ல வேண்டும். என்றாலும் கொள்ளிடம் கடத்தற்கரிய ஆழமான ஆறல்ல. இன்றும் கூட வெள்ளக் காலங்கள் தவிரப்

பிற நாள்களிலெல்லாம் மக்கள் நடந்தே அக்கரைக்குச் செல்வது வழக்கமாக உள்ளது. தவிர கொள்ளிடம் இன்றுபோல் அகன்ற ஆருக அக்காலத்தில் ஓடவில்லை. தினமும் இறைவர்க்குக் காவிரி நீர்த் திருமஞ்சனம் கொண்டு வருவதற்கு அமைக்கப்பட்ட 'திருமஞ்சன வெட்டி' வழியாகவே இறைவர் பவனி சென்றிருப்பார் என்பது தெளிவு.

24 தேரில் இறைவர் ஏற்றப்பட்டுத் தேரும் சற்றுத் தொலைவு நகர்ந்து விட்டதாம். அதன் பின்னர் தான், இழுக்க முடியாத நிலை ஏற்பட்டு விட்டதென்கின்றனர். ஊர்ப்பெரியவர்கள், மழை காரணமாகவும், தேர் நல்ல நிலையில் இல்லையென்பதால் எதிர்ப்பு ஏற்பட்டதனுலும் நின்றுபோயிற்று என்கின்றனர். ஆனுலும், நின்றுபோன தேரை மீண்டும் கிளப்ப முயன்று, முடியாததால் உடனே தீர்த்தம் கொடுத்து முடித்துவிட்டார்களாம். ஊர்ப் பெரியவர்கள் இந்நிகழ்ச்சியை வெளியில் சொல்லவே வேதனையுறுகின்றனர்.

<☆>

# கோயில் நிர்வாகம்

கோயில் 1936-ஆம் ஆண்டிலிருந்து இந்து அறநிலையத் துறையினரால் நிர்வகிக்கப்படுகிறது. இக்கோயிலைத் தலைமையாகக்கொண்டு வேறு ஆறு கோயில்களையும் சேர்த்து நிர்வாக அதிகாரி ஒருவர் கவனித்து வருகிறார்.

1976-ஆம் ஆண்டு வரை தர்மகர்த்தா பதவி இருந்து வந்தது. ஸ்தானிகர் முதலிய பரம்பரைப் பதவிகள் இன்றளவும் உள்ளன.

ஸ்தானிகர்

கோயிலில் இரு ஸ்தானிகர் உள்ளனர். தலைமை ஸ்தானிகர் பொற்பண்டாரி எனவும், அடுத்த ஸ்தானிகர் ஸ்தான பண்டாரி, வெளிமெய்காவல், அறைகாவல், திருமாலை என்று பலபடவும் அழைக்கப்படுகின்றனர்.

பொற்பண்டாரி என்ற பெயருக்கேற்பக் கோயில் நகைகளின் பொறுப்பு தலைமை ஸ்தானிகருடையது. (மூலஸ்தானத்தை அடுத்துக் கட்டப்பட்டிருக்கும் நகைகள் அறை இரு பூட்டுகளுடையது. ஒரு பூட்டின் சாவி இவரிடமும் இன்னொரு பூட்டின்சாவி அரசாங்கத் துணைப் பதிவாளரிடமும் உள்ளன. இருவரும் சேர்ந்துதான் அறையைத் திறக்க முடியும்) இவர் பிராமண இனத்தவர்.

பொற்பண்டாரி பற்றிக் கல்வெட்டுகளில் குறிப்பு ஏதும் காணப்படவில்லை. சதுர்வேதிமங்கல சபைகளிலிருந்து இப்பதவிக்கு உரியோர் நியமிக்கப்பட்டதாகத் தஞ்சைக் கோயில் கல்வெட்டுகள் கூறுவதிலிருந்து அக்கால வழக்கை அறிகிறோம்.[1] எனவே கண்டராதித்தச் சதுர்வேதிமங்கலத்து சபையினரால் திருமழபாடிக் கோயில் பொற்பண்டாரி நியமிக்கப் பட்டிருக்கலாம் எனத்தோன்றுகிறது.

இவருக்கு மானிய நிலம் உள்ளது. இன்னின்ன பொறுப்புகள் இவருடையன என்ற விதிமுறை (Title Deeds) உள்ளது. பரிவட்டம் கட்டும் உரிமை இவருடையது. மெய் காவல் என அழைக்கப்படும் பணியாளர் ஒருவர் இவரால் நியமிக்கப்பட்டுள்ளார். அவரிடம் தினமும் கோயிலின் திறவு கோலைக் கொடுத்தனுப்புகிறார். கோயில் நடையடைத்ததும் திறவு கோலைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறார்.

ஸ்தானபண்டாரி, தம் பெயருக்கேற்பக் கருவறை தவிர தேவஸ்தானத்தின் இதரபகுதிகளைக் கவனித்து வருகிறார். இதனால் இவருக்கு வெளி மெய்காவல் என்ற பெயரும் வழங்கு கிறது. இவர் வேளாளர் இனத்தவர்.

தஞ்சைக் கோயிலில் திருமெய்காப்பார் நியமிக்கப்பட்ட தும் அவர்கள் பண்டாரிக்கு அடுத்த தகுதி பெற்றிருந்ததும் அக்கோயிற் கல்வெட்டுகளால் தெரிகின்றன.[2] அப்பதவி இதுவே என முடிவு செய்யலாம்.

திருமெய்காப்பான் மணியன் கணவதி என்பவன் முதல் ராஜேந்திரன் கல்வெட்டிலும்[3] அரையன் அழகியசோழன் என்பவன் இரண்டாம் ராஜேந்திரன் கல்வெட்டிலும்[4] இடம் பெற்றுள்ளார்கள்.

திருமெய்காவல் நாயகம் ஆலத்தூருடையான் மாதுய ரந்தீர்த்தான் என்பவன் மூன்றும் ராஜராஜன் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறான்.[5] இவன் தலைமை ஸ்தானபண்டாரி யாகவோ பொற்பண்டாரியாகவோ இருக்கலாம்.

அபிஷேக அறையின் பாத்திரங்கள் ஸ்தானபண்டாரி யின் பொறுப்பிலுள்ளன. தினமும் திருமாலை எடுத்துக் கொடுப்பவர் இவரே.

பொற்பண்டாரிக்கும் ஸ்தானபண்டாரிக்குமிடையே ஓர் ஒப்பந்தம் நிலவுகிறது. உற்சவ விக்ரக சன்னிதியின் சாவி ஒருவரிடமிருந்தால் அதனுள்ளிருக்கும் சிறு அறை, அந்த அறையிலிருக்கும் பெட்டி, அப்பெட்டியினுள்ளிருக்கும்

ஸ்படிக லிங்கங்கள் உள்ள சிறிய பெட்டி, இவற்றின் சாவி மற்றொருவரிடம் இருக்கும். ஆண்டுதோறும் தைமாதத்தில் சாவிகளைத் தமக்குள் மாற்றிக் கொள்கிறார்கள்.

கல்வெட்டுகளில் வேறு சில பதவிகளும் குறிப்பிடப்படுகின்றன. கோச்சடையன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு "கோயில் ஆரியக்கண்காணி சாண்டில்யன் எதிரொப்பிலாதான் சுந்தரபட்டன்"[6] என்பவனைக் குறிப்பிடுகிறது. ஸ்ரீகார்யஞ் செய்வான், ஸ்ரீமாஹேஸ்வரக்கண்காணி செய்வான் என்ற பொறுப்புகளும் கூறப்படுகின்றன.

சொத்துகள்

கோயில் சொத்துகள் அறநிலையத் துறையினரால் நிர்வகிக்கப்படுகின்றன. நிர்வாக அதிகாரிக்கு உதவியாக எழுத்தர் ஒருவர் பணிபுரிகிறார். நிலங்கள் பற்றிய கணக்குகள், வழக்குகள் நிர்வாக அதிகாரியால் கவனிக்கப்படுகின்றன.

கல்வெட்டுகளில் கோயிற் கணக்கு, எதிர்க்கணக்கு, சமுதாயக் கணக்கு முதலிய பதவிகள் குறிப்பிடப்படுகின்றன. ஊர் சுரோத்திரிய கிராமமாகவே இருந்து வந்துள்ளதால் ஊர்க் கணக்குப்பிள்ளை கோயிலால் நியமிக்கப்பட்டவராகவே இருந்திருக்கிறார். நெற்குப்பை என்ற ஊரைச் சேர்ந்தவர்கள் சிலர் கணக்கெழுத நியமிக்கப்பட்டனர் என்பது சோழர் கல்வெட்டுகளால் தெரிகிறது.[17]

நிலம்

நிலங்கள் மொத்தம் 464 ஏக்கர் கோயிலுக்குரியன. நன்செய் 232 ஏக்கர் 61 செண்ட்; புன்செய் 230 ஏக்கர் 4 செண்ட். 147 ஏக்கர் 75 செண்ட் நிலங்கள் பற்றி வழக்கு நடைபெற்று வருகிறது. இவை தவிர ஊர் ஆரம்பப்பள்ளி, நிர்வாக அதிகாரி தங்கியிருக்கும் வீடு, திருவிளக்கு கொளுத்தும் பணிபுரியும் கோயில் காவலர் தங்கும் வீடு, மடவிளாகத்தில் குருக்கள் தங்கியுள்ள வீடு, பரிசாரகர் இருவர் தங்கியிருக்கும் வீடு - இவை கோயிலைச் சேர்ந்தவை. இவற்றின் வாடகை கோயிலைச் சேர்கிறது.

### நகை

நகைகளின் பொறுப்பு பொற்பண்டாரியிடமிருந்தாலும் அவை பற்றிய விவரங்கள் நிர்வாக அதிகாரியிடம் உள்ளன. 1970-ஆம் ஆண்டு மதிப்பீட்டின்படி நகைகளின் மதிப்பு ரூபாய் 18,237 ஆகும். பொன் நகைகளின் மதிப்பு ரூபாய் 12,976. வெள்ளி நகைகள், தட்டு முதலியவற்றின் மதிப்பு ரூபாய் 5261.

ரூபாய் 233.25 காசு மதிப்புள்ள கண்டபேருண்ட பட்சிப் பதக்கம், 32 பூக்களையுடைய சிவந்திப்பூமாலை-இவை, பதிவேடு குறிப்பிடும் பட்டியலில் விசேடமானவையாகத் தோன்றுகின் றன.

ஒரு வெள்ளித் தட்டில் 'ஜெய்ஹிந்த்' எனப் பொறிக்கப் பட்டுள்ளதாகப் பதிவேடு கூறுகிறது.

### வாகனங்கள்

வாகனங்களின் பொறுப்பு ஸ்தானிகரைச் சேர்ந்ததென் றாலும் விவரங்கள் நிர்வாக அதிகாரியிடம் உள்ளன. மொத்தம் 10 வாகனங்கள் - பூதம், குதிரை, காமதேனு, யானை, மூஞ்சுறு, மயில், பாம்பு, பெரிய ரிஷபம், சிறிய ரிஷபம், ஆகிய மர வாக னங்களும், கண்ணாடிப் பல்லக்கு ஒன்றும். இவை நூற்றுக் கால் மண்டபத்திலுள்ளன. கோயிலுக்குரிய தேர், கோபுரத் திற்கெதிரில் தெருவை யொட்டி நிற்கிறது.

அலங்காரக்குடை, இறைவரின்மேல் பிடிக்கும் குடை, தட்டுமுட்டுச் சாமான்கள் - இவை விருதுகள் என அழைக்கப் படும். இரண்டாம் கோபுரத்தருகில் ஒரு பெட்டியில் இவை வைத்துப் பூட்டப்பட்டுள்ளன. இவற்றின் பொறுப்பு கொத் தனுருடையது.

### ஊதியம் பெறும் பணியாளர்கள்

அறநிலையத் துறையிடம் ஊதியம் பெறுவோர் பதின்மர். திருவிளக்கு கொளுத்துவது, பெரியமணி அடிப்பது முதலிய பொறுப்புகளையும் கவனித்துக் கொள்ளும் கோயில் காவலர், துப்புரவு செய்யும் பணிப்பெண், படுகை என அழைக்கப்படும்

தோப்புக் காவலர், குருக்கள் ஒருவர், பரிசாரகர் இருவர்-இவர் கள், மாதச் சம்பளமும் தினசரி பட்டைச் சாதமும் பெறுகின் றனர்.

---

1 த. பெ. கோ. க. பக். 101

2 — do — 117–128

3 S. I. I. V 651

4 Ibid-644

5 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 38/1920

6 S. I. I V 649

7 "...இத்தேவர் தேவகந்மிக் கணக்கு அரையந் மதுராந்தகனுன சோழ பெருங்காவிதிக்காக கணக்கெழுதுகின்ற மத்யஸ்தன் ஊரான் பட்டாலகனும் எதிர் கணக்கு இவ்வூர் சிவபிராமணன் கவுசிகன் நெற்குப்பை திருமழுவாடி கணக்காகவும்..." முதல் ராஜேந்திரன்–ஆண்டு 14 (S. I. I. V 651)

'...கோயிலுக்கு நாயனுர் நினைப்பிட்டருளின சாமுதாய கணக்கு காணியுடைய நெற்குப்பையுடையான் பட்டாலகன் திருமழபாடி உடையான்...' வீரராமநாதன்–ஆண்டு 13 (Ibid. 658).

<★>

## கோயிற் கலை

சோழர்களுடைய கலைப்பாணி, தனது தோற்றத்தி லிருந்து இறுதிவரை கோயிலில் ஆட்சி செலுத்தியுள்ளது. பாண்டியர், நாயக்கர் கலைப்பாணிகளும் தம் சுவடுகளை அழுத்த மாகப் பதித்துள்ளன. கி. பி. 9-ஆம் நூற்றாண்டிலிருந்து தற் காலம் வரையிலான கலைச் சின்னங்களைக் கோயிலில் காண முடிகிறது.

### வைத்தியநாதர் சன்னிதி

வைத்தியநாதர் சன்னிதியின் இன்றைய அமைப்பு ராஜேந்திர சோழன் காலத்தது. ஆதித்த சோழன் காலத்திய அமைப்பு ராஜராஜனால் முற்றிலும் மாற்றிக் கட்டப்பட்டது. இப்பணி அவனது மகனாகிய ராஜேந்திரன் காலத்தில் பூர்த்தி யுற்றது. இச் செய்தியை இரு கல்வெட்டுகள் நமக்குக் கூறு கின்றன.[1]

பழைய அமைப்பு முற்றிலும் மாற்றப் படாமல் இருந் திருந்தால் குடந்தைக் கீழ்க் கோட்டத்தைப் போலத் தனித் தன்மை வாய்ந்த கலைக்கருவூலமாக நம்கோயிலும் இருந்திருக் குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. சன்னிதியின் வெளிப்புறத்தில் அபிஷேகநீர் வந்து விழும் இடத்தில் உயர்ந்த மேடையொன்று கட்டப்பட்டு அதில் மூலைக்கொன்றாக நான்கு ரிஷபங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவை விமான கிரீவப்பகுதி யில் இடம் பெற்றிருந்தவையாக இருக்கலாம்.

முகமண்டபக் கோஷ்ட மொன்றில் மழுவாடீஸ்வரர் என்று அழைக்கப்படும் சிற்பமொன்று உள்ளது. சோழர் ஆட்சியின் தொடக்க காலத்தைச் சேர்ந்த இச் சிற்பம்—மூவர் கோயிலைப் போல-விமானத்தில் இடம் பெற்றிருந்திருக்கலாம்.

பழைய அமைப்பைப் பற்றி ஊகிப்பதற்கு வேறு சான்று கள் இல்லை. இப்போதைய அமைப்பு, கருவறை, அர்த்தமண்ட

பம், இருபுறங்களிலும் வாயிலுள்ள இடைநாழி, முகமண்டபம் என இவ்வாறாக அமைந்துள்ளது. இடைநாழியின் வடபுற வாயிலுக்கு உட்புறமாகவே சண்டேஸ்வரர் சன்னிதி உள்ளது. இதுவும் ராஜேந்திரன் காலத்தியது. இந்தச் சண்டேஸ்வரர் சன்னிதியைக் கோயிலுடன் இணைத்து ஹொய்சள வீர ராம நாதன் காலத்தில் சுவர் கட்டப்பட்டிருக்கிறது. சுவரில் அவனு டைய கல்வெட்டு காணப்படுகிறது.

அதிஷ்டானப் பகுதி பத்ம ஜகதிக்குக் கீழே நிலத்தில் புதைந்துள்ளது. சுவரில் கோஷ்டங்கள் அமைந்துள்ளன. கபோதத்தில் இடை நாழியிலிருந்து முகமண்டபம் முற்றிலும் யாளிவரியும் பூதவரியும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இடைநாழி யின் உட்புறமாக இந்த அமைப்பு காணப்படுவது சிறப்பாகும். துவார பாலகர் கோஷ்டத்தில் காணப்படும் தூணின் அமை ப்பு விருத்த பலகையுடையது.

உண்ணாழிக் கோஷ்டங்களில் வடபுறம் பிரம்மாவும் மேற்புறம் லிங்கோத்பவரும் உள்ளனர். இவை சோழர் சிற்பங் கள். லிங்கோத்பவர் இந்தக் கோஷ்டத்துக்குரியவரல்லர். தவிர கோஷ்டத்தினுள்ளே வைக்கப்படாமல், சற்று முன் தள்ளி உயர்ந்த மேடை கட்டப்பட்டு, அதன் மேல் பீடமிட்டு வைக்கப் பட்டுள்ளார். இந்த மேடையின் பக்கப் பகுதிகளில் ஹொய் சள வீரராமநாதன் கல்வெட்டு உள்ளது. எனவே இந்த அமைப்பும் அவனாலேயே ஏற்படுத்தப்பட்டதென்பது தெரி கிறது.

தென்புறக் கோஷ்டத்தில் புதிதாகத் தோன்றும் தக்ஷிணாமூர்த்தி சிற்பம் வைக்கப்பட்டுள்ளது. சன்னிதியின் தென்புறம் உற்சவ விக்ரகங்கள் வைக்கப்பட்டுள்ள சோமாஸ் கந்த மண்டபம் உள்ளது. இந்த மண்டபத்துக்கும் சன் னிதிக்கும் இடையிலுள்ள பகுதி தனி அறையாகக் கட்டப் பட்டு விட்டது. இதன் பக்கச் சுவரிலும் ஹொய்சள வீர ராமநாதன் கல்வெட்டு உள்ளது. சோழர் ஆட்சியின் இறுதிக் காலத்தில் தமிழகத்தில் கலையுணர்ச்சியும், அழகுணர்ச்சியும் வற்றத் தொங்கிவிட்டதற்கு இவை சான்றுகள்.

விமானம்

கோயிலின் விமானம் வேசர அமைப்புடையது. இரு தளங்கள். இவற்றில் சுதையுருவங்கள் உள்ளன. இது கற்ற ளியாதலால் கற்சிற்பங்களாகவே இருக்கலாம். அவற்றின் மேல் சுதை பூசப்பட்டிருக்கலாம். ஆயினும் இச்சுதை உருவங் கள் பலமுறை புதுப்பிக்கப்பட்டுள்ளன.

விமான தளங்களில் மேற்கில் நடுநாயகமாகக் கோதண்டராமன் நிற்க இலக்குவனும் சீதையும் இரு புறம் நிற்கிறார்கள். கீழே அனுமன் பணிகிறான்.

தென்மேற்கு மூலையில் கிருஷ்ணன் ராஸக்கிரீடை, பிக்ஷாடனர் ரிஷிபத்தினியருடன் நிற்கும் காட்சி, மைதுன உருவங்கள், ரிஷிகளிடையே திருமால் மோகினியாகச் சுற்றுவது போன்ற உருவங்கள் உள்ளன.

மாரியம்மன், சூரியன், சந்திரன், அக்னி, வீணாதர தக்ஷிணா மூர்த்தி என்று இவ்வாறு அவரவர்க்குரிய இடத்தில் படைக்கப் பட்டுள்ளனர். வடக்கில், மார்க்கண்டேயனுக்கு மழுவாடிக் கோலத்தில் சிவன் அருள்தரும் காட்சி போன்றவை சித்திரிக்கப்பட்டுள்ளன.

உற்சவ விக்ரக சன்னிதி

உற்சவ விக்ரகங்கள் வைக்கப்பட்டிருக்கும் மண்டபம் உற்சவ விக்ரக சன்னிதி என்று 1920 ஆம் ஆண்டுக் கல்வெட்டு அறிக்கையில் (A.R.E.) குறிப்பிடப்பட்டுள்ளது. சோமாஸ் கந்த மண்டபம் என்று சிலர் இதனை அழைக்கிறார்கள். இவ் வாறழைக்கும் மரபு திருவையாற்று வழக்கினைப் பின்பற்றிய தாக இருக்கக்கூடும்.

இந்த மண்டபம் அதிஷ்டானம், பிரஸ்தரம், கபோதம் இவற்றுடன் உயர்ந்து நிற்கிறது. வைத்தியநாதர் சன்னிதியின் வடபுறம், சன்னிதியைவிடப் பெரிதாக இம்மண்டபம் அமைந் துள்ளது. சுவர்களில் மூன்றும் ராஜராஜன் காலத்திய கல் வெட்டுகள் காணப்படுகின்றன. ஹொய்சள வீரராமநாதன்,

சுந்தரபாண்டியன் ஆகியோருடைய கல்வெட்டுகளும் காணப் படுகின்றன. எனவே இம்மண்டபம் 13-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

இதனை மண்டபம் என்று குறிப்பிட முடியாத வகையில் கோஷ்டங்கள் அமைந்துள்ளன. பின்புறக் கோஷ்டத்தில் சோழர் காலத்தின் இறுதிப் பகுதியைச் சேர்ந்த விஷ்ணு சிற்பம் உள்ளது. தென்புறக் கோஷ்டத்தில் சற்றுப் பிற்காலத்திய தக்ஷிணாமூர்த்தி சிற்பம் காணப்படுகிறது. வடபுறம் வெறுமை யாக உள்ளது.

## உட்புற அமைப்பு

உட்புறம் உயர்ந்த மேடையாக அமைக்கப்பட்டு ஏறிச் செல்ல இருபுறமும் படிக்கட்டுகள் வைக்கப்பட்டுள்ளன. இப் படிக்கட்டுகள் இப்போது மறைத்து மூடிக் கட்டப்பட்டு விட்டன.

மேடையின் முன்புறம் உபானம், பத்ம ஜகதி, குமுதம், யாளிவரி, பூதவரி, சுவர், கம்பு, கண்டம், கபோதம் இத்தனையும் சித்திரிக்கப்பட்டுள்ளன. சுவரில் மையமாக கஜலக்ஷ்மி, அதன் இருபுறமும் நடனக் காட்சி, அவற்றின் பக்கங்களில் சிங்கத் துடன் சண்டைபிடும் வீரர்கள் சித்திரிக்கப் பட்டுள்ளனர். நடுநாயகமாகச் செல்வமும், அதனைச் சார்ந்தனவாகக் கலையும் வீரமும் அமைகின்றன என்பதை இது உருவகிக்கிறது போலும்.

இந்த மண்டபத்தின் முகமண்டபம் தனியாக அமைக் கப்படவில்லை. ஆயினும் சமீபகாலங்களில் சுவரெழுப்பி முக மண்டபம் போன்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. இங்கு சுந்தர விநாயகருக்குச் சிறிய சன்னிதி உள்ளது.

சோமாஸ்கந்தமண்டபம் என்ற பெயருக்கேற்ப இதன் உள்ளே வைக்கப்பட்டிருக்கும் திருமேனிகளில் சோமாஸ் கந்தர் திருமேனி நடுநாயகமாக வைக்கப்பட்டுள்ளது. உள்ளே தனியறை யொன்றில் விடங்க லிங்கங்கள் வைக்கப்பட்டிருப்ப தால் இது விடங்கர் சன்னிதி யென்றும் குறிப்பிடப்படுகிறது.

### சிற்சபை

முதல் திருச்சுற்றின் வடகிழக்கில் பாலாம்பிகை சன்னிதிக்கு இடப்புறம் சிற்சபை அமைந்துள்ளது. இதில் ஆடவல்லான் திருமேனிக்குப் பதிலாக ஒரு புத்தகம் வைக்கப்பட்டுள்ளது. எதிரில் எட்டு, எட்டுத் தூண்கள் கொண்ட நான்கு வரிசைகளாக மொத்தம் 32 தூண்கள் நிற்கின்றன. இவையனைத்துமே பெரிய நாகபந்தத்துடன் சற்றுப் பிற்காலத்தவையாகத் தோன்றுகின்றன. முதல் திருச்சுற்றின் முன்பகுதியையே அடைத்துக் கொண்டு நிற்கும் இந்த அமைப்பு முழுவதும் விஜய நகர மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்டிருக்கவேண்டும்

சிற்சபை, இரு பக்கங்களிலும் படியுடன்கூடிய ஐந்து அடி உயர மேடை உடையது. படிகளின் பக்கவாட்டில் மனிதனொருவனைத் துதிக்கையில் சுற்றித் தூக்கும் யானை உருவம் வடிக்கப்பட்டுள்ளது.

மேடைமேல் அமைந்துள்ள தூண்களில் சிறு சிறு சிற்பத் தொகுதிகள் காணப்படுகின்றன.

இந்தச் சிற்சபையின் அமைப்பு, குறிப்பாக யானை மனிதனைத் துதிக்கையில் சுழற்றும் காட்சி, திருவரங்கத்துக் கோயில் மண்டபத்தை நினைவூட்டுகிறது. இது விஜயநகர மன்னர் காலப்பணியாகும்.

### சில அளவுகள்

முதல் திருச்சுற்று நுழை வாயிலிலும் ஜுரேஸ்வர் சன்னிதி முகப்பிலும் கல்வெட்டில் சில அளவுகள் குறிக்கப்பட்டுள்ளன. எழுத்து வடிவம் 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. மூன்றும் ராஜராஜன் காலத்தில் கோயிலில் புதுப்பிக்கும் பணிகள் நடைபெற்றபோது இவை குறிக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

முதல் திருச்சுற்று வாயிலின் உட்சுவரில், "இது மடி அளவத்து முழம்" என்ற குறிப்புடன்,

+ | | | | |

என்ற வடிவங்கள் காணப்படுகின்றன. கூட்டற் குறிக்கும், நான்காவதாக இருக்கும் செங்குத்து நேர்கோட்டுக்கும் இடையில் ஒரு சாண், நான்கு விரற்கடை (11 அங்குலம்) இடைவெளி உள்ளது. நான்காவது நேர்கோட்டுக்கும் ஐந்தாவது கோட்டுக்கும் இடையில் இதே ஒரு சாண் நான்கு விரற்கடை இடைவெளி உள்ளது.

ஜுரேஸ்வர் சன்னிதி முகப்பில் தரையில்,

+ நிலம் +
மனை | +

என்ற குறிகள் காணப்படுகின்றன.

திருச்சுற்று மாளிகை:

இந்தத் திருச்சுற்று மாளிகை மூன்றும் ராஜராஜன் காலத்தில் வாச்ச மாளிகை என்று அழைக்கப் பட்டுள்ளது. இது தேவாரப் பாடலில் பயன்படுத்தப் பட்ட சொல்லாட்சியாகும். இப்போது இதனைக் குறிப்பாக எந்தப் பெயரிட்டும் அழைப்பதில்லை.

இரண்டு அடுக்குகளாக உயர்ந்து நிற்கும் இந்தத்திருச்சுற்றுமாளிகை, வாச்சமாளிகை என்ற பெயருக்கேற்பக் கம்பீரமாக நிற்கிறது. பக்கங்களில் 35 தூண்கள் உள்ளன.

திருச்சுற்றுமாளிகையின் குமுதம் முப்பட்டை வடிவிலமைந்தது. இதற்குக்கீழே உள்ள பகுதிகள் தரையில் புதைந்துள்ளன. திருச்சுற்றுமாளிகையின் வடபுறத்தில் ஓரிடத்தில் கோயிலின் உள்ளிருந்து வெளியேறும் ஜலதாரையமைப்பிற்காக ஐந்தடி ஆழத்துக்கு மேல் தோண்டித் தொட்டிபோல் கட்டியிருக்கிறார்கள். இதன் அடிப்பகுதி வரையிலும் கூடஅதிஷ்டானப் பகுதி காணப் படுகிறது.

பிரஸ்தரத்தில் கொடுங்கையின் மேலே யாளிவரியும் கீழே பூத வரியும் உள்ளன. தூண்களுக்கு நேர் மேலே கூடுகள் காணப்படுகின்றன.

தூண் - போதிகை, குமுதம், பலகை, தாடி, கலசம், உடல் ஆகிய பகுதிகள் கொண்டது.

தூண்களிலுள்ள கூடுகளில் ஆடல்பெண்டிர், மலர் வடிவங்கள், ரிஷபாந்திகர் வடிவங்கள் காணப்படுகின்றன. ஒரு கூட்டில் முதலைமேல் சவாரி செய்யும் குரங்கு சித்திரிக்கப் பட்டுள்ளது. இது பஞ்சதந்திரக் கதை நிகழ்ச்சி.

சுவரின் இரண்டாம் தளம் அமைப்பில் கீழ்த்தளம் போலவே சமைக்கப்பட்டதாக இருந்தாலும் முன்னதன் நளினம் இன்றி, சுவரின் உயரத்தை அதிகரித்து கம்பீரப்படுத்தும் முயற்சியாக மட்டுமே நிற்கிறது. இதிலுள்ள யாளி வரியில் காணப்படும் உருவங்கள் கலைத்தன்மை குன்றிக் காணப்படுகின்றன. கீழ்த்தளத்தைப் பார்த்து அப்படியே போலச் செய்யும் முயற்சி நடைபெற்றுள்ளது என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. கீழ்த் தளத்தின் 23, 24ஆம் தூண்களுக்கு இடையில் எதற்காகவோ-ஒருவேளை ஒரு மாறுதலுக்காக இருக்கலாம் - அலங்கார வடிவம் ஒன்று சித்திரிக்கப்பட்டுள்ளது. இந்தத்தளத்திலும் அது போலவே செய்யப்பட்டிருக்கிறது.

இந்த மேல்தளம் சோழர்கால இறுதியில் கட்டப்பட்டிருக்கலாம். வாச்சமாளிகை என்ற பெயரும் அப்போதுதான் சூட்டப்பட்டிருக்குமெனத் தோன்றுகின்றது.

வாச்சமாளிகையின் அமைப்பு பார்ப்பதற்கு அழகாக இருந்தாலும் கற்கள் அத்தனை உறுதியின்றி எளிதில் பொடிந்து போகத்தக்கனவாக உள்ளன. தூண்களின் பலகைப் பகுதிகள் பல உடைந்துள்ளன. சுவரில் காணப்படும் கல்வெட்டுகளைக் கூர்ந்து படிக்கும்போது ஓர் உண்மை புலப்படுகிறது. கல்லில் பொடிந்த பகுதியில் இடைவெளி விட்டுச் சில தொடர்களை வெட்டியிருக்கிறார்கள். எனவே கட்டப்பட்ட காலத்திலேயே, கற்கள் உறுதியற்றவை என்பதை அறிந்தே பயன்படுத்தியிருக்கிறார்கள்.

### மடைப்பள்ளி

இரண்டாம் திருச்சுற்றின் தென்கிழக்கில் மடைப்பள்ளி

உள்ளது. இதன் நுழைவாயிலையொட்டிச் சுந்தரபாண்டியன் கல்வெட்டு உள்ளது.

ராஜேந்திர சோழனின் கல்வெட்டு ஒன்று, கோயிலில் இருந்த 'கங்கை கொண்டான் சாலை'யில் உணவு அளிப்பதற்கு நடந்த ஏற்பாடுகளைப் பற்றிப் பேசுகின்றது. அந்தக் கங்கைகொண்டான் சாலைதான் இந்த மடைப்பள்ளியோ என்ற ஐயம் தோன்றுகிறது. அவ்வாறிருப்பின் பின்னாள் களில் சற்றுப் புதுப்பித்துக் கட்டப்பட்டிருக்கவேண்டும். தூண்களில் நாபந்தகம் காணப்படுகிறது. வேறு குறிப் பிடத்தக்க அமைப்பு ஏதுமில்லை.

நூற்றுக்கால் மண்டபம்

இரண்டாம் திருச்சுற்றில், நுழை வாயிலுக்கு எதிரிலே தெற்கு வடக்காகச் சுமார் 50 அடி தொலைவு நீண்டு கிடக்கும் இந்த மண்டபம் மிக எளிமையானது. வடக்கு மூலையில் ஒரு மேடை உள்ளது. எந்நேரமும் இருண்டு கிடக்கும் இம் மண்டபத்தில் வாகனங்கள் வைக்கப்பட்டுள்ளன.

மண்டபத்தின் வடமேற்கு மூலையில் யாகசாலையும் வட கிழக்கில் நெல்குத்தி மண்டபம் எனப்படும் இடிந்துபோன மண்டபமும் உள்ளன. தென்பகுதியில் சிறு அறையாகக் கட்டி, நிர்வாக அலுவலரின் அலுவலகமாக ஆக்கியுள்ளார்கள்.

இந்த மண்டபத்தின் பெயர் "கோனேரிராயன் திருமண் டபம்" என்பது. காஞ்சிபுரவரதீஸ்வரன், பட்டுக்கட்டாரி, மதியாத மன்னர் மணவாளன் என்ற பட்டங்கள் சூட்டிக் கொண்ட கோனேரிதேவராய பசவசங்கரன் மகனாகிய கோனேரிராயனால் கி.பி. 1490-இல் இம்மண்டபம் கட்டப்பட்ட தென ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[2]

திருச்சிச் சீமையை விஜயநகரப் பிரதிநிதியாகச் சில காலம் ஆண்டு, தனியாட்சி நிறுவிப் பின் நரச நாயக்கனால் முரியடிக்கப்பட்ட கோனேரிராயனின் ஆதரவு திருமழபாடிக் கோயிலுக்குக் கிடைத்திருக்கிறதென்பதற்கு இம்மண்டபம் ஒரு சான்று.

### கோபுரங்கள்

கோயிலில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. இரண்டாம் திருச்சுற்றின் வாயிலாக அமையும் கோபுரம் சுமார் 65 அடி உயரமுடையது. கூடம் சாலே இவற்றுடன் சுதை உருவங்களின்றி எளிமையாக விளங்கும் இக்கோபுரம் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டிருக்கவேண்டும். கோபுரத்தின் உட்சுவரில் அவனுடைய 34-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று உள்ளது. எனவே இக்கோபுரம் கி.பி. 1212-க்கு முன் கட்டப்பட்டதென்பது தெளிவு.

முதற்கோபுரம் எண்பதடிக்கும் மேற்பட்ட உயரமுடையது. இதில் ஹொய்சள வீரராமநாதனின் 15-ஆம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1269) காணப்படுகிறது. பாண்டியர் கல்வெட்டுகள் ஆறு, இதே கோபுரத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. சடையவர்மன் சுந்தரபாண்டியனின் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1265) இவற்றுள் முற்பட்டது. எனவே இக்காலத்திலோ அதற்குச் சற்று முன்னரோ பாண்டியரின் கலேப் பாணியாகிய கோபுரம் இங்கு எழுப்பப்பட்டிருக்கவேண்டும்.

### சிற்பங்கள், சுதையுருவங்கள்

இந்தக் கோபுரத்திற்கு இரு துவாரபாலகர் உள்ளனர். கோரப்பற்களுடன், சூசி ஹஸ்தம் காட்டி நிற்கும் கதையூன்றிய காவலர்கள். கோபுரத்தின் உயர்ச்சிக்கேற்ப இவர்களும் நெடிய, வலிய உருவத்தையுடையவர்களாக இருக்கிருர்கள்,

சுதைச் சிற்பங்கள் நாயக்கர் காலத்தனவாகத் தோன்றுகின்றன. ஊர்த்துவதாண்டவம் முதலான தாண்டவக் கோலங்கள், நான்முகன், விஷ்ணு வணங்கும் நிலேயில் லிங்கோத்பவர், சிங்கவாகினியாகிய துர்க்கை, வைரத் தூணரை வணங்கும் பஞ்சமுகங்களுடைய பிரம்மா, பனே மரத்தினடியிலிருக்கும் மழபாடி இறைவரைத் தொழும் தேவர்கள்- இவ்வாறு பல காட்சிகள் கலந்து சித்திரிக்கப்பட்டுள்ளன.

கோபுரத்தின் உட்புறத்தில் புராணக் கதையொன்று சித்திரிக்கப்பட்டுள்ளது. சுசேனன் என்பவன் தன் குருவின்

மகளைப் புணர்ந்தும் பஞ்சமா பாதகங்கள் புரிந்தும் திரிந்த நேரத்தில் அவனைப் புலியொன்று கொன்று தூக்கிச் செல்கையில் அவனது எலும்பு கோயிலுக்கெதிரில் உள்ள சிவகங்கைத் தீர்த்தத்தில் விழுந்து விடுகிறது. விழுந்த மாத்திரத்திலேயே சுசேனன் செய்த பாவமனைத்துந் தீர்ந்து சிவனது சாரூபம் பெற்று உய்கிறான். இந்தக் கதை மூன்று பகுதியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.[3]

### சிற்பங்கள்

கோயிலிலுள்ள சிற்பங்களைப் பொறுத்த அளவில் சோழராட்சியின் தொடக்க காலத்திலிருந்து அரியலூர் மழவராயரின் ஆட்சிக் காலம்வரை திருமழபாடியில் நிலவிய செப்பமான (sophisticated) கலைப்பாணியையும் கிராமியக் கலைப்பாணியையும் ஒருங்கே காணமுடிகிறது. கோயிலின் வடிவம் பல விதங்களில் மாறுபட்டுவிட்ட நிலையில், தத்தமக்கு உரிமையான இடங்களை விட்டு நீங்கி ஊமையாக எங்கெங்கோ நிற்கும் இச்சிற்பங்கள், தம் அமைதியினாலேயே நம்முடன் அளவளாவுகின்றன.

#### மழுவாடீஸ்வரர்

மூலஸ்தானத்து முகமண்டபத்தின் வலப்புற நுழைவாயிலையொட்டியிருக்கிற கோஷ்டத்தில் இச்சிற்பம் வைத்துப் பொருத்தப்பட்டுள்ளது. கோஷ்டத்துக்கு மேல் உள்ள கூட்டில் விநாயகர் உருவம் சித்திரிக்கப்பட்டுள்ளது.

வலக்கால் வளைத்து ஊன்றி, இடக்கால் சற்று உயர்த்தி ஆடும் கோலத்தில் இறைவர் காணப்படுகிறார். நான்கு கரங்களில் வலப்பின்கரத்தில் சூலமும் இடப்பின்கரத்தில் பாசமும் காணப்படுகின்றன. வலமுன்கரம் மழுவை ஓங்கிய நிலையிலும் இடமுன்கரம் வலக்காலின் கீழ்க்கிடக்கும் காலனைச் சுட்டிக் காட்டும் சூசிஹஸ்தத்திலும் சித்திரிக்கப்பட்டுள்ளன. 'வேண்டாம் வேண்டாம்' என்று கெஞ்சுவதுபோலக் காலன் வலக்கையை உயர்த்திக் காட்டுகிறான். இறைவனது வலக்காலில் கங்கணம் காட்டப்பட்டுள்ளது.

இச்சிற்பம் காலாந்தகமூர்த்தி உருவமாகும். மார்க் கண்டேயனைக் காப்பதற்காகக் காலனுக்குக் காலனாக வந்து தோன்றிய இறைவன், கூத்தாடும் காலகாலதேவர் என்று திருக்கடவூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறான். நம் தலத் திலும் இத்தகைய கருத்திலேயே இச்சிற்பம் படைக்கப்பட்டி ருக்கவேண்டும், எனவே மழுவாடீஸ்வரர் என்று இவர் இன்று அழைக்கப்படுவது, பழைய மரபினையொட்டியதே என்று துணிந்து கூறலாம்.

சிவன் மழு ஏந்தியாடுவதாகப் பாடப்படும் தேவாரப் பாடல்களைக் கவனித்தால் இந்த ஆட்டம் நிகழ்ந்த இடம் பெரும்பாலும் மயானமாகவே அமைவதைக் காணமுடிகி றது.[4] இது சிவனுடைய மூலவடிவமான ''கணிச்சிக் கூர்ம் படைக் கடுந்தெறல் ஒருவனின்'' - கூற்றுவனின்- அம்சமாகும். கரடு முரடுகள் சமன்படுத்தப்பட்டுச் சைவசமயம் செம்மைப் பட்டு வருகின்ற நிலையில், காலனைக் காய்ந்து அடியார்க்கு அருள்பாலிக்கும் மழுவாடியாகச் சிவன் உருக்கொள்வது இயல்பே.

இந்தச் சிற்பம் மாமன்னன் ராஜராஜனுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்ததாகும். உறுப்புகளின் உருட்சியான அமைப்பு இதனைத் தெளிவாகக் காட்டுகிறது. ராஜராஜன் காலத்திய நளினம் சற்றுக் குறைந்தே காணப்படினும் நேர்த்தி மிக்க இச்சிற்பம் தனிப்பட நமக்காக ஆடிக்காட்டுவது போலத் தோன்றும் வகையில் (with a personal touch) படைக் கப்பட்டுள்ளது.

தொடக்க காலத்தில் இச்சிற்பம் கோயில் விமானத்தில் இடம் பெற்றிருந்திருக்கவேண்டும். நாட்டிய கரணங்களில் தாளசம்போதிதம் என்ற வகையைச் சேர்ந்தது இதன் அமைப்பு என்று கருதுவர்.

### துவாரபாலகர்

மூலஸ்தானத்து அர்த்தமண்டப நுழைவாயிலின் துவாரபாலகர் சிற்பங்கள் மிக அழகியவை. பத்தாம் நூற்

ருண்டின் தொடக்க காலத்தைச் சேர்ந்தவை. மனித உருவத்தின் அளவிற்குச் சமமாக நிற்கும் இச்சிற்பங்கள் நந்தி, மகாகாளன் என்று இந்தியக் கலைமரபால் குறிக்கப்படும் உருவங்கள் ஆகும். இவர்களால் காக்கப்படும் வாயில் நந்தமகாகாளன் திருவாசல் என்று அழைக்கப்பட்ட கல்வெட்டுக் குறிப்பினுல்[5] நாம் இம்முடிவிற்கு வருவது எளிதாகிறது.

இடப்புறமுள்ள உருவம் வலக்கையை விஸ்மயத்திலும் இடக்கையை கஜஹஸ்தத்திலும் வைத்து நிற்கிறது. ஊன்றி நிற்கும் கதையின் மேலே இடமுழங்கையைத் தொங்கவிட்டு, கதையின் கீழேயுள்ள புடைத்திருக்கும் பாகத்தில் இடது பாதத்தை வைத்து உக்கிரத்தோடு சற்று ஒய்யாரத்தையும் கலந்து காட்டுகிருர் இக்காவலர். கதை, ஆயுதம்போல் இல்லாமல் மரம்போல் வேர்பாய்ச்சி நிற்கிறது. துவாரபாலகர் தோளுக்குமேல் பாம்பு காணப்படுகிறது.

வலப்புறம் உள்ள காவலர் வலக்கையை சூசி ஹஸ்தமாகக் காட்டி, இடக்கையை கதைமேல் வைத்து நிற்கிருர். வலக்கால் பாதம் கதையின் கீழ்ப்பகுதியினுல் தாங்கப்படுகிறது. கதை இயல்பாகக் காட்டப் பட்டுள்ளது. வலத் தோளுக்குமேல் பாம்பு உள்ளது.

இரு பாலகர்களும் பாம்புக்குண்டலங்கள் அணிந்து கோரப் பற்கள் வெளித்தெரியச் சற்றுப் பிளந்த வாயுடன் நிற்கின்றனர்.

### கௌரிப்பிரசாதமூர்த்தி

சன்னிதியை நோக்கியவாறு, முகமண்டபத்துக்கும் நுழைவாயிலுக்கும் இடையிலுள்ள இடைநாழியில் ஒரு கோஷ்டத்தில் இச்சிற்பம் உள்ளது. ராஜேந்திர சோழன் காலத்தது.

### சோமாஸ்கந்தர்

கௌரிப்பிரசாதமூர்த்தியைப் போலவே பிறிதொரு கோஷ்டத்தில் இவ்வுருவம் உள்ளது. இடுப்பிற்குமேல் உடைக்கப்பட்டுவிட்டது. இதுவும், ராஜேந்திர சோழன் காலத்தில்

கோயில் புதுப்பிக்கப்பட்டபோது வடிக்கப்பட்ட சிற்பமாகவே இருக்கவேண்டும்.

### துர்க்கை

சோழர் காலச் சிற்பமான[6] இவ்வுருவம் ஏதாவதொரு கோஷ்டத்தில் இருந்திருக்க வேண்டும். இப்போது ஜுரேஸ்வரர் சன்னிதியின் பின்புறம் கல்வெட்டுகளை மறைக்கும் விதத்தில் பிரதிஷ்டிக்கப் பட்டுள்ளது. எதிரே கஜசம்ஹாரர் எழுந்தருளியிருக்கிருர். அவரது உக்கிரத்தைத் தணிப்பதற்காகவே துர்க்கை இங்கு பிரதிஷ்டிக்கப் பட்டுள்ளாள் என்று கூறுகின்ருர்கள்.

சங்கு சக்கரந் தாங்கி மகிஷன் தலைமேல் நின்று அபயம் அளிக்கும் துர்க்கை உருவம் எளிமையானது. முகமும் மார்பும் வட்ட வடிவமாகவும் குழந்தைத் தன்மையுடனும் காணப்படுகின்றன.

### கஜசம்ஹாரர்

பாலாம்பிகை சன்னிதிக்கு வலப்புறம் தனியாகப் பிரதிஷ்டை பெற்றுள்ளார் இவர். ஒருக்களித்து இடது காலை உயர்த்தி நடனமாடும் தோரணையில் உக்கிரமாக நிற்கும் இந்தக் கரியுரிநாதர் உருவம் ராஜராஜன் காலத்தியதாகத் தோன்றுகிறது. இச்சிற்பமும் கோஷ்டத்தில் இருந்திருக்க வேண்டும்.

### கல்யாணசுந்தரர்

முகமண்டப நுழைவாயிலை யொட்டியுள்ள இடப்புறக் கோஷ்டத்திலுள்ளது இச்சிற்பம். சோழர்கால இறுதிப் பகுதியைச் சேர்ந்ததாகலாம். நெடிதகன்று நிற்கும் இறைவனின் கரம்பிடித்து உடலை ஒடுக்கிக் கொண்டு நிற்கிருள் தேவி. இச்சிற்பத்தை நந்திகேஸ்வரர் திருமணக் கோலமென்று கருதுகிருர்கள் இவ்வூர் மக்கள். அந்தக் கருத்திலேயே இச்சிற்பத்தை இங்குக் கொண்டுவந்து பொருத்தியிருக்கிருர்கள் போலும்.

### சந்திரசேகரர்

வலப்புறக் கோஷ்டத்தில் இவ்வுருவம் உள்ளது. கோஷ்

டத்தின் மேலுள்ள கூட்டில் கயிலையில் இறைவனும் இறைவியும் அமர்ந்திருக்கும் காட்சி சித்திரிக்கப் பட்டுள்ளது. சிற்பத்தில் தேவி சிவனின் தோளில் தலைசாய்த்து அமர்ந்துள்ளாள். இறைவனின் இடக்கையும் தேவியின் வலக்கையும் உடைந்து காணப்படுகின்றன. சோழர்காலச் சிற்பம்.

பைரவர்

பைரவர் சிற்பங்கள் இரண்டு உள்ளன. ஒன்று, வைத்தியநாதர் சன்னிதியின் அர்த்தமண்டபக் கோஷ்டத்தில் வைக்கப்பட்டுள்ளது. பின்னிரு கைகளில் உடுக்கையும் பாசமும் ஏந்தி முன்னிரு கைகளில் சூலமும் கபாலமும் ஏந்தித் தீச் சடையுடன் நிற்கும் பைரவர் குருவைரவர் என அழைக்கப் படுகிறார்.

குருவைரவர், காலவைரவர் என்ற பெயர்கள் பைரவக் கடவுள் தீயோரையழிப்பதில் கூற்றுவனாக விளங்குவதைக் காட்டும். இதற்கேற்பப் பாசக்கயிறும் சூலமுந்தாங்கி இவர் விளங்குகிறார். உருண்டு திரண்ட நிர்வாண உடல், சிவனது கஞ்சுகன் (காவலன்) என்பதைக் காட்டும் வகையில், தெய்வத் தன்மையை விடக் குரூரபாவத்தையே காட்டும் முகம், இவற்றுடன் குட்டையான வடிவில் நிற்கும் இந்தத் துஷ்டநிக்ரகன் சிற்பம் சோழர் காலத்தின் இறுதியைச் சேர்ந்தது.

மற்றொரு வைரவர் சிற்பம் முதல் திருச்சுற்றின் வட கிழக்குப் பகுதியில் வைக்கப்பட்டுள்ளது. நாயக்கர் காலத்ததாகத்தோன்றும் இவ்வுருவம் உடுக்கை, பாசம், சூலம், கபாலந்தாங்கி, இடையில் அரைஞாணாகப் பாம்பு சுற்றிக் கட்டப் பட்டிருக்க, நாய் வாகனங்கொண்டு நிற்கிறது,

லிங்கோத்பவர்

லிங்கோத்பவர் உருவங்களும் இரண்டு உள்ளன. ஒன்று வைத்தியநாதர் சன்னிதியின் உண்ணாழிப் பின்புற மேற்குக் கோஷ்டத்தைச் சேர்ந்தது. மற்றொன்று அர்த்த மண்டபக் கோஷ்டமொன்றில், பைரவர் இருக்கின்ற கோஷ்டத்துக்கருகில் உள்ளது. இந்த லிங்கோத்பவர் உருவம்

சற்றுக் குறுகலானது. வலக்கை உடைந்துள்ளது. இடப் புறத்தில் கீழே திருமாலும் மேலே நான்முகனும் சித்திரிக்கப் பட்டுள்ளனர். திருமால் பன்றிமுகமும் மனிதஉடலுங் கொண்டவராகவும், நான்முகன் அன்னத்துக்குரிய இறக்கை பெற்ற மனித உருவிலும் காட்டப்பட்டுள்ளனர். சோழர் காலத்தின் இறுதிப் பகுதியைச் சேர்ந்தது.

சோமாஸ்கந்தர்

சோமாஸ்கந்தர் உருவங்களும் இரண்டு உள்ளன. ஒன்று முதல் திருச்சுற்றின் தென்மேற்கில் பிரதிஷ்டை பெற்றுள்ளது. 14 அல்லது 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதத்தகும் இச்சிற்பம் பிரபையுடன் கூடிய பெரிய சிற்பமாகும். பொதுவாக இத்தகைய சிற்பங்களைக் காண்பது அரிது. உள்ளூர் மக்களும் கோயிலுக்குப் புதிதாக வருபவர்களிடம் இச்சிற்பத்தின் சிறப்பைப் புகழ்ந்து கூறுதிருப்பதில்லை.

மான்மழுவுடன் வலக்கையால் அபயங்காட்டி, இடக் கையை ஞானமுத்திரைபோலக் கடகாமுகஹஸ்தம் பிடித்து இறைவன் சுகாசனத்தமர்ந்திருக்கிறார். வலக்கையில் மலர் தாங்கி, இடக்கையை நித்ராஹஸ்தமாகத் தரையிலூன்றி அமர்ந்திருக்கிறாள் தேவி. நடுவில் மிகச்சிறிய கந்தன், கையிரண்டிலும் மலர்தாங்கியமர்ந்திருக்கிறான்.

கூரிய மூக்கு, உருட்சியற்ற பரந்த மார்பில் ஆபரணங்கள்-இவை இச்சிற்பம் சற்றுக் காலத்தால் பிற்பட்டதெனக் காட்டுகின்றன. கையில் காணப்படும் மான் உருவமும் சற்றுச் செயற்கையாகவே இருக்கிறது. ஆயினும் சிற்பத்தின் கம்பீரம் நம்மைக் கவர்கிறது.

மற்றொரு சோமாஸ்கந்தர் உருவம் திருச்சுற்றின் வட புறம் வேறு சில சிற்பங்களுடன் வைக்கப்பட்டுள்ளது. எண்ணெயும் அழுக்கும் படிந்து கவனிப்பாரற்றுக் காணப்படும் இச்சிற்பம் சற்று கிராமியத்தன்மையுடன் கலைநேர்த்தி குறைந்து காணப்படினும் மேற்குறிப்பிட்ட சிற்பத்தைவிட

இயற்கையான பாவனையுடையது. இந்த "மனிதத்தன்மை" யும் எளிமையும் ஒருவகையான அனுதாபங்கலந்த ஈடுபாட்டை நம்மிடம் ஏற்படுத்துகின்றன. விளையாட்டுப் பொம்மை போல் இறைவனின் கைப்பிடிக்குள் அடங்கியிருக்கும் கந்தச் சிறுவன், ஒடுங்கியமர்ந்திருக்கும் உமை, அகன்ற தோள்களுடன், பாவங்களற்ற முகத்தையும் நிமிர்த்தியமர்ந்திருக்கும் இரு கரங்கொண்ட இறைவன். 14-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகலாம் இச்சிற்பம்.

### விஷ்ணு

கோயிலின் பழமையான சிற்பங்களுள ஒன்ருக டக்ளஸ் பேரட் ஒரு விஷ்ணு சிற்பத்தைக் குறிப்பிட்டுள்ளார்.[7] ஆனுல் வேறு விவரம் ஏதும் அவர் குறிப்பிடவில்லை.

கோயிலில் இரு விஷ்ணு சிற்பங்கள் உள்ளன. ஒன்று உற்சவவிக்ரக சன்னிதியின் பின்புறக் கோஷ்டத்தில் உள்ளது. சிறிய சிற்பம். இது மூலஸ்தானத்துக் கோஷ்டத்தில் இருந்திருக்கலாம். சங்கு சக்கரமும், அபய ஊரு ஹஸ்தங்களும் கொண்டு நிற்கும் இந்த விஷ்ணுவையே பேரட் குறிப்பிட்டிருக்க வேண்டும். கைகள் உடைந்துள்ளன. மற்ருெரு விஷ்ணு சிற்பம் முதல் திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் உள்ளது. பரந்த தட்டையான மார்பும், நீண்ட மூக்கும் இச்சிற்பத்தைச் சாதாரண கலைத் தரமுடையதாக அறிவிக்கின்றன. ஆபரணங்கள அதிகமில்லை. நாயக்கர்காலச் சிற்பமாக இருக்க வாய்ப்புண்டு.

### காத்யாயனி

காத்யாயனி என்று தவருக அழைக்கப்படும் இச்சிற்பம் முருகனின் சக்தி-கௌமாரி-வடிவமாகும். மயிலின்மேல் சுகாசன நிலையில் அமர்ந்துள்ளாள் இறைவி. கரண்ட மகுடமும் கண்ணியும் காணப்படுகின்றன. இடக்கையில் மலரும் வலக்கையில் சின்முத்திரையும் காணப்படுகின்றன.

கார்த்திகேயனி என்றழைக்கப்பட்டுப் பின்னல் காத்யாயனி என்று திரிபுற்றிருக்கலாம். (சுசீந்திரம் கோயிலிலுள்ள

விநாயகரின் சக்தி வடிவச் சிற்பம் கணேசனி என்று அழைக்கப்படுவது ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கது)

இச்சிற்பம் 16-17ஆம் நூற்றுண்டுகளுக் குரியதென்று தோன்றுகிறது. முதல் திருச்சுற்றின் வடபுறம் வைக்கப்பட்டுள்ளது.

### தாண்டவமூர்த்தி

வலது பாதம் மடக்கி இடப்பாதம் உயர்த்தி, இடது முழங்கால், நீட்டிய இடக்கரத்தில் படும்படி ஆடுகின்ற இவ்வுருவம், மழுவாடீஸ்வரர் கோலத்தைப் பார்த்துப் படைக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆயினும் இவ்வுருவத்தில் உக்கிரத் தன்மை காணப்படவில்லை. ஏதோ விளையாடுகின்ற வேகத்தில் காலுயர்த்தியாடுவது போலக் காணப்படுகின்றது. தவிர, அளவிலும் இச்சிற்பம் சிறியது. சுமார் இரண்டடி உயரப் புடைப்புச் சிற்பம். சோழர் காலத்ததாகலாம். கார்த்திகேயனி சிற்பத்தையடுத்து வைக்கப்பட்டுள்ளது.

### அர்த்தநாரி

குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பழமையான சிற்பமில்லாவிட்டாலும் வலப்புறம் பெண்ணைத் தாங்கிய மாதொருபாகன் உருவமிது வென்பது புதுமை. இதுபோன்ற சிற்பங்கள் திருவையாறு, திருவேதிக்குடி போன்ற தலங்களில் உள்ளன எனத் தெரிகிறது. வலது பாதம் தூக்கியாடும் நடராஜர், வலம்புரி விநாயகர் என்பதுபோல வழக்கத்துக்கு மாறுபட்டதாயிருக்கட்டுமே என்ற எண்ணத்தில் படைத்திருக்கலாம்.

ஜுரேஸ்வர் சன்னிதியின் பின்புறம் இச்சிற்பம் பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளது.

### சப்தமாதர்

முதல் திருச்சுற்றின் தென்புறம் சப்தமாதர் சிற்பத் தொகுதிகள் இரண்டு உள்ளன. இவையிரண்டுமே காலத்தாற் பிற்பட்டவையாகும். கி.பி. 17-18ஆம் நூற்றுண்டைச் சார்ந்தவை. தனித்தன்மை உடையவையல்ல.

## உதிரிச் சிற்பங்கள்

கோயிலினுள் சில சிற்பங்கள் கவனிப்பாரற்றும் கிடக்கின்றன. இரண்டாம் திருச்சுற்றின் கன்னிமூலையில் ஒரு விநாயகர் சிற்பம் உள்ளது. கையும் காலும் சிறிது உடைந்துள்ளது. வேறு சில சிற்பங்கள் ஆங்காங்கு எடுத்து நிறுத்தப்பட்டுள்ளன. மூன்றும் திருச்சுற்றுச் சுவரில் பொருத்திக் கட்டப்பட்டுள்ளது ஒரு நடராஜர் சிற்பம். அருமையான சோழர் காலச் சிற்பம். ராஜராஜன் காலத்ததாக இருக்க வேண்டும்.

மூன்றும் திருச்சுற்றின் வடகிழக்கில்—சுந்தராம்பாள் சன்னிதிக் கருகில்-திருச்சுற்றுச்சுவரில் பொருத்தப் பட்டுள்ள இவ்வுருவம் கோயிலில் எங்கிருந்து கொண்டுவரப் பட்டது என்பது தெரியவில்லை. ஐயோ, இது இங்கே கொண்டு போடப் பட்டிருக்கிறதே என்று, காணும்போதே கழிவிரக்கம் ஏற்படுகிறது.

### அபயந்தரும் ஆடலன்

ஜடாமகுடம் குலையாது நிமிர்ந்து நிற்க, வலக்காலைச் சிறிது வலப்புறம் திருப்பி மடக்கி, இடக்காலை இடது புறமாக முற்றிலும் திருப்பி, இடுப்பின் உயரத்துக்குத் தொடையினை உயர்த்தி ஆடுகின்ற அந்தக் கோலம் நம் இதயத்தின் எங்கெந்தப் பகுதிகளையெல்லாமோ ஊடுருவித் தொடுகிறது. உறுப்புகளில் பெண்மை நிரம்பி வழிகிறது. ஆடுகின்ற பாவத்திலோ ஆண்மையின் அலட்சியம் தெறிக்கிறது.

வலப் புறத்திலிருக்கும் இருகரங்களில் பின் கரம் உடுக்மையை லாகவமாகப் பற்றியுள்ளது. முன்கரம் கொஞ்சம் கூடச் சிரமம் மேற்கொள்ளாமல் அனைவருக்கும் அபயமளிக்கிறது. அபய ஹஸ்தத்தின் தோரணையே, காத்தல் என்பது இறைவன் மேற்கொண்டுள்ள தொழிலல்ல; அவரது இயல்பு என்று நமக்கு உணர்த்துகிறது. இந்த அபயஹஸ்தத்தைக் கல்லில் வடித்த சிற்பியின் கைகளைக் கண்ணில் ஒற்றிக் கொள்

ளத் தோன்றுமளவுக்கு இந்த பாவம் மிகமிக இயல்பாக அமைந்துள்ளது.

இடப்புறக் கரங்களில் பின்கையின் விரல்களெல்லாம் விஸ்மய முத்திரை காட்ட, முன்கை பாம்பினைப்பிடித்துள்ளது. இக்கையில் தீச்சுடருக்குப் பதில் பாம்பு இடம் பெற்றிருப் பதற்கும் ஏதேனும் காரணம் இருக்கவேண்டும்.

"சாற்றிடும் அங்கியிலே சங்காரம்" என்றபடி, தீ சம் ஹாரத் தொழிலைக் குறிப்பது. பாம்போ ஆன்மாவைக் குறிப் பதாகும். எனவே நடைபெறும் தொழில், அழித்தலல்ல; காத்தலே என்பதனை இது காட்டுவதாக மயிலை சீனி. வேங்கட சாமி கருதுகிறார்.8

இந்த அடிப்படையில், இத்தாண்டவம் சந்தியாதாண்ட வம் என்றும் புஜங்கலலிதம் என்ற பிரிவைச் சேர்ந்ததென்றும் அவர் முடிவு கொள்கிறார்.

தாண்டவத்திற்கேற்பக் குடமுழா இசைப்பவன் காலின் கீழ் சித்திரிக்கப்பட்டுள்ளான்.

குலையாமலிருக்கும் சடை; ஒயிலாக விரியும் விஸ்மய ஹஸ்தம்; மிக மிக இயல்பாக அடியவர்களை ஆதரிக்கும் அப யக்கை; நெஞ்சு துள்ளத் துள்ள எடுத்த பொற்பாதம்; ஸ்திதப் பிரக்ஞனாக நின்று, இயங்காமலேயே உயிர்களை இயக்கும் இந்த ஆட்டக்காரனின் சிற்பம் மட்டுமே போதும், மழபாடியின் புகழ் பாட.

இந்தத் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையிலும் சுவரில் பொருத்திக்கட்டப்பட்டுள்ளது ஒரு கூடு. இதன் மகர தோர ணத்துள் உள்ளது, எட்டுக் கரங்கள் கொண்ட நடராஜர் உரு வம் ஒன்று. இடக்கால் மடக்கி, வலக்கால் சற்றே உயர்த்தி, கீழே குள்ள பூதம் தாளந்தட்ட, முனிவர் அமர்ந்து பார்க்க ஆடும் சிறிய வடிவம். இதுவும் மேற்குறித்த சிற்பத்தின் சம காலத்தது.

## செப்புத் திருமேனிகள்

ஆடவல்லான் :

செப்புத்திருமேனிகளில் குறிப்பிடத்தக்கது நடராஜர் திருமேனியாகும். அபய, கஜஹஸ்தங்களுடன் பின்கை களில் உடுக்கையும் அழலும் ஏந்தி ஆடும் ஆடல்வல்லான் உரு வம் நேர்த்திமிக்கது. காலின் கீழ், பாம்பைப் பிடித்த முயல கன் கழுத்தை முறுக்கித் திருப்பி வினோதமாகச் சிரிக்கிறான். ஆபரணம் அதிகமில்லாத கோலத்திலும் இறைவன் உடலில் நளினம் தவழ்கிறது.

தனிப்பீடத்தில் தேவி நிற்கின்றாள். லோல, சிம்ஹகர்ண ஹஸ்தங்களுடன் (மலர்தாங்கியிருந்த கை?) கரண்டமகுடம் அணிந்துநிற்கும் சிவகாமியன்னையும் அழகுறப் படைக்கப்பட் டுள்ளாள். 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகலாம்.

இதைத் தவிர உற்சவ விக்ரக சன்னிதியில் வைக்கப்பட் டிருக்கும் திருமேனிகள் காலத்தால் பிற்பட்டவை. இவை அரியலூர் மழவராயர் செய்தளித்தவையாக இருக்கலாம். சுமார் எட்டு ஆண்டுகளுக்கு முன் அப்பர் அருள்நெறி மன்றத் தினர் செய்து கொடுத்த அப்பர் திருமேனியும் உள்ளது.

பழமையான சில திருமேனிகள், கருவறைக்கும் இந்தச் சன்னிதிக்கும் இடையிலுள்ள அறையில் நகைகளுடன் வைக் கப்பட்டுள்ளன.

இவற்றில் சோழர் காலத் தொடக்கத்தைச் சேர்ந்த விநாயகர் திருமேனியும், ஏறத்தாழ இதே காலத்தைச் சேர்ந்த காளியின் திருமேனியும் குறிப்பிடத்தக்கவை.[9]

---

1 "கல்வெட்டுகள்" பகுதியின் தொடக்கத்தில் பார்க்க.

2 A. R. E. 49/1920

3 இந்தக் கழுகினுடைய சந்ததி ஒன்று தன் முதாதை போட்ட எலும்பை இன்றுவரை தேடுவதாகவும், அதற்காகத் தினமும் கோபுரத்திற்கு வந்துவிட்டுப் போகும் என்றும், மக்கள் பேசிக் கொள்கிறார்கள். இதற்கேற்ப மிகப் பெரிய கழுகொன்று

அடிக்கடி கோபுரத்திற்கு வந்துவிட்டு எங்கோ பறந்து சென்று விடுகிறது.

4 வலமல்கு வெண்மழு வொன்றேந்தி மயானத் தாடலீர்

–திரு.2. பதி.192 பா 6

சூலமோடொண் மழு நின்றிலங்கச் சுடுகாடிடமாக ஆடும்

–திரு.3. பதி.359, பா 5

நிழல் திகழ் மழுவொடு...சுடலையிலாடுவர்

–திரு I, பதி·77, பா.6

5 S.I.I. V 650.

6 இந்த துர்க்கையை டக்ளஸ் பேரட் தொடக்க காலச் சோழர் சிற்பமாகக் கருதுகிறார். Early Cola Architecture and Sculpture-Douglas Barret p.54

7 ibid. p. 54

8 இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம் பக்,59–60.

9 இந்தச் செப்புத் திருமேனிகள் வைக்கப்பட்டிருக்கும் அறை இரட்டைப்பூட்டு இடப்பட்டு, ஒரு பூட்டிற்குரிய சாவி, மாவட்டத் துணைப்பதிவாளர் (Sub Registrar) அலுவலகத்திலுள்ளது,

## ஓர் அறிமுகம்

### அறிந்ததும் அறியாததும்

கோயிலில் 140-க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் "தென்னிந்தியக் கல்வெட்டுகள்" தொகுதி ஐந்தில், 627-லிருந்து 660 வரையுள்ள 34 கல்வெட்டுகள் முழுமையாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. 1920-ஆம் ஆண்டுக்கான கல் வெட்டு ஆண்டறிக்கையில் (A.R.E.) 103 கல்வெட்டுகளின் குறிப்புரைகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்த அறிக்கையி லுள்ள ஐந்து கல்வெட்டுகள் ராஜகேசரிவர்மனை ஆதித்தனு டையவை யாதலால் "தென்னிந்தியக் கல்வெட்டுகள்" தொகுதி பதின்மூன்றில் முழுமையாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இந்த ஐந்து கல்வெட்டுகளில் ஒன்று, தேவி கோயிலின் முன்பிருந்த இடிந்த மண்டபத்திலிருந்ததாகத் தெரிகிறது. அந்த மண்ட பம் இப்போது இல்லை. முக்கியமான செய்தியைத் தாங்கி யுள்ள அந்தக் கல்வெட்டைக் கண்டுபிடிக்க இயலவில்லை.

அதுபோலவே, தொகுதி ஐந்தில் கல்வெட்டாகப் பதிப் பிக்கப்பட்டுள்ள ஒரு கல்வெட்டு கோயிலின் இரண்டாந் திருச் சுற்றிலிருந்த இடிந்த மண்டபத்திலிருந்ததாகக் குறிப்பிடப்பட் டுள்ளது. இப்போது முற்றிலும் சிதைந்துபோய்விட்ட அந்த நெல்குத்தி மண்டபத்தில் முதல் ராஜராஜன் காலத்திய அந்தக் கல்வெட்டு இல்லை.

1920-ஆம் ஆண்டைய கல்வெட்டறிக்கையில் வெளிவந் துள்ள பரகேசரிவர்மனின் கல்வெட்டுகள் 10, "தென்னிந்தியக் கல்வெட்டுகள்" தொகுதி 13-இல் முழுமையாகப் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

தொகுதி ஐந்தின் 642-ஆம் கல்வெட்டின் முற்பகுதி, தொகுதி மூன்று, பகுதி இரண்டில் 79-ஆம் எண் கல்வெட் டாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

மீளக்கல்வெட்டுவிக்க ....

ராஜராஜ சோழனின் 28-ஆம் ஆட்சியாண்டில் கோவில் விமானம் புதுப்பித்துக் கட்டப்பட்டது. அப்போது, உண்ணு ழியின் சுவர்களிலிருந்த கல்வெட்டுகளையெல்லாம் ஏட்டில் எழுதிக் கொண்டார்கள். இதனை,

> "..... திருமழுவாடியுடையார் ஸ்ரீவிமானம் வாங் கித் திருக்கற்றளி யெடுக்க வென்று உடையார் ஸ்ரீராஜ ராஜதேவர் அருளிச்செய திருக்கற்றளி எடுக்க ஸ்ரீவிமானம் வாங்கி இஸ்ரீவிமானத்துள்ள கல்வெட் டுப்படி பொத்தகத்தில் சொர்ப்பிக்கவென்று அதிகாரி கள் இருமுடிசோழமூவேந்தவேளார் நியோகமும் மும்முடிசோழபிரமாதிராயர் நியோகமும் ...."

என்று செல்லும் கல்வெட்டுத் தொடரால் அறியலாம்[1] பொத்தகத்தில் எழுதப்பட்ட கல்வெட்டுகள் மீண்டும், கோயில் விமானம் புதுப்பிக்கப்பட்டுக் கற்றளியாக எழுப்பப்பட்டபின் பொறிக்கப்பட்டன. இதனை ராஜேந்திரனின் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறுகிறது.

"... திருமழுவாடி உடையார் விமானம் முன் வாங்கிச் செய்கிறபோது இஸ்ரீவிமானத்துள்ள கற்படிமாற்று சொர்த்த பொத்தகப்படி மீளக் கல்வெட்டுவிக்க வென்று தண்டநாயக்கன் உய்யக்கொண்டான் வளநாட்டு வெண்ணாட்டு பிரஹ்மதேயம் கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலத்து நராக் கண் இராமன் அருமொழியான உத்தம சோழ பிரஹ்மமாரா யன் ஓலை தமக்காக ... கணக்கினாலும் கல்வெட்டு விதிதபடி முன்பு கல்வெட்டு சொர்த்த பொத்தகப்படி ..." என்று, முடிவுறாத அந்தக் கல்வெட்டு கூறிச் செல்கிறது.[2]

உள்ளது உள்ளபடி

இவ்வாறு மீண்டும் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் சில பிழைகள் நேர்ந்துள்ளன. முன்பிருந்த முறைப்படி பொறிக்கப்படாமல், இடைவெளியின்றித் தொடர்ச்சியாக உண்ணுழியின் இடப்புற, பின்புறச் சுவர்களின் பட்டி, ஜகதி,

இவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. முன்னோர்களின் மொழி களுக்கு உரிய இடத்தைக் கொடுத்துவிடவேண்டுமென்ற "செயல்-நேர்மை" யை நாம் அறிந்து மகிழ்ச்சி கொண்டா லும்கூட, அது குறையற நிறைவேற்றப்படவில்லை என்பதைச் சுட்டிக் காட்டத்தான் வேண்டியிருக்கிறது.

எழுத்தமைதியிலும் ராஜராஜன் கால இயல்புகள் கலந்து காணப்படுகின்றன. எழுத்துகளைச் சரியாகப் புரிந்து கொள்ளமுடியாத இடங்களில் "கண்டபடியே" பொறித்து விட்டிருக்கிறார்கள். உதாரணமாகக் கோப்பரகேசரிவர்மனின் ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டில் (A.R.E. 3/1920), 'தஞ்சாவுட் கூற்றத்து தஞ்சாவுர்' 'சாவாமூபேராஇ' என்ற சொல் வடிவங் கள் காணப்படுகின்றன. மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டில் (A .R. E. 8/1920), "பொய்கைநாட்டு கீழ்பிலாற்று தெவதாந ஸூஷெயம் கலியமங்கலம்" என்பது "பொரை நாட்டு கீழ் பிலாற்று தெவதாந ஸுஷெயம்" என்று எழுதப்பட்டுள்ளது.

### அமைதிகளின் சேர்க்கை

மூன்றாம் ராஜராஜ சோழன் காலத்தில் அபிஷேக நீர் வெளியில் வருவதற்காக அமைக்கப்பட்ட பழைய கோமுகம் மாற்றப்பட்டுப் புதிது ஒன்று செய்து பொருத்தப்பட்டிருக்கி றது. அங்கிலியில் கோமுகத்தின் மேலுள்ள பட்டியின் கல் லும் மாற்றப்பட்டிருக்கிறது. மாற்றப்பட்ட கல்லிலிருந்த கல் வெட்டுப் பகுதியைப் புதிய கல்லிலும் பொறித்துப் பொருத்தி விட்டிருக்கிறார்கள். அதனால் ஒரே கல்வெட்டில் வேறு-சற்று வளர்ச்சியுற்ற-எழுத்தமைதி இடையில் புகுந்து நிற்பது விசித் திரமாக இருக்கிறது. உதாரணமாக "மதிரைகொ" என்பது வரை முற்பட்ட எழுத்திலும் "ண்ட கோப்பரகேசரிபன் மர்க்கு" என்பது வேறுபட்ட எழுத்திலும் அமைகின்றன. (கல்வெட்டு: A.R.E. 5/1920) எழுதவேண்டிய எழுத்துகளை எழு துவதற்கு இடம் போதாத நிலையில் சில எழுத்துகள் விடப் பட்டும் உள்ளன. ஊர்ப் பெயர், "திருமழுடி" என்று எழு தப்படுவதற்குத்தான் ஒரு கல்வெட்டில் இடமிருந்திருக்கிறது. (கல்வெட்டு: A.R.E. 6/1920).

வாழ்வும் தேய்வும்

ராஜராஜனுக்குப் பின் ராஜேந்திரன் முதலிய சோழர் கல்வெட்டுகள் நிறைந்த அளவில் பொறிக்கப்பட்டுள்ளன. மூன்றும் ராஜராஜனின் கல்வெட்டுகள், ஹொய்சள வீரராம நாதன் கல்வெட்டுகள் இவை சமஅளவில் மிக்குநிற்கின்றன. பாண்டியர்களில் சடையவர்மன் சுந்தரபாண்டியன் தொடங்கி வீரபாண்டியன், பராக்ரம பாண்டியன், மாறவர்மன் குலசேகரன் ஆகியோருடைய கல்வெட்டுகள் வகைக்கு ஒன்றிரண்டு உள்ளன.

பின்னுளைய கல்வெட்டுகளில், 15-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் வீரப்பிரதாபதேவராயருடைய கல்வெட்டு ஒன்று, இறுதிப்பகுதியில் கோனேரிதேவமகாராஜா மகாமண்டலேஸ்வரன் பசவசங்கரன், இவன் மகன் கோனேரிராயன் ஆகியோருடைய கல்வெட்டுகள் சில, 16-ஆம் நூற்றுண்டில் செவ்வப்ப மழவராய சோழகனது கல்வெட்டு ஒன்று-இவ்வாறு "சென்று தேய்ந்திறுதல்" நிலையே காணப்படுகிறது.

---

1 S. I. I. V 652

2 Ibid 651

<★>

## ஊர் பற்றிய செய்திகள்

### பொய்கைநாடும் மீய்பிலாறும்

சுந்தரசோழனுடையதென்று கருதப்படும், இராஜ கேசரிவர்மனின் 17-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருமழபாடி யைப் "பொய்கை நாட்டு தேவதானம் திருமழு[வா]டி" என்று நமக்கு அறிமுகம் செய்கிறது.[1]

திருமழபாடி பொய்கை நாட்டைச் சேர்ந்திருந்ததென்ப தற்குக் கிடைக்கும் முதலாவது நேரடிச் சான்று இதுவே என் றாலும் பொய்கை நாடு என்ற பிரிவையும் அதில் உட்பட்டி ருந்த வட்டநார்குடி என்ற பிரமதேயத்தையும், ஆதித்தசோழ னின் 23-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலேயே பார்க்கி றோம்.[2]

இப்பொய்கை நாட்டில் கிழ்பிலாறு, மீய்பிலாறு என்று இரு பிரிவுகள் இருந்தன. மதிரைகொண்ட கோப்பரகேசரி வர்மனை முதற்பராந்தகனின் 20-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் கிழ்பிலாற்றைச் சேர்ந்த சிவண்டூர் என்ற ஊர் குறிப்பிடப்படு கிறது.[3]

"பொய்க நாட்டு மிய்பிலாற்று தேவதானம் திருமழு வாடி" என்று கோப்பரகேசரிவர்மனின் 18-ஆம் ஆண்டுக் கல் வெட்டில் குறிப்புக்காணப்படுவதுகொண்டு, திருமழபாடி மீய் பிலாற்றில் அடங்கியிருந்த செய்தியை அறிகிறோம்.[4]

ராஜராஜனின் ஆட்சியில் வளநாடு என்ற பிரிவு நடை முறைக்கு வந்தபின் வளநாட்டுக்கு உட்பட்ட நாட்டுப் பிரி வாகப் பொய்கைநாடு நீடிக்கிறது; மீய்பிலாறு மறைந்து விடுகிறது.

### வளநாடுகளும் பொய்கைநாடும்

ராஜராஜனின் 28-ஆம் ஆண்டுக் (கி.பி. 1013) கல்

வெட்டு[5] "ராஜேந்திரசிம்ஹ வளநாட்டுப் பொய்கைநாட்டு தேவதானம் திருமழுவாடி" என்று குறிப்பிடுகிறது. இப் பிரிவு ராஜேந்திர சோழன் காலத்திலும் பின்பற்றப்படுகிறது. காவிரியின் வடகரை என்பதனைக் குறிக்கும் வடகரை என்ற சொல்லும் இப்பெயரின் முன் இணைந்திருப்பதுண்டு.

முதற் குலோத்துங்கனுடைய ஆட்சியில் வளநாட்டின் பெயர் மும்முறை மாற்றப்பட்டுள்ளது.

15-ஆம் ஆட்சியாண்டு: குலோத்துங்க சோழ வளநாடு[6]

29-ஆம் ஆட்சியாண்டு: கேயவினோத வளநாடு[7]

45-ஆம் ஆட்சியாண்டு: தியாகவல்லி வளநாடு[8]

இரண்டாம் ராஜராஜனால் வளநாட்டின் பெயர் "ராஜ ராஜவளநாடு" என்று மாற்றப்பட்டது.[9]

மீண்டும் இரண்டாம் குலோத்துங்கனின் ஆட்சியில் இது "திரிபுவன முழுதுடைய வளநாடு" என்று மாற்றப்பட் டது.[10] அவனது நான்காம் ஆண்டுக் கல்வெட்டு இப்பெய ரைக் கூற, 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு "புவனமுழுதுடைய வளநாடு" என்று, சற்றுச் சுருக்கிக் கூறுகிறது.[11]

இதன் பின் ராஜராஜ வளநாடு என்ற பெயர் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஹொய்சளர், பாண்டியர், 15-ஆம் நூற் றூண்டில் ஆண்ட விஜயநகர மன்னர் ஆகியோரும் இப்பெய ரையே ஏற்றுள்ளனர். இது பண்டைய மரபுப்படியே காவிரி யின் வடகரையில் விளங்கிய ஆட்சிப்பிரிவாகும்.

கி.பி. 1433-ஆம் ஆண்டைச் சேர்ந்த, மகாமண்டலேஸ் வரன் வீரப்பிரதாபதேவ மகாராயரின் கல்வெட்டில் "வட கரை இராசஇராச வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழு வாடி" என்ற தொடர் இடம் பெற்றுள்ளது.[12]

16-ஆம் நூற்றூண்டைச் சேர்ந்த தலபுராணம் வளநாட் டைக் கைவிட்டு, பொய்கை நாட்டைப் போற்றுகிறது.

## ஊரில் சில தெருக்கள்

**வயிச்சிறுயத பெருந்தெரு:**

இது வியாபாரிகள் வசித்த தெருவாக இருக்கவேண்டும். மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டில் இத்தெரு குறிப்பிடப் படுகிறது.[13]

**விக்கிரமசோழன் திருவீதி:**

ஊரின் மையப்பகுதியில் சண்பங்குழி (கோரைப்புதர்) யைத் தூர்ப்பித்து உருவாக்கப்பட்டது இத்தெரு. இறைவர் திருவுலாச் செல்லும் தெருவாக இருக்கவேண்டும். மூன்றும் ராஜராஜன் கல்வெட்டு இச்செய்தியைக் கூறுகிறது.[14]

**மடைவிளாகம்:**

விளாகம் என்ற சொல்லுக்கேற்பக் கோயிலைச் சுற்றி லும் மடவிளாகம் இருந்திருக்கிறது. சிவாச்சார்யர்கள், தவசி கள், சிவயோகிகள் இங்கு வாழ்ந்திருப்பர். “மேலை திருமடை விளாகத்து மேல் சிறகில் மேற்கு நோக்கிய தெரு” வினை மூன் றும் ராஜராஜன் கல்வெட்டு சுட்டிக் காட்டுகிறது.[15] மட விளாகம் எவ்வளவு விரிந்து பரந்திருந்திருக்கிறது என்பதற்கு இந்த விவரமே சான்று.

## கோயில்கள்

**பொய்யாத்தமிழூர் விநயகப்பிள்ளையார் கோயில்:**

“விக்கிரமசோழன் திருவிதி மேலைத்திருவிதி வடதலை யில்” இவர் எழுந்தருளியிருந்தார்.[16]

**உடையார் சோமநாதிஸ்வரமுடையார் கோயில்:**

மேலைத் திருமடை விளாகத்தில் இந்தக் கோயில் இருந் தது.[17]

**சுற்றியிருந்த சிற்றூர்கள்**

பல சிற்றூர்கள், பிடாகை எனப்பட்ட குடியிருப்புகள், கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை கண்டரா

தித்தச் சதுர்வேதிமங்கலத்து மகாசபையின் அதிகார வரம்புக்கு உட்பட்டவை.

உலகுய்ய வந்த சோழ நல்லூர் (79/1920)
எடுத்த பாதநல்லூர் (தேவதானம்) (S.I.I. V 649)
கருணாகரநல்லூர் (ibid 650)
குலோத்துங்க சோழன் ஆயக்குடி (38/1920)
பிடாகை திருவெள்ளறை நல்லூர் (திருநாமத்துக் காணி) (92/1920)
நாடறிபுகழ் நல்லூர் ((S.I.I. V 632)
ராசேந்திர சோழநல்லூர் (ibid 653)

கண்டராதித்தச் சதுர்வேதிமங்கலத்தில் மஹிமாபரணச் சேரி -என்ற சேரி இருந்தது. அதன் தென் பிடாகையாக ஆதித்தசோழனின் இயற்பெயரால் உருவாக்கப்பட்ட கோதண்டராமநல்லூர் என்ற பகுதி இருந்தது. தேவதானம் எதிரிலிசோழமங்கலம் என்ற பகுதி இந்தக் கோதண்டராம நல்லூரிலிருந்து பிரிந்த பகுதியாகக் குறிப்பிடப்படுகிறது.[18] இவ்வாறு பிரிந்ததாகக் கூறப்படும் பகுதிகள் மங்கலங்களாக இருப்பது கொண்டு இவை தனித்த, பிராமணக் குடியேற்றங்கள் எனத்தெரிகிறது.

நித்த விநோத நல்லூர்ப் பிறிந்த ராஜகம்பீரன்மங்கலம் (29/1920)

தேவதானம் கருணாகரநல்லூர்ப் பிறிந்த குலோத்துங்க சோழமங்கலம் (S.I.I. V 650)

நாடறிபுகழ்நல்லூர்ப் பிறிந்த நித்தவிநோதமங்கலம் (ibid 632)

என்பவை இத்தகைய மங்கலங்கள்.

உலகுய்யவந்த சோழநல்லூர்ப் பிறிந்த பொன்னார்மேனி விளாகம் என்ற பகுதியும் குறிப்பிடப்படுகிறது.[19] இது "மடைவிளாகம்" போன்ற பிரிவாக இருக்கவேண்டும்.

## காமக்கோட்டங்கள்

ஊரிலும் ஊரைச் சுற்றிலும் சில தேவி கோயில்கள் இருந்தனவென்று அனுமானிக்க முடிகிறது. ராஜராஜனின் கல்வெட்டொன்றில் உள்ளூரிலிருந்த மனையொன்று "காமக் காணி அனந்தநாச்சன்" என்பவனுக்குரியதாகக் கூறப்பட் டுள்ளது (S.I.I. V No. 660). இவன், ஊரைச் சேர்ந்த காமக் கோட்டத்தின் பூசைப் பொறுப்பை ஏற்றிருந்தவனாக இருக்க லாம்.

### காமக்கோட்டையான கலையமங்கலம்

பொய்கை நாட்டுக் கீழ்பிலாற்றைச் சேர்ந்த பிரமதேயம் இது. இவ்வூரில் ஊர்க்காரியங்கள் குறித்து முடிவெடுக்கும் அதிகாரம் பெற்ற சபை இருந்திருக்கிறது. பரகேசரிவர்ம னின் கல்வெட்டொன்று, "ஸ்ரீகார்யமாராய்கின்ற காமக் கோட்டையான கலையமங்கலத்து நேர்வாய்ப்போன நிலம் பனையூர் மேலைச்சேரி" என்று குறிப்பிடுவதால் இவ்வூர் 'காமக் கோட்டை' என்று அழைக்கப்பட்டதும், இவ்வூருக்கருகில் பனையூர் என்ற ஊர் இருந்ததும் தெரியவருகின்றன.[20] (S.I.I. Vol. XIX No. 187)

இவ்வூர் விக்கிரமசோழன் காலத்தில் நந்திகேஸ்வர தேவர்க்குத் தேவதானமாக அறிவிக்கப்பட்டது.

"...திருமழுவாடியுடையார் தேவதானம் கலையமங்க லம் காணியாளரின்றி தேவரே காணியாகவும் இக்கலையமங்கல முடைய பிராமணன் தேவற்கே காணியாக தேவர் ஸ்ரீபா தத்தே நீர் வார்த்துக் குடிநீக்கி இத்தேவர் தானமாக்கி தேவரே அனுபோவித்து வந்தமையில்..." என்று கல்வெட்டு கூறுகி றது (S.I.I. V 642).

மூன்றும் ராஜராஜன் காலத்தில் இவ்வூர் 'ராஜராஜநல் லூர்' என்று பெயர் பெற்றது (A.R.E. 92/1920.)

### புனல்வாயில்[21]

புனல் வாயில் என்ற ஊரிலிருந்த "ஸ்ரீகோயில் கணபதி



அழகிய பிள்ளையார்,
(சுந்தர விநாயகர்)
10-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.





நந்தி — மகாகாளன்
(துவாரபாலகர்கள்)
10-ஆம் நூற்றுண்டு



சோமாஸ்கந்தர் திருமேனி
16-ஆம் நூற்றாண்டு.



சண்டேசுரர் திருமேனி
16-ஆம் நூற்றாண்டு



ஆடவல்லான்
13-ஆம் நூற்றுண்டு
சிவகாமி—பிற்காலம்



சிவகாமி—16-ஆம் நூற்றுண்டு



பனையூர் பிடாரி திருமேனி,
16–ஆம் நூற்றாண்டு.



கணபதி திருமேனி,
16-ஆம் நூற்றாண்டு.



மழுவாடி (காலாந்தகமூர்த்தி)
9-ஆம் நூற்றாண்டு.



கரியுரிநாதர்
9-10-ஆம் நூற்றாண்டு



நாட்டிய கரணம் (தாண்டவமூர்த்தி)
10-ஆம் நூற்றாண்டு



வேணுகோபாலன்
விஜயநகர தொடக்ககாலம்



விஷ்ணு
10-ஆம் நூற்றாண்டு

கண்டராதித்தம்

படாரர்''க்கு மார்கழித் திருவாதிரையன்று தூணி நானுழி அவல்அமுது செய்விப்பதற்காகச் செய்யப்பட்ட ஏற்பாட்டினைப் பற்றி ஆதித்தசோழனின் கல்வெட்டொன்று கூறுகிறது. இக்கல்வெட்டிலேயே ''இவ்வூர்க் காமக்காணி ஐயாறன் தேவஸ்ஸாமி, ஐயாறன் மா . . . தேவன்'' என்ற இருவர் குறிப்பிடப்படுகின்றனர். எனவே இங்கும் காமக்கோட்டம் ஒன்று இருந்திருக்கவேண்டுமென்று கருதமுடிகிறது. (S.I.I. XIII 55)

புனல்வாயில், விக்கிரமசோழன்சந்திமங்கலம் என்ற பெயரில் தேவதானமாக அறிவிக்கப்பட்டது. இச்செய்தியைக் கூறும் ஹொய்சள வீரசோமேஸ்வரன் கல்வெட்டினல், திருமழபாடிக் கோயிலில் நித்தியவழிபாட்டின் ஓர் அங்கமாக நிகழ்ந்த விக்கிரமசோழன் சந்திக்காக இவ்வூர் தேவதானமாக அறிவிக்கப்பட்டதெனத் தெரிகிறது. (S.I.I. V. 629)

நிலங்களும் நீரோட்டங்களும்

குலோத்துங்கசோழமங்கலத்திலிருந்த, ''திருப்புத்தூரான்'' என்று பெயரிடப்பட்டிருந்த நிலம், (S.I.I. V 631)

''பசலைவாய்'' என்ற நிலம், (92/1920)

நித்தவிநோத மங்கலத்தில் உலகுடைய நாயனர் பிரசாதக் காணியாகக் கொடுக்கப்பட்ட வலைச்சேரிச் செய், (22/1966)

அவ்வூரிலேயே இருந்த ''வளையமழகிய பெருமாள்'' என்னும் பெயருடைய நந்தவனம், (S.I.I. V 632)

இரவிகுல சூளாமணிவதி (ibid 641)
கண்டராதித்த வதி (ibid 653)
சோலைப்பிரான் வதி (92/1920)
சோழமாதேவி வதி (20/1920)
திருவெள்ளறை வதி (S.I.I. V 649)

முதலிய வதிகள்,

கணபதி வாய்க்கால் (20/1920)
குஞ்சிரமல்ல வாய்க்கால்[22] (92/1920)

குலமாணிக்க வாய்க்கால் (S.I.I. V 632)
கொந்தக்க மாதேவி வாய்க்கால் (ibid 649)
சுந்தரசோழ வாய்க்கால் (ibid 632)

ஆகிய கால்கள், கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன.

செம்பியன்மாதேவிப் பேரேரி

இப் பேரேரி பற்றிச் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இந்த ஏரியில் ராஜராஜன் தூம்பு என்ற பெயருடைய மதகு இருந்தது. இம்மதகு வழியாக ஓடிய வாய்க்கால் ராஜராஜன் வாய்க்கால் எனப்பட்டது.(85/1920)

இப்பேரேரி, முதல் ராஜேந்திரன் காலத்தில் திருத்திக் கரை கட்டப்பட்டது.[24]

ஊருக்கு வேறு பெயர்

மூன்றும் குலோத்துங்கனுடைய 11-ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருமழபாடிக்குத் 'தினசிந்தாமணிநல்லூர்' என்ற புதிய பெயரைச் சூட்டுகிறது [25]

"உள்ளூர் தினசிந்தாமணிநல்லூர் வயிச்சியநாதப் பெருந்தெருவிலிருக்கும்" ஒருவனை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. இதன்பின் மூன்று கல்வெட்டுகளில் இப்பெயர் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவை மூன்றும் ராஜராஜனின் கல்வெட்டுகளாகும்.

4-ஆம் ஆட்சியாண்டு: திருமழபாடி உடையார் தேவதானம் உள்ளூர் தினசிந்தாமணிநல்லூர்[26]

7-ஆம் ஆட்சியாண்டு: உள்ளூர் திருமழபாடியான ஜினசிந்தாமணிநல்லூர்[27]

26-ஆம் ஆட்சியாண்டு: உள்ளூர் திருமழபாடியான சினசிந்தாமணிநல்லூர்.[28]

ஜினசிந்தாமணி என்பது மதுராந்தகி, புவனமுழுதுடையாள், அவனிமுழுதுடையாள் முதலிய பட்டப் பெயர்களு

டைய, முதற்குலோத்துங்கன் மனைவியினுடைய பெயராகும். இப்பெயர் தினசிந்தாமணி என்று ஒலித்திரிபு பெற்றும் வழங்கும்.

பல ஊர்கள், சதுர்வேதிமங்கலங்கள் இவளுடைய பெயரில் உருவாக்கப்பட்டன; அல்லது பெயர் சூட்டப்பட்டன.

சித்தர்கள் என்றழைக்கப்பட்ட சமணர்கள் மலிந்து வாழ்ந்த இடங்கள் சித்தமலி என்றும், சித்தமல்லி, சுத்தமலி என்ற பாட பேதங்களாலும் அழைக்கப்பட்டுள்ளன. அது போலவே, சமணத்தைப் பூர்வ சமயமாகக் கொண்டிருந்து, மாறிவரும் சமுதாய, அரசியல் நிலைகளுக்கிசைந்து தம்மை வைதிக சமயத்துடன் ஐக்கியப்படுத்திக்கொண்ட மக்கட்பிரிவினரின், குறிப்பாக வணிகசமூகத்தினரின், நெருக்கத்தையும் ஆதிக்கத்தையும் காட்டுவதாக, இப் பெயர்சூட்டல் நிகழ்ந்திருக்கலாம்.

ஊரோடும் கோயிலோடும் வணிகர்கள் தொடர்பு அதிகரித்து வருகின்ற சோழர் கால இறுதிக் கட்டத்தில் ஊருக்கு இந்த மாற்றுப் பெயர் இடப்பட்டிருப்பது[29] நம்மைச் சிந்திக்க வைக்கிறது.

உள்ளூரில் சுந்தரசோழனின் தமக்கையாகிய குந்தவைப் பிராட்டியாரால் ஜினலயம் ஒன்று கட்டப்பட்டதாக ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[30] எனவே சுந்தரசோழனுடைய ஆட்சிக் காலத்திலேயே ஊரில் சமணமதம் நிலவியிருந்துள்ளது; வணிகர்களது ஆதிக்கம் வளர வளர, அவர்களது பூர்வ சமயமாகிய சமணத்தின் நினைவு எஞ்சல்கள், (relics) ஜினசிந்தாமணிநல்லூர் என்ற, இந்த ஊர்ப்பெயர்மாற்றம் போன்றவற்றின் மூலம், தம்மை அடையாளங் காட்டிக் கொள்கின்றன எனலாம்.

---

1 S. I. I. XIII 275

2 Ibid 301

3 Ibid 654

4 Ibid XIX 261

5 Ibid V 652

6 A. R. E. 93/1920

7 Ibid 32

8 S. I. I. V 640

9 A. R. E. 95/1920

10 Ibid 35

11 Ibid 19

12 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 44/1920

13 ,, Ibid 82

14 ,, Ibid 91

15 ,, Ibid 91

16 ,, Ibid 38

17 ,, Ibid 91

18 ,, Ibid 20

19 S. I. I. V 632

20 திருமழபாடிக்கு அருகில் பனையூர் என்ற ஊர் உள்ளது. அங்கு பந்தாளம்மன் என்ற பெயருடைய தேவி கோயில் ஒன்று உள்ளது. இந்தப் பந்தாளம்மன் கோயிலில் நடைபெறும் திருவிழாவில் திருமழபாடிக் கோயிலைச் சேர்ந்த பந்தாளம்மன் செப்புத் திருமேனி பிரதான இடம் வகிப்பதாகக் கூறப்படுகிறது. ஆயினும் இதுபற்றி விரிவாக விசாரித்தறிய முடியவில்லை. கோயிலில் இருக்கின்ற காளி விக்ரகம் ஒன்று, 10–ஆம் நூற்றாண்டையோ, அதற்கு முற்பட்ட காலப் பகுதியையோ சேர்ந்தது. இந்த விக்ரகம் கலைய மங்கலத்துக் காம கோட்டத்தைச் சேர்ந்ததென்பது ஐயத்துக்கு இடமின்றி நிறுவப்படுமானால் பனையூர் பந்தாளம்மனின் பழமை தெளிவுறலாம்.

21 கொள்ளிடத்தின் மறு கரையிலுள்ள இவ்வூர், புனவாசல் என்று அழைக்கப்படுகிறது.

22 'குஞ்சர மல்லன்' என்பது முதல் பராந்தகனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று. கொள்ளிடத்தின் கிளையாறாகிய மண்ணியாறு சோழர்காலத்தில் இப்பெயரால் வழங்கப்பட்டது.

(பார்க்க: பிற்காலச் சோழர் சரித்திரம்-பாகம் 1, பக்கம் 56 அடிக்குறிப்பு.)

23 'செம்பியன் மாதேவிப் பேரேரி கல்விக் கரையட்டிக் கொண்டமையில்...' S. I. I. V 638

24 ஊருக்கருகில் வேறு ஏரி ஏதுமில்லை. ஏரியின் பெயர், இப்போது, தானிருக்கும் ஊரின் பெயரையொட்டி வழங்குகிறது. எனினும் அருகில் 'செம்பியன் மாதேவிக் குடி' என்ற பெயரின் திரிபாகச் 'செம்பியக்குடி' என்ற பெயரில் ஓர் ஊர் உள்ளது. செம்பியன் மாதேவியின் சிறப்புப் பெயரான 'குலமாணிக்கம்' என்ற பெயரிலும் ஓர் ஊர் இருக்கிறது. இவை, பெயர் மாற்றக் குறையை நிவர்த்தி செய்துவிடுகின்றன.

25 பார்த்துப் படிக்கப்பட்டது A. R. E. 82/1920

26 ,, Ibid 92

27 ,, Ibid 91

28 ,, Ibid 22

29 ''சோழர்காலச் சமுதாயநிலை'' பார்க்க.

30 S. I. I. Vol. I No. 67, 68

<☆>

# சோழர் காலச் சமுதாயநிலை*

**மக்கள் - அரசனின் சொத்து**

அரசன், காக்கின்ற கடவுளின் வடிவமாகக் கருதப்படு கின்ற நிலையைச் சோழர் கல்வெட்டுகள் தெளிவாக்குகின்றன. காக்கின்ற கடவுளான திருமாலுக்கு வழங்குகின்ற மன்னர், மன்னுர் என்ற சொற்களும், 'உலகைக் காப்பதன் மூலம் கிட்டு கின்ற புகழால் நித்தியத்துவம் பெற்றவர்' என்று இச்சொற் கள் உள்ளடக்கிய கருத்தும், மிகப்பழங்காலத்திலிருந்தே தொடர்ந்து வருபவைதாம்.[1] எனவே சுவாமி என்ற சொல் தன் சுயவடிவிலும், உடையார் என்ற மொழிமாற்ற வடிவிலும் இறைவனுக்கும் அரசனுக்கும் பொதுவில் வழங்கியது இயல்பே. இங்கு ஸ்வம் (உடைமை) என்பது மக்களையே குறித்தது என்ற விளக்கம் முதல் ராஜாதிராஜன் கல்வெட்டி னுல் கிடைக்கிறது. "நம்மை உடைய சக்கரவர்த்தி ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர்" என்கிறது அக்கல்வெட்டு.[2]

அரசமைப்புகள் நிலைபேறுடையனவாக மாற முனை கின்ற காலத்தில் சொத்துடைமையும் நிலை பேறுடையதாக மாறுகின்ற நிலையைக் காணலாம். அரசனின் தலையாய சொத்துகளான குடிமக்கள், அரசியல் நடவடிக்கைகளில் அதிருப்தியுற்று இடம் பெயர்ந்து செல்வதை மட்டும் அரசன் தடுக்காமல் இருப்பானு? "பதியெழல் அறியாப் பழங்குடிகள்" சிறப்பிக்கப்படுகின்ற மரபில் வந்த மன்னர்கள், சட்டங்களை விட்டுக் கொடுத்தாவது மக்களை மீட்டுக் கொள்ளத்தானே முயல்வார்கள்? இத்தகைய ஒரு முயற்சியைக் கண்டராதித்தத் திலுள்ள ஹொய்சள விரராமநாதனின் கல்வெட்டு தெரிவிக்கி றது.

"... இக்குடி மக்கள் புறப்பற்றிலே போகையில் இரவி தேவ தண்டநாயக்கர் குடிமக்கள் போனபடியை தேவற்கு விண்ணப்பஞ் செய்தயிடத்து திருமஞ்சனப் பெருவழிக்கு மேற்

குத்து வாய்க்காலுக்கு கிழக்கு இருக்கும்...க்கு தரிப்பாக தேவர் திரு உள்ளமானபடி மாதம் ஒன்றுக்கு தறி ஒன்று காசு எட்டாக வந்த காசு கொள்வதாக தேவர் திருவுள்ளமானார்..'' என்று நீண்ட தொடரில் அறிவிக்கிறது அக்கல்வெட்டு.[3]

ஊரிலேயே ஒன்றி வாழும் மக்கள் இடம் பெயர்ந்து செல்வது பொதுவில் ஊரின் தொழில் சமநிலையையும் வளர்ச்சியையும் பாதிக்கக்கூடுமென்பது மட்டுமின்றி, அரசாட்சியை எதிர்த்து நடக்கும் மௌனப் புரட்சியாக இவ்வகை இடப்பெயர்ச்சிகள் அமைவதாலும், இவற்றை அரசர்கள், அதிகாரிகள் தவிர்க்க முனைந்தனர். அதே வேளையில் வேற்று நாடுகளிலிருந்து நானாதேசிகளான வியாபாரிகள் வந்தால் அவர்கள் இங்குக்குடியேற ஊக்குவிக்கப்படுவது இயல்பு. மக்களுக்குத் தொண்டு புரியும் அதிகாரிகள் கௌரவிக்கப்படும் வகையில் ஊரிலேயே குடியிருப்புமனை கொடுத்துத் தங்க வைக்கப்படுவதும் உண்டென்று ஒரு கல்வெட்டால் அறிய முடிகிறது.[4]

நன்றியுணர்ச்சி என்பது உயிரினத்துக்குப் பொதுவானதுதான் என்றாலும் இத்தகைய ராஜபக்தி, தேச விசுவாசம் முதலியவற்றின் பின்னணியில் பக்தி நெறியின் வளர்ச்சியைப் பார்ப்பது பயனுடைய ஓர் ஆராய்ச்சியாக இருக்கும்.

நன்றியுணர்வின் வெளிப்பாடாக, அல்லது பக்தியுணர்வின் அடையாளமாக, இன்றும் தலைவர்களின் பெயர்களைச் சாலை முதலியவற்றுக்குச் சூட்டுவதுபோலச் செம்பியன் மாதேவி பெயரை, அளவையொன்றுக்குச் சூட்டியிருக்கிறார்கள் அக்காலத்தவர்.

### சொத்துரிமையும் சொத்துடைமையும்

தென்னிந்தியக் கோயில்கள் பெருத்த அளவில் சொத்துடைய நிறுவனங்களாக மாறும் நிலை சோழர் காலத்தில் தொடங்குகிறது. கொடைகள் இயங்குதிணைச் செல்வங்களான கால்நடை,-ஆடு, பசு-நாணய மதிப்புடைய பொன், என்றிருந்த நிலை சிறுகச்சிறுக மாற்றமுற்று நிலைத்திணைச் செல்வமான நிலம் என்ற நிலையை அடைகின்றன. விவசாயத்துக்குரிய நிலங்கள் பெருகுவதும் பல ஊர்கள் தேவதானங்களாக அறி

விக்கப்படுவதும் உடனிகழ்ச்சிகளாக அமைகின்றன. நிலப் பிரபுத்துவ வளர்ச்சியும், ஆட்சியதிகார அமைப்புகள் நிலை பேறடையும் முயற்சியும் ஒன்றுக்கொன்று உறுதுணையாகின்றன.

ராஜராஜனுக்கு முற்பட்ட கல்வெட்டுகளில், பத்துக் கல்வெட்டுகள் ஆடுகள் கொடையாகக் கொடுக்கப்பட்டதையும், இரண்டு, நிலக் கொடையையும் கூறுவன. நிலக் கொடை இரண்டும் அரசகுலப் பெண்டிரால் கொடுக்கப்பட்டவை.[5]

முதல் ராஜேந்திரன் காலத்திலேயே நந்தாவிளக்கு எரிக்கக் காசுகள் கொடையாக அளிக்கும் பழக்கம் காணப்படுகிறது.[6] மேலும் இக்காலத்தில் நிலக்கொடைகள் பெருகத் தொடங்குகின்றன. சிவயோகிகளுக்கு உணவளிப்பதற்காகப் பாழ்பட்டுக்கிடந்த நிலத்தைத் திருத்திப் பயிர்செய்த குறிப்பும் ஒரு கல்வெட்டில் உள்ளது.[7]

### உடையான்-காணியாளன்

ராஜராஜனுக்கு முற்பட்ட கல்வெட்டுகளில் 'உடையான்' என்ற சொல் தானும் காணப்படவில்லை. நில உடைமையாளனைக் (land lord) கிழவன் என்ற சொல் குறித்திருக்கிறது.[9] ஓர் ஊரில் பிறந்தவன் இன்னோர் ஊரில் அரசு அலுவல்களுக்காக வந்து குடியேறும்போது அவனுக்கு இரு ஊர்களிலும் மனையிருப்பதால் இரு ஊர்களையும் உடையவனாக அவனைக் குறிக்கும் மரபு இருந்திருக்கிறது.

ஸ்ரீமாஹேஸ்வரக் கண்காணி அவளிவநல்லூருடையான் திருமழபாடி உடையான் திருஞானசம்பந்தன், (A.R.E 91/1920) சாமுதாயக் கணக்கு நெற்குப்பை யுடையான் பட்டாலகன் திருமழபாடியுடையான் திருச்சிற்றம்பலமுடையான் திருவுண்ணாழிகைப்பிரியன், (ibid 38) போன்றவர் இதற்கு உதாரணமாக இருக்கின்றனர்.

இவ்வாறிருக்கக் காரணம், அந்தப் பதவிக்குரிய காணி (பரம்பரையுரிமை) கொடுக்கப்படும்போதே நிலமும் கொடுக்கப்படுவதுதான் என்று முடிவு செய்யலாம்.

காணி என்ற சொல் நிலத்தையும் அது தொடர்பாக ஏற்படும் பரம்பரை யுரிமையையும் குறிப்பதாகத் தேவாரத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளது.[10] நிலத்தோடு தொடர்பற்ற பரம்பரை உரிமையையும் அது பின்னுளில் குறிக்கிறது. இவ்வாறு ஸ்தூலத் தன்மையிலிருந்து முற்றிலும் விடுபட்ட அருவமான (abstract) கருத்துப்பொருளை இச்சொல் பெறுவது, மொழியியல் நோக்கில் மட்டுமின்றிச் சமூகவியல் நோக்கிலும் முக்கியமான ஒரு நிலை. சைவாசார்யக் காணி, கணக்குக் காணி போன்றவை கவனிக்கத் தக்கன.

வட்டமும் பின்னமும்

மாதத்தின் முப்பது நாள்களும் கோயிற் பூசைபுரியும் உரிமை 'முப்பது வட்டத்துக் காணி' எனப்படும். இதனை விற்க, ஒற்றிவைக்க உரிமையுண்டு.[11]

'. . . . . . உடையார் திருமழபாடிஉடையார் கோயில் முப்பது வட்டத்துக் காணியுடைய சிவப்பிராமணரில் கவுசியந் தேவன் கூத்தனுன கண்டராதித்தபட்டன் உபையங் கொண்ட விளக்காவது இக்கோயில் சிவப்பிராமணரில் நம்பி பொன்னா மேனிய் சீவயிச்சியநாதபட்டன் உள்ளிட்டார் காண இந்த வயிச்சியநாதபட்டன் விற்ற காணி கொள்ள. . . .'

இதே கல்வெட்டில் வரும் இன்னெரு குறிப்பும் பயனுடையது.

'. . . . . கண்டராதித்தபட்டன் கைக்கொண்ட ஆடு ர (1) க்கு காசு சுய அ (48) ஆக ஆடு மசூ ஐவறு ($16\frac{7}{8}$) க்கு காசு அாய (810) இக்காசு எண்ணூற்று ஒருபதும் கைக்கொண்டு இவ்விளக்கு மூன்றுமா முக்காணியும் இருபத்திரண்டாவது (அரசனின் ஆட்சியாண்டு 22) ஐப்பசி ஷஷ்டி முதல் நானும் என் மக்கள்மக்கள் சந்திராதித்தவல் நெய் அளக்கக் கடவேனாக . . .'[12]

ஒரு நந்தாவிளக் கெரிக்கத் தேவையான ஆடுகள் 90. தொண்ணூறு ஆடுகள் கொண்டு ஒரு நந்தாவிளக்கு எரிக்க

முடியுமானால் $16\frac{7}{8}$ ஆடுகள் கொண்டு எரிக்கத் தக்க நந்தா விளக்கு, $\frac{3}{16}$(·1875) என்று ஆகும். இதனை 'மூன்று மா முக்காணி' என்று குறிப்பிட்டுள்ளனர். முழு எண்ணை ஒன்று என்பதனை 'ஒரு வேலி நிலம்' என்று வைத்துக் கொண்டால் தான், ஒருவேலி என்பது 80 காணி அளவுடையது என்ற வாய்பாட்டின்படி, ·1875 என்ற பின்னம், 3 மா, 3 காணி அளவுடையது என்றவாய்பாட்டு முடிவு கிடைக்கிறது. பொது (standard) அளவையாக நிலமே கொள்ளப்பட்டிருப்பது, நிலப்பிரபுத்துவத்தின் தாக்கமோ?

## நெல்லே அளவையாக

அபிஷேகத்துக்கு அளிக்கப்படவேண்டிய பால் நானுழிக்குக் குறுணி நானுழி நெல்லும், திருப்பள்ளித்தாமத்துக்கு (திருமாலை) உரிய தும்பைப்பூ இருநாழிக்கு நானுழி நெல்லும் கணக்காகக் கொள்ளப்பட்டு நிலமளிக்கப்பட்டிருக்கிறது. இச் செய்தியை முதல் ராஜேந்திரனின் 22-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[13] நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது (பாக்கு). சோறு பொங்கும் பானை, இவற்றுக்காகவும் நெல்லையே பண்டமாற்று முறையில் அளவாக வைத்து நிலமளிக்கப்பட்ட செய்தியும் கிடைக்கிறது.[14]

இவை சோழர்காலக் கல்வெட்டுகளில் காணவியலாத அசாதாரணமான செய்திகளில்லைதான். ஆயினும், நிலவுடைமையின் தாக்கம் பன்முகப்பட்டு இயங்குவதை இவை உணர்த்துகின்றனவாதலால் குறிப்பாக நம் கவனத்தை ஈர்க்கின்றன.

## உடைமையும் உறவுகளும்

கோயில்கள் பெருமளவில் நிலவுடைமைத் தன்மை கொள்ளக் கொள்ள, அவற்றுக்கு மக்களின் தொழில்களைப் பொறுத்தவரை மறைமுகமாக வேனும் நியமன அதிகாரம் கிட்டிவிடுகிறது. இருப்பினுங்கூட அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிகளைக் கோயிலுக்குச் செலுத்துவதும், தாம் கோயிலுக்கு ஆற்றும் பணிகளுக்காக மானியம் பெறுவதும்

தான் மக்கள் கோயிலோடு கொண்டிருந்த பொருளாதார உற வின் உச்சமாக இருந்தனவே தவிரப் பொருள் பரிவர்த்தனை யில் கோயில் தலையிடவில்லை. ஊர்கள் தேவதானங்களாக இருப்பதால் இறைவனின் பிரதிநிதியாகத் திகழும் அரசமைப் புகள் வரி வசூலித்தல் போன்றவற்றில் நேரடியாகத் தலையிடா மலேயே மக்களின் தெய்வ நம்பிக்கை காரணமாகக் குழப்பங் களினின்று தம்மைக்காத்துக்கொண்டு நிலைநிற்க முடிந்தது. கோயில்கள் பொருளுற்பத்தி - பரிவர்த்தனைக் கேந்திரங்களாக மாறிவிடாத நிலையினால், பொருள் பரிவர்த்தனையையே ஜீவா தாரமாகக் கொண்ட வணிக சமூகமும் கோயில்களுடன் போட்டியின்றி ஒத்துழைத்தது.

வணிகர்கள் கோயிலுக்குக் கொடையளிப்பதும் கோயில் நிர்வாகத்தில் பங்கு பெறுவதும் சோழர் காலத்தில் அதிகரிக்கிறது. முன்பு கண்டபடி ஆடுகளுக்குப் பதிலாகப் பணம் கொடுப்பது, பணப்புழக்கம் நாட்டில் அதிகரித்திருப்ப தைக் காட்டுகிறது. நாணயங்கள் எளிதில் மாற்றத்தக்கன என்பது மட்டுமின்றி, பன்னாட்டு உறவிற்கும் (international contact) இவை உதவும். திரை கடலோடியும் திரவியந்தேடும் நானாதேசிகளான வணிகர்கள் காரணமாகத்தான், பணப் புழக்கம் நாட்டில் அதிகரிக்க முடியும்.

பொருள் பரிவர்த்தனையில் கோயில்கள் வணிகர்களோடு போட்டியிடாதது மட்டுமல்ல; அவர்களுக்குக் கடன் கொடுத்து உதவியும் வந்துள்ளன. எனவே எழுத்தில் இடம் பெறாத ஓர் ஒப்பந்தம்போல அவர்களும் கோயில்களுக்குத் தானங்கள் செய்திருக்கின்றனர்.

10-ஆம் நூற்றாண்டில் அரேபிய, சீன நாடுகளுடன் இந் தியா வணிகத் தொடர்பு கொள்ள ஆரம்பித்த பின்னரே வணி கர்கள் கோயிற் பணிகளிலும் தானங்களிலும் பங்கேற்பது அதிகரிக்கிறதென்று அறிஞர்கள் கருதுகிறார்கள்.[15]

"உள்ளூர் தினசிந்தாமணிநல்லூரிலிருக்கும் வியாபாரி இன்னகருடையான் பெற்றான் பொங்காமேனி" என்பவன்

பிக்ஷாடனரைப் பிரதிஷ்டை செய்து, அவர்க்குத் திருநாமத்துக் காணியாக அரைமா நிலமும் கொடுத்திருக்கிறான்.[16]

மலை மண்டலத்து ஏறுன்புரத்தைச் சேர்ந்த வியாபாரி ஒருவன், கோயிலுக்கு வருபவர்கள் பாதசுத்தி செய்து கொள்வதற்கு வேண்டிய ஏற்பாட்டினைச் செய்துள்ளான்.[17]

உள்ளூரில் உப்பு விற்பவர்கள் அரசாங்கத்துக்கு நிலவரியாகத் தரும் காசுக்குப் பதிலாகக் கோயிலில் நடைபெறும் நித்தியபூசைக்கு நாள்தோறும் அறுநாழி உப்பு அளந்து கொடுக்க முடிவு செய்ததை ஹொய்சள வீரராமநாதன் காலக் கல்வெட்டு விளக்குகிறது.[18]

வணிகத்தாவளம்?

நாடுவிட்டு நாடுசென்று, வாணிகஞ் செய்வதனையே ஜீவாதாரமாகக் கொண்ட வணிகர்கள், தாம்செல்கின்ற நாடுகளிலேயே சில நேரங்களில் குடியேறிவிடுவதும் உண்டு. கடல் கடந்த சிறப்புடைய "மணிக்கிராமம்" இத்தகையதுதான்.

இவ்வாறன்றி, வாணிக ரீதியில் முக்கியத்துவம் பெற்ற பேரூர்கள் சிலவற்றில் "தாவளம்" என்ற பெயரில் வணிகர்களுடைய தற்காலிகக் குடியிருப்புகள் அமைவதும் உண்டு.

தாவளம் என்ற சொல், கேரள நாட்டில் இன்றும் வழங்கும் ஒரு சொல்லாகும்.[19] மலை மண்டலத்தைச் சேர்ந்த வணிகர்களின் தொடர்பால் தமிழகத்திலும் இத்தகைய தாவளங்கள் அமைக்கப்பட்டதாகக் கருதமுடியும். திருவலஞ்சுழிக் கல்வெட்டு ஒன்று, மக்கள் இத்தகைய "மலைமண்டலத்து மலையாளர்" பக்கல் பணம் கடனாகப் பெற்றுக் கோயிலுக்குரிய குடிமை, கடமை முதலிய வரிகளை இறுக்க முடிவு செய்ததைக் கூறுகிறது.[20]

மலைமண்டலத்து ஏறுன்புரத்தைச் சேர்ந்த வியாபாரி, திருமழபாடியில் இருந்திருக்கிறானென்றால், வணிகத் தாவளம் ஒன்று இங்கும் இருந்திருக்க வாய்ப்புண்டு என்று ஊகிக்கலாமல்லவா?

கிராமிய வாழ்வின் அமைதியிலிருந்து முற்றிலும் விடுபட்டு, பரபரப்பான 'போட்டி நாகரிக'த்தின் சாயலைத் திருமழபாடி, சோழராட்சியின் இறுதிக் காலத்தில் பெற்றுவிட்டதென்பதற்கு இதுவும் ஒரு சான்ருகலாம்.

## பெண்கள் நிலை

சொத்துரிமை பரம்பரை உரிமையாக இறுகி வருகின்ற நிலையில் பாரம்பரியத்தை அடையாளங் காண்பதில் குழப்பம் நேராது தவிர்ப்பதற்காகத்தான், கணவனன்றி வேறு "தெய்வந்தொழா"க் கற்புநிலை ஒரு லட்சிய ஆதர்சமாகப் பெண்கள் முன் வைக்கப்பட்டது ஆயினும், புறநிலைத்தாக்குதல்களிலிருந்து முற்றிலும் தனித்தொதுங்கிவிடமுடியாத நடைமுறை வாழ்வில், இந்தியப் பெண்சமூகம், தத்துவத்தின் கண்டனங்களிலிருந்து சாமர்த்தியமாகத் தப்பி மிதமான ஒரு முன்னேற்றத்தைக் கண்டுதான் வந்திருக்கிறது.

தெய்விகத் திருப்பணிகளில் "கொண்டி மகளிர்"[20] மட்டுமே ஈடுபட்டிருந்த நிலையிலிருந்து வெகுவாக மாறுபட்டுக் கோயில்களுக்குத் தானங்கள் செய்யுமளவு தரமும், சொத்துரிமை வரமும் பெற்று, இல்லறப் பெண்டிர் முன்னேற்ற முற்ற நிலை கல்வெட்டுகளால் தெரிகிறது.

## கிழத்தி

பராந்தக சோழனின் 20-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில், கோயிலுக்கு, மூவர் சேர்ந்து எறிமணி செய்தளித்த செய்தி குறிப்பிடப்படுகிறது. அம்மூவருள் ஒருத்தி வேலங்கிழத்தி ஏகம்பன் செட்டி என்பவள்.[21]

## சானி

முதல் ராஜேந்திரனுடைய இரு கல்வெட்டுகளில் அமரவிக்கிரமச்சேரி ஆலத்தூர் பொற்கோலத்தின் பிராஹ்மணி ஆதித்தன்கோதை என்பவள் அளித்த தானங்கள் குறிப்பிடப்படுகின்றன.[22] இவை தவிர வேறு இரு கல்வெட்டுகள பிராமணப் பெண்டிர் அளித்த தானங்களைக் குறிப்பிடுகின்றன. மூன்ரும் ராஜேந்திரனின் கல்வெட்டொன்றில் அரசூர் நஞ்சணி

கண்டபட்டன் மனைவி ஆண்டாள் சானி என்பவள் இறைவரின் திருமஞ்சனத்துக்குக் காவிரியிலிருந்து தண்ணிர் சுமந்து வருபவனின் ஜிவிதத்துக்காக நிலம் கொடுத்துள்ள செய்தி இடம் பெறுகிறது.[23] சானி (ஜானி) என்பது பிராமணப் பெண்டிரைக் குறிக்கும் அடைமொழி.

அதிகாரிகளின் மனைவியர்

முதல் ராஜேந்திரசோழனின் ஆட்சியில் அரச அதிகாரிகளின் மனைவியர் சிலர் கோயிலுக்குத் தானங்கள் செய்துள்ளனர்.

16-ஆம் ஆட்சியாண்டில் ஸ்ரீகிருஷ்ணன் கௌசலையார் என்ற பெண் தராநிலை விளக்கு ஒன்றும், தொண்ணூறு ஆடுகளுக்குப் பதிலாக நூறு காசுகளும், கொடுத்துள்ளாள். இவள் உய்யக்கொண்டான் வளநாட்டு வெண்ணாட்டு கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலத்து நராக்கண் ஸ்ரீகிருஷ்ணன் இராமனான ராஜேந்திரசோழ பிரம்மமாராயரின் மனைவியாவாள். (S.I.I. V 636)

17-ஆம் ஆட்சியாண்டில் "நராக்கண் அருமொழியான உத்தமசோழ பிரம்மமாராயரின் மாராசியா"ரான தெச்சப்பன் செம்பியன் மாதேவி, நந்தா விளக்கெரிப்பதற்கு நூறு காசுகள் கொடுத்துள்ளாள். (S.I.I. V 637)

22-ஆம் ஆண்டில் குரவை நாரணக்கிரமவித்தரான மதுராந்தக பிரமமாராயர் மாராசியர் இராமஞ் சோழகுலசுந்தரியார், இறைவர்க்குத் தந்தக்கால் பள்ளிக்கட்டிலும் நிலமும் கொடுத்திருக்கிறாள். (S.I.I. V 638)

31-ஆம் ஆட்சியாண்டில் உலகுடையாள் என்பவள் தொண்ணூற்றாறு ஆடுகள் கொடுத்திருக்கிறாள். இவள் பெருந்தரம் தண்டநாயகன் கூத்தன் ஜனநாதனின் மகள் என்பதும், வளவன்மாராயர் கிளியூருடையான் வளவன் கண்ணனான உதையமார்த்தாண்ட மூவேந்தவேளான் மாராசி என்பதும் அக்கல்வெட்டு கூறுவன. (A.R.E. 36/1920)

அதிகாரிச்சி

முதல் ராஜாதிராஜனின் கல்வெட்டொன்றில் அரையன் உடையாளார் என்ற அதிகாரிச்சி இடம் பெறுகிருள். "ஸ்ரீராஜேந்திரசோழதேவர் திருமகளார் மதுராந்தகதேவர் அருமொழி நங்கையார் நம்பிராஞர் அருளிச்செய்ய அதியாரிச்சியார் அரையன் உடையாளார் வசம் வரக்காட்டி இத்தேவர் பண்டாரத்து ஒடுக்கிந முத்துக் குடை - - -" என்று விவரித்துச் செல்லும் அக்கல்வெட்டிஞல் அரசகுலப் பெண்டிரோடு தொடர்புடைய பொது அல்லது அரசியற் பணிகளை இவர்கள் செய்து வந்த நிலை புலஞகிறது.[24]

திருவையாற்றில் இரு கல்வெட்டுகளில் அதிகாரிச்சியர் குறிப்பிடப்படுகின்றனர்.[25] ஆயினும் இப்பதவி குறித்த பிற விவரங்கள் கிடைக்கவில்லை.

நமது கல்வெட்டில் அதிகாரிச்சியின் பெயருக்கு முன் அரையன் என்ற பட்டம் இடம் பெற்றிருப்பது சில தெளிவற்ற ஊகங்களை உருவாக்குகிறது. அரச பாரமென்பது திருவின் வடிவமாதலால் அதனைத் தாங்குபவர்கள் ஆண்களாகவே கருதப்படவேண்டுமென்ற எண்ணத்தின் விளைவா, சமுதாய மதிப்புக் கருதிச் செய்யப்பட்ட பாவனைச் சடங்கா, போன்ற ஐய விஞக்கள் எழுகின்றன. கி.பி. 13-ஆம் நூற்ருண்டில் காகதீய நாட்டையாண்ட ருத்ரம்மா, "ருத்ர மகாராஜா" என்ற பெயரில் அரசு செய்ததும், நாயக்க அரசி மங்கம்மா "மகாராஜராஜ ஸ்ரீமங்கம்மா அவர்கள்" என்று அழைத்துக் கொண்டதும் இது தொடர்பாக நினைவுக்கு வருகின்றன.

இன்றளவும் சில பதவிப்பெயர்கள் ஆண்பாலிலேயே அமைந்துள்ளன. (உதாரணமாக Chairman என்ற சொல்- அண்மையில்தான் Chairperson என்று பொதுப்பாலில் விளிக்கும் முறை வழக்கிற்கு வந்துள்ளது). ஆண்களின் தலைமைப் பீடம் அங்கீகரிக்கப்பட்டுள்ள சமுதாயநிலையில் இது இயல்பானதே. அதுபோல, எவ்வித விசேட உள்நோக்கமுமற்ற, பொதுவான அடைமொழியாகவும் இந்த "அரையன்" இருக்கலாகும்.

## அரசகுலப் பெண்டிர்

### இளங்கோன்பிச்சி

ராஜகேசரிவர்மனின் 27-ஆம் ஆட்சியாண்டில் இவள் நந்தா விளக்கொன்று எரிப்பதற்காகப் பத்துக் கழஞ்சு பொன் கொடுத்துள்ளாள். இந்தப் பத்துக் கழஞ்சு பொன்னின் பலிசையால் நாள்தோறும் உழக்கு நெய் கோயிலுக்கு அளிப்பதாகத் தேவகன்மிகள் உறுதியளிக்கின்றனர்.[26]

இக்கல்வெட்டில் "சோழப்பெருமானார்க்கு முக்கம் புகுந்த மூத்த தேவியார் இளங்கோன்பிச்சி" என்றும், "வல்லவரையர் மகளார் இளங்கோங்ப்பிச்சி" என்றும், இவள் குறிப்பிடப்படுகிறாள். சோழப்பெருமானார் என்பது ராஜகேசரிவர்மன் ஆதித்தனையும், வல்லவரையர் என்பது ராஷ்ட்ரகூட மன்னனை இரண்டாம் கன்னரதேவனையும் குறிக்குமென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. பராந்தக சோழனின் சகோதரனை வேறொரு கன்னரதேவன், ஆதித்தசோழனுக்கும் இவளுக்கும் பிறந்தவனவான்.[27]

### நக்கன் தில்லையழகியார்

பரகேசரிவர்மனின் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டில், நக்கன் தில்லையழகியாரான சோழமாதேவியார், வெற்றிலை வைப்பதற்கான பிங்காளம் (வெள்ளித்தட்டு) ஒன்றினைக் கோயிலுக்கு அளித்தது கூறப்படுகிறது.[28]

### அறிஞ்சிகைகேணி

பரகேசரிவர்மனின் 3-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இவள் காணப்படுகிறாள். "மூத்த உடையார் மகள்" என்று, இவள் பெயருடன் ஓர் அடைத்தொடர் காணப்படுவதால், இவள் பராந்தகனின் மனைவியருள் ஒருத்தியான இலாடமாராயர் மகள் அறிஞ்சிகையினின்று வேறுபட்டவள் என்பது விளங்குகிறது.[29]

வானவன்மாதேவியார்

கங்கைகொண்ட ராஜேந்திர சோழனின் பட்டத்தரசியான இவள், அவனது 19-ஆம் ஆட்சியாண்டில் கோயிலுக்குப் பொன்தளிகை அளித்துள்ளாள். (S.I.I. V 639)

பிள்ளையார் அருமொழிநங்கையாரான பிரான்:

ராஜேந்திரசோழனின் மகளும், குலோத்துங்கசோழனின் தாயுமான இவள், விளக்கெரிப்பதற்காக ஆடுகள் கொடுத்திருக்கிறாள். (S.I.I. V 635) வேறொரு கல்வெட்டில் இவள் இறைவர்க்கு முத்துக்குடை செய்தளித்தது கூறப்படுகிறது. அக்கல்வெட்டு இவளை மதுராந்தகன் அருமொழிநங்கையார் நம்பிராஞர் என்று சற்று மாற்றிக் குறிப்பிடுகிறது. (A.R.E. 71/1920)

அணுக்கி சூற்றிய் பஞ்சவன்மாதேவி

ராஜேந்திரசோழனின் அணுக்கி இவள். இறைவரின் அபிஷேகத்திற்குத் திருமஞ்சனக்கலசம் கொடுத்தவள். (A.R.E. 70/1920)

அரையன் ஜெயங்கொண்டசோழியாரான பஞ்சவன்மாதேவியார்

பிள்ளையார் சோழவல்லபதேவர் நம்பிராட்டியார் என்று இவளை அறிமுகம் செய்விக்கிறது, முதல் ராஜாதிராஜனின் 29-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு. திருவிளக்கு எண்ணெய்க்காகக் காசுகள் கொடுத்துள்ளாள். (A.R.E. 85/1920)

கற்பகம் இராஜேந்திரசோழியார்

பூபாலசுந்தரநான சோழகோனார் தேவியார் இப்பெண்மணி. சோழ அரச குலத்தவரோடு தொடர்புடையவள் அல்லள். இவளது தந்தை, இராஜேந்திரசோழவளநாட்டு வண்டாழைக் கூற்றத்துச் சிற்றூர் உடையான் பெருமான் கற்பகமான களப்பாளராஜர் ஆவார். முதற்குலோத்துங்கனது 45-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இவள் கோயிலுக்கு ஆடுகள் கொடுத்ததைத் தெரிவிக்கிறது. (S.I.I. V 640).

நுளம்பர் மகள் தியாகசுந்தரி திருவேகம்பமுடையாள்;

இரண்டாம் குலோத்துங்கனின் 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவளது முக்கியமான பெயர், ஆடுகள் கொடுக்கப்பட்ட எளிய செய்தியோடு இணைத்துக் கூறப்படுகிறது. (A.R.E. 35/1920)

செம்பியன்மாதேவி

சோழர் கலை வரலாற்றில் கண்டராதித்தன் மனைவியும் ராஜராஜனின் வளர்ப்புத்தாயுமான செம்பியன்மாதேவியின் பணிகள் தனியிடம் பெறுகின்றன. அவருடைய வரலாற்றுக் குறிப்புகளின்படி அவர் மழவரையர் மகள் என்பது நமக்குத் தெரியவருகிறது. அவரிடம் பணிபுரிந்த அடியாள் ஒருத்தியின் பெயர் 'இலைச்சியன் மழபாடி' என்பது. இவளுக்காகச் செம்பியன்மாதேவி விடுத்த நிவந்தங்கள் பற்றித் திருவெண்காட்டுக் கல்வெட்டொன்றின் சிதைந்துபோன இறுதிப் பகுதி சில விவரங்களைத் தருகின்றது.[30]

மழபாடிக் கோயிலில் செம்பியன்மாதேவியின் கைவண்ணத்தைக் காட்டும் கலைப்படைப்பு இருப்பதாகத் தெரியவில்லை. ஆயினும் இக்கோயிலின்பால் அவரது கவனம் சென்றிருக்கிறதென்பதை ஒரு கல்வெட்டு நிறுவுகிறது.[31]

பிராந்தகன் மாதேவடிகள் என்பவர், 4 மா நிலத்தை 30 கழஞ்சு விலை கொடுத்து வாங்கிக் கோயிலுக்கு அளித்த செய்தியை அச்கல்வெட்டுத் தருகிறது. இங்குப் பிராந்தகன் மாதேவடிகள் என்று குறிப்பிடப் பட்டிருப்பவர் செம்பியன்மாதேவியே யாவார்.[32]

கோயிலில் நெல் அளக்கும் மரக்கால் ஒன்றுக்குச் செம்பியன்மாதேவி என்று பெயர் சூட்டப்பட்டது. இது முதல் ராஜேந்திரன் காலத்திலாகும்.[33]

எண்ணெய் முதலியன அளக்கப் பயன்பட்ட உழக்கும் செம்பியன்மாதேவி என்றழைக்கப்பட்டதென்பது மூன்றும் ராஜராஜனின் 31-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டால் தெரியவருகிறது.[34]

உள்ளூரில் உப்பு விற்பவர்கள் செம்பியன்மாதேவி யாலே அறுநாழி உப்பு அளந்து கோயிலுக்குக் கொடுக்க நிச்சயித்ததை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. ஹொய்சள வீரராமநாதனின் ஆட்சிக் காலத்தில் நாழி அளவையொன்றும் செம்பியன்மாதேவி என்று குறிப்பிடப்பட்டது இதனால் தெரிய வருகிறது.[35]

செம்பியன்மாதேவிப் பேரேரி என்று, ஒரு ஏரி பெயர் தாங்கியிருந்திருக்கிறது.[36]

செம்பியன்மாதேவியின் சிறப்புப்பெயரான குலமாணிக்கம்[37] என்பது வாய்க்கா லொன்றுக்குப் பெயராகச் சூட்டப்பட்டுள்ளது.[38]

---

* சோழர்கள்பால் மேலாதிக்கம் செலுத்திய ஹொய்சளர் கல்வெட்டுகள் ஓரிரண்டு, இக்கட்டுரையில் கையாளப்படுகின்றன.

1 'மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவைநிலை'–தொல்காப்பியம், பொருளதிகாரம் 65. திருமாலின் இயல்பாகப் புகழே குறிப்பிடப்படுகிறது புறநானூற்றிலும். (புறம். 56.)

2 S. I. I. V 633

3 பார்த்துப் படிக்கப்பட்டது. இதனோடு தொடர்புடையது போலத் தோன்றுகிறது, திருமழபாடிக் கோயிலிலுள்ள சுந்தராம்பாள் சன்னிதிக் கல்வெட்டொன்று. சிதைந்தும், கற்கள் இடம் மாறியும் உள்ளது அக்கல்வெட்டு. "தறிக்கு ஏறின நாள்முதல் ஐயாட்டை....த்திகள் ஸ்ரீசுந்தரபாண்டியதே..க்கு தறிக்கடமைக்கும் காசு கடமையும்...கண்டராதித்த சருப்பேதி மங்கல..தறிப் பணக் காணிக்கைக்கு........கூலிஆயங்கொள்ளுமிடத்து......... அரைவாசை....ந்த பணமும் ஆட்டைக்கு.....நிலக்கூலி தவிரவும் உடையார் இராஜே......பணக்காணிக்கைக்கு ஆ....."–இதன் காலம் 13–ஆம் நூற்றாண்டின் இறுதியாக இருக்கலாம்.

4 'அதிகாரியும் அடிகளும்' அத்தியாயத்தில் பார்க்க.

5 1) அறிஞ்சிகைகேணி 2) பிராந்தகன் மாதேவடிகள் — (அரசகுலப் பெண்டிர் என்ற தலைப்பின் கீழ் பார்க்க).

6 A. R. E. 74/1920

7 Ibid 75

8 பரிசைக் கிழான் நக்கன் சிங்கதேவன் (ஆண்டறிக்கை 15/1920) பொரக்காடு கிழான் ஆயிரவன் ஏனாதி (ibid. 18).

9 நத்தமனை என்ற சொல் இவ்வூரில் ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது. நத்தம், ஜீவிதம் முதலிய சொற்கள் கல்வெட்டில் சாதாரணமாக இடம்பெறுவன. நந்துதல் (சேர்தல், சேர்ந்து வாழ்தல்) என்ற பொருளில் நத்தம் என்ற இச்சொல் ஏற்பட்டிருக்கலாம். மக்கள் சேர்ந்து வாழக் கூடிய சமவெளிப்பகுதியிலுள்ள ஊர்களைக் குறித்துப் பின்னாளில் குடியிருப்புமனையைக் குறித்திருக்கும் என்ற முடிவுக்கு வருதல் எளிது. (ஜீவிதம் என்பது வாழ்க்கைக்கு இன்றியமையாத பயிர் நிலத்தைக் குறித்திருக்க வேண்டும்). இவ்வூரில் அதிகமாக வாழும் உடையார் இனத்தவர் 'நத்தமான்' என்று தம்மைக் குறிப்பிட்டுக் கொள்வர்.

10 'கருத்தினாலோர் காணியில் விருத்தியில்லை' திரு.2, பதி.98, பா. 4.

11 S. I. I. XVII intro. p. VI

12 பார்த்துப் படிக்கப்பட்டது. (A. R. E. 86/ 1920) ஒவறு என்ற குறியீட்டை எவ்வாறு வழங்கியிருப்பர் என்று தெரியவில்லை. இது $\frac{7}{6}$ஐக் குறிக்கும் என்று கணக்கிட்டறிய முடிந்தது.

13 S. I. I. V 638

14 Ibid 644

15 *Temple and Merchants in South India* — D. N. Jha. (Essays in honour of S. C. Sircar-New Delhi-1976.) p. 120. இடைக்கால ஐரோப்பிய சர்ச்கள் பல வகைகளிலும் தென்னிந்தியக் கோயில்களை ஒத்துக் காணப்பட்டாலும் அவை பொருளுற்பத்தி–பரிவர்த்தனையில் ஈடுபட்டதால் வணிகசமூகத்தினர்க்கும், சர்ச்களுக்கும் கடும் பகை நிலவியது. (p. 121)

16 A. R. E 82/1920

17 Ibid 25. 3-ஆம் ராஜராஜன் கல்வெட்டு

18 S. I. I. V 627

19 சபரிமலை ஐயப்பன் கோயிலுக்குச் செல்வோர், பயணத்திற்கிடையில் தங்குகின்ற இடங்களைத் தாவளம் எனக் குறிப்பிடுவது வழக்கம். இந்த ஐயப்பன் (சாஸ்தா) வணிகர்களுடைய தெய்வமென்ற கருத்து அறிஞரிடையே நிலவுகிறது.

20 'கோப்பெருஞ்சிங்கன்' — S. R. பாலசுப்பிரமணியம் பக். 149

21 A. R. E. 63/1920

22 Ibid 60, 69

23 Ibid 29

24 Ibid 71 குறிப்பு, பார்த்துப் படிக்கப்பட்டது.

25 S. I. I. V 512, 521 'திருவையாறு' பக். 89, 93 பார்க்க

26 S. I. I. XIII 323

27 Ep. Indica XXVI 29, P. 233

28 A. R. E. 1/1920 & S. I. I. XIX 260

29 A. R. E. 8/1920 & S. I. I. XIX 55

30 S. I. I. XIII 144

31 S. I. I. XIX 167

32 பராந்தகன்மாதேவடிகள் என்பதே சரியான வடிவமாகும். 'பராந்தகன் மாதேவியாரான ஸ்ரீசெம்பியன்மாதேவியார்' என்று மேற்கூறப்பட்ட திருவெண்காட்டுக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பிற விவரங்களுக்கு 'கல்வெட்டு'-தொ. பொ. ஆய்வுத் துறை காலாண்டு இதழ் 5, பக். 17,- வெ. வேதாசலம் எழுதியுள்ள 'செம்பியன் மாதேவி' என்ற கட்டுரையைப் பார்க்க.

33 S. I. I. V 638

34 பார்த்துப் படிக்கப்பட்டது. (A. R. E. 55/1920)

35 S. I. I. V 627

36 Ibid 638

37 'சோழப் பெருமான் பட்டகள் தேவியார் செம்பியன் மாதேவியாரான குலமாணிக்க நம்பிராட்டியார்' S. I. I. V 549

38 Ibid 632

○★○

# அதிகாரியும் அடிகளும்

தெற்றிபெரியானன எதிரிலிசோழ மூவேந்தவேளான்

மூன்றும் ராஜராஜனின் ஏழாம் ஆண்டு (ஆருவதின் எதிர் யாண்டு)க் கல்வெட்டு,[1] நற்பணிபுரியும் அதிகாரிகளிடம் மக்கள் காட்டும் நன்றியுணர்ச்சியை எடுத்துக் காட்டுவதாக அமைகிறது. 'தெற்றிபெரியானன எதிரிலிசோழ மூவேந்த வேளான்' என்ற அதிகாரிக்கு அளிக்கப்பட்ட கௌரவத்தை இது சொல்கிறது. அவன் ஊருக்குச் செய்திருக்கும் நற்பணி கள் பலவும் விவரிக்கப் படுகின்றன.

"... குன்றக் கூற்றமான உத்துங்கதொங்க வளநாட்டுக் கூற்றூரிலும் இந்நாட்டு குரயாடியான குலோத்துங்கசோழன் கூற்றூரிலும் காணியுடைய கூற்றூருடையான் 'தெற்றி பெரியா னன எதிரிலிசோழ மூவேந்தவேளார்'க்கு இந்நாயனர் திரு மாசி திருநாள் எட்டான்திருநாள் திருவெழுச்சி திருமடை விளாகத்து மேலே திருவாசலில் எழுன்தருளி நின்று பிரசாத செய்தருளினபடி இன்னயனர் கோயில் திருவாடரங்கும் நிருத்த மண்டபமும் பெருமாள்கோயிலும் திருமண்டபமும் முன்பு சிறுத்து ஸ்தானசங்கடமாயிருக்கையில் இத் திருவாடரங்கு பெருக்கவும் பெருமாள்திருக்கோயிலும் திருமண்டபமும் தாயிலுநல்லான்மண்டபமும் பெருக்க அழகிதாகச் செய்கை யாலும் இந்தத் திருப்பதியை வாஸ்து வகுத்து ஊர் நடுவில் சண்பங்குழி தூர்ப்பித்து விக்கிரமசோழன் திருவீதியாகச் செய் விக்கையாலும் கொள்ளிடவாறு ஊ(ஞை)த்துறையில் இது தெற்கே பேத்து ஆருக வெட்டிக் கரை செயிது ஊர்க்கு ரக்ஷை செய்கையாலும் 'இவர் இத்திருப்பதியிலே குடியிருக்க வேணு' மென்று இக்கோயில் தானத்தோம் விண்ணப்பஞ் செய்கையில் இவற்கு காணியாகக் குடுத்த மனையாவது ..."

இதனோடு ஒப்பிடும் வகையில், திருவாதவூர் (மதுரை மாவட்டம்) திருமறைநாதர் கோயிலிலுள்ள குலசேகரபாண்டியன் கால (14-ஆம் நூற்றுண்டு)க் கல்வெட்டு[2] ஒரு செய்தியினைத் தருகிறது. தர்மராஜதேவன் மும்முடிச்சோழியான மங்கையர்க்கரசியார், கோயிலைச் சுற்றிச் சாலையமைத்தும், குளத்துக்குத் தடுப்புச் சுவரமைத்தும், ஸ்ரீருத்ரதேவர், தேவி திருமேனிகளை எழுந்தருளுவித்தும் - இவ்வாறு பல திருப்பணிகள் புரிந்ததற்கு நன்றியாகப் பூவணையிலுள்ள நீரைத் தன் நிலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும் உரிமையை அவளுக்கு அளிக்கிறுர்கள் ஸ்ரீருத்ர ஸ்ரீமாஹேஸ்வரர்கள்.

சேக்கிழான் மாதவடிகள் இராமதேவனுன
உத்தமசோழப்பல்லவரையன்

இரண்டாம் ராஜராஜனின் 17-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று[3] இரண்டாம் திருச்சுற்றின் தென்புறச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு, 'குன்றத்தூர் சேக்கிழான் மாதவடிகள் இராமதேவனுன உத்தமசோழப் பல்லவரையன்' என்பவரைக் குறிப்பிடுகிறது.

"ஸ்வஸ்திஶ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள்
ஸ்ரீராஜராஜ தேவற்த யாண்டு பதிநே
ழாவது ராஜராஜ வளநாட்டுப் பொ
ய்கைநாட்டு உடையார் திருமழுவா
டி உடையார்க்கு சந்திராதித்தவற் இரவுபகல்
திரிநுந்தா விளக்கெரிய செயங்கொண்டசோழம
ண்டலத்துப் புலியூர்க்கோட்டமான குலோத்துங்க
சோழவளநாட்டுக் குன்றத்தூர்நாட்டுக் 'குன்றத்தூர் சேக்கிழான்
மாதவடிகள் இராமதேவநான உத்தமசோழப்பல்லவரயன்' இ
வாட்டை மகரநாயற்று அபரபக்ஷத்து ஏகாதசியும் புதன்கிழ
மையும் பெற்ற அனிழத்திநாள் வைத்த திரிநுந்தா விளக்கு
[ஒன்றுக்கு

நெய் உழக்காக நாள் முன்னூற்றறுபதுக்கு வேண்டும் நெய்
[தொண்

ணூற்று நாழிக்கு விட்ட சாவாமூவாச் செவ்வரி ஆடு
[தொண்ணூறும்

பொலிதகா கிடாயொன்றும் . . . ''

என்று விவரித்துச் செல்கிறது அக்கல்வெட்டு. இங்குக் கூறப் படும் சேக்கிழார், பெரியபுராண ஆசிரியர் சேக்கிழாரே என்று 40-ஆண்டுகளுக்கு முன்பு திரு. மு. இராகவையங்கார் அவர் கள் தம் 'சாசனத் தமிழ்க்கவி சரிதம்' என்ற நூலில் குறிப்பிட் டுள்ளார்.

குன்றத்தூர் சேக்கிழார் மரபில் உத்தம சோழப் பல்லவ ரையன் என்ற பட்டம் பெற்றிருந்தவர் பெரிய புராண ஆசிரியர் ஒருவரே என்று, நமக்குக் கிடைக்கக் கூடிய சான்றுகளைக் கொண்டு, முடிவுக்கு வரமுடிகிறது. எனவே இச் சேக்கிழார் அவர்தாம் என்பது மு. ராகவையங்காரது முடிவு.

இராமதேவன் என்ற பெயர் வைணவப் பெயராக இருப் பதால் சைவ அடியார் குடும்பத்தில் சூட்டப்பட்ட பெயராக இருக்க முடியுமா? என்ற கேள்வி எழுகிறது. இக் கேள்வியை மு. ரா. அவர்களே எழுப்பி விடையும் அளித்துள்ளார். அச்சுத களப்பாளர், நரசிங்கமுனையரையர், புருடோத்தமநம்பி முதலிய அடியார் பெயர்களைச் சுட்டிக் காட்டி, இவ்வாறு வைணவப் பெயர் சூட்டுவது வழக்கத்துக்கு மாறானதல்ல என்று நிலை நாட்டுகிறார் அவர்.

இனி அடுத்ததாக ஒரு வினா எழுகிறது. "சேக்கிழார் புராண"த்தைப் பதினான்காம் நூற்றாண்டில் பாடிய உமாபதி சிவாச்சாரியார், "அருண்மொழித் தேவன்" என்பதைத்தான் சேக்கிழார் பெயராகக் குறிப்பிடுகிறார். இம்மரபே தமிழுலகில் பின்பற்றப்பட்டு வந்தது. ஏறத்தாழ இரு நூற்றாண்டுகளே கடந்திருக்கின்ற நிலையில், இக் கல்வெட்டுச் செய்தி கூடத் தெரி யாத அளவிலா சேக்கிழார்புராணம் பாடப்பட்டிருக்கும்?

இக்கேள்விக்கும் தக்க மறுமொழி யளிக்கப்பட்டுள்ளது. சேக்கிழார் புராணத்தில் காணப்படும் தவறுகள், கால முரண்பாடுகள் சிலவற்றைச் சுட்டிக் காட்டி இந்நூல் 13-14ஆம் நூற்றுண்டினராகக் கருதத் தகும் உமாபதிசிவத்தால் எழுதப்பட்டதன்று என்று நிறுவியுள்ளார் திரு மா. ராசமாணிக்கனுர்.[4] அருண்மொழித்தேவன் என்பது ராஜராஜன் இயற்பெயராக அமைந்தது ஆராய்ச்சியாளர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியதால், சோழர் ஆட்சியுடன் தொடர்பு கொண்ட சேக்கிழார் குடும்பத்தினர் ராஜராஜனின் பெயரை அவர்க்குச் சூட்டியதாகக் கொண்டு, ராஜராஜன் காலத்தோடு சேக்கிழார் காலத்தைத் தொடர்புறுத்திப் பார்த்தனர். அருண்மொழித்தேவன் என்று சேக்கிழார் குறிப்பிடப்பட்டிருக்கக் கூடுமாயினும் அது திருத்தொண்டர்மாக்கதை பாடிய திருவாயைச் சிறப்பிக்கும் புகழ்மொழியாக இருக்கலாமே!

மாதவடிகள்[5] என்றேர் அடைமொழியும் இக் கல்வெட்டில் உள்ளது. முதிர்ந்த வயதில் அவர் வாழ்கின்ற துறவற வாழ்வை இத் தொடர் குறிப்பதாகக் கொள்ளலாம். ''அருந்தவத்தோன்'' என்றும் ''குன்றை மாமுனி'' என்றும் சேக்கிழார் புராணம் பலபடப் பாராட்டுவதற் கேற்ப இவர் மாதவஅடிகள் என்று பட்டஞ்சூட்டப் பெறுவது இயல்புதானே?

தமிழகத் திருத்தலங்களின் வரலாற்றை யெல்லாம் கற்றுணர்ந்த சேக்கிழாரின் கல்வெட்டிலேயே ஊர்ப் பெயர் ''திருமழுவாடி'' என்று எழுதப்பட்டுள்ளது நமக்குச் சிறிது வியப்பேற்படுத்துகிறது. மேலும் இக்காலத்தில் பெரியபுராண அரங்கேற்றமும் முடிந்து ஆண்டுகள் சில கடந்திருக்க வேண்டும்.[6] இந்நிலையிலும்,முறையான வடிவம் மக்கள் மனதில் பதியாத வண்ணம் பழக்கமும் வழக்கும் தடை செய்திருக்கின்றன என்றே கருதவேண்டியிருக்கிறது.

ஆனல் அடுத்த ஆண்டு பொறிக்கப்பட்ட கல்வெட்டில்[7] 'திருமழபாடி' என்ற வடிவம் திருத்தமுற அழகாக

அமைந்து நம் கவனத்தை ஈர்க்கிறது. இதன்பின் பெரும் பாலும் இந்த வடிவமே நீடிக்கிறது. இந்த மாற்றத்திற்குச் சேக்கிழார் காரணகர்த்தராக இருந்திருப்பாரோ என்றொரு இன்பமான கற்பனை நமக்கு ஏற்படாமலிருக்க முடியாது.

---

1 கல்வெட்டுக் குறிப்பு A. R. E. 91/1920

2 A. R. E. 497/1962, 63

3 குறிப்பு: A. R. E. 95/1920. இக்கல்வெட்டு இரண்டாம் இராஜ ராஜனுடையது என்பதற்கு மெய்க்கீர்த்தி முதலிய அடையாளங் கள் இல்லையாயினும் இத் திருச்சுற்றுச்சுவரில் கால அடிப் படையில் தொடர்ச்சியாகக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டி ருப்பதை வைத்தும், இக்கல்வெட்டின் இருப்பிடம், இதனை யடுத்து இரண்டாம் இராஜராஜனின் மெய்க்கீர்த்தியோடு தொடங்கும் 18–ஆம் ஆட்சியாண்டு (இக்கல்வெட்டுக்கு அடுத்த ஆண்டு) குறிக்கும் கல்வெட்டு அமைந்திருப்பது, இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் கூத்தன்சோறன் என்ற இடையன் அக் கல்வெட்டிலும் குறிப்பிடப்படுவது, முதலியவற்றைக் கருத்தில் கொண்டும், இவை தவிர எழுத்தமைதி கொண்டும் அரசனை நிர்ணயிக்க முடிகிறது.

4 சேக்கிழார் (1945) பக். 13

5 கல்வெட்டு ஆண்டறிக்கையில் மாதேவடிகள் என்று பதிப்பிக்கப் பட்டுள்ளது. மாதவடிகள் என்ற வடிவமே கல்வெட்டில் காணப் படுகிறது.

6 பெரியபுராணம் கி. பி. 1139–40 இல் இயற்றி அரங்கேற்றப் பட்டிருக்க வேண்டும் என்று திரு N. சேதுராமன் கருதுகிறார். (செங்கல்பட்டு மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு — 8-1-1977 குன்றத்தூர் சேக்கிழார்–பக். 5).

7 A. R. E. 96/1920 பார்த்துப் படிக்கப்பட்டது.

<★>

## குறிப்பிடத்தக்க கொடைகள்

எறிமணி

· மதிரை கொண்ட கோப்பரகேசரிவர்மனின் (பராந் தகன்) 20-ஆம் ஆண்டு. பொய்கைநாட்டு கீழ்பிலாற்று சிவண் டூர் கிழவன் உள்வலிபாண்டனும் கோனூர் கிழிவன் காவஞ் சாதனும் வேலங்கிழத்தி ஏகம்பன்செட்டியும் இட்டது. 'எறி மணி எய' (எறிமணி எழுபது) என்று குறிப்பிடப்பட்டுள் ளது.[1] 70 பலம் என்று எடையைக் குறிப்பதாகலாம்.

பொற்பூ

மதிரைகொண்ட கோப்பரகேசரிவர்மனின் ஆட்சிக் காலமாக இருக்கலாம். சாந்தூர் தாமோதிரசநன், தினமும் 'திருமேநி மேலே வைய்த்து ஆராதித்து வைக்க'க் கொடுத் தது. அரைக்கழஞ்சு எடை.

சிந்நங்கடிந வாள்

ஸ்ரீ இடைக்குடாந்றம்முங்குலுங்காங்(?) கொடுத்தது (அதே கல்வெட்டு[2] )

பிங்காளம்

கோப்பரகேசரிவர்மன்-யாண்டு 10-நக்கந் தில்லையழகி யாரான சோழமாதேவியார் அடைக்காயமுதுக்காக வெள்ளி யால் செய்யப்பட்ட பிங்காளம்[3] (தட்டு) அளிக்கிறார். எழுபத் தேழேமுக்கால் கழஞ்சு எடையுள்ளது. இதனை வைப்பதற்கு ஐந்துபலம் எடையுள்ள பித்தளைப்பீடமும் தரப்பட்டுள்ளது. [4]

சேகண்டி

அரசன் ஆண்டுக் குறிப்பு இல்லை. பரகேசரிவர்மனாக இருக்கவேண்டும். அளித்தவர் தற்புருஷதேவர் என்பார். "நிறை எழுபது" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எழுபது பலமாகலாம்.*

பொந்நின் தளிகை

முதல் ராஜேந்திரனின் 19-ஆம் ஆண்டு. இவன து அரசி வானவன்மாதேவி கொடுத்த பொன்தட்டு-குடிஞைக்கல்லால் அலகு நிலைப்படி, பொன் 198 கழஞ்சு.

வெள்ளித்தளிகை

ஆண்டு 17-இல் இவள் கொடுத்தது. எடை $294\frac{1}{4}$ கழஞ்சு (அதே கல்வெட்டு.[5])

திருமஞ்சன நீராட்ட வெள்ளி கலசம்

ஆண்டு 25 - அணுக்கி சூற்றிய் பஞ்சவன்மாதேவி கொடுத்தது. வெள்ளியாலான திருமஞ்சனக்குடம் - எடை 129 கழஞ்சு[6]

முத்துக்குடை

முதல் ராஜாதிராஜனின் 29-ஆம் ஆண்டு. ராஜேந்திர சோழன் மகள் மதுராந்தகதேவர் அருமொழிநங்கையார் நம்பிராஞர், கோயிற் பண்டாரத்தில் அளித்தது.

"....தைச்ச மகுடம் ஒந்றும் தகடு நாலும் உட்பட பொந் தொண்ணூற்றுக் கழஞ்சே முக்காலே மூந்று மஞ்சாடியும் மேல்படியில் கோத்த சாலியிலும் தூக்கத்திலும் சுழலத்தைச்ச வடத்திலும் ஒருகோல் பத்தியில் கோத்த முத்து ஒப்புமுத்தும் குறுமுத்தும் பயிட்டமும் சப்பத்தியும் உடையந ஒருபதிநாயிரத் தைஞ்ஞூற் றெருபத்தேழிநால் நிறை இருந்நூற்றெண்பத் தொந்பதிந் கழைஞ்சே முக்காலுக்கு விலை இருநூற்றெண்பத் தொந்பதே முக்காலும் உடையது ஒந்று"[7]

திருமேநி பொந்நார்மேனியார்க்குத் திருக்கழுத்துக்குச் சாத்த முத்துவடம்

இரண்டாம் ராஜேந்திரனின் 8-ஆம் ஆட்சியாண்டு. சிறுதநப் பெருந்தனம் ஸேநாபதி அரையன் கடக்கங் கொண்ட சோழன் ராஜராஜ அணிமுரிநாடாழ்வார் கொடுத்தது; முத்து

24, ராஜவந்தம் 2, கொக்கு வாயும் படுகண்ணும் கோத்த நூல் சரடு உள்பட நிறை $3\frac{3}{4}$ கழஞ்சு.

முத்திந் பூண்நூல்

மூன்று நூல் சரடு உள்பட நிறை 12 கழஞ்சே 2 மஞ்சாடியும் குன்றி. (அதே கல்வெட்டு)

திருக்காதில் சாத்தும் கொள்பு

கண்டும் பொன்னும் உட்பட நிறை அரைக் கழஞ்சே இரண்டு மஞ்சாடியும் குன்றி. (அதே கல்வெட்டு)

திருக்கைக்காறை நாலும் திருவடிகாறை இரண்டும்

பொன்னின் எடை நான்கரைக்கழஞ்சே இரண்டு மஞ்சாடியும் குன்றி. இவற்றில் கோத்த முத்தும் நூலும் செப்பாணி பன்னிரண்டும் உட்பட நிறை $44\frac{1}{2}$ கழஞ்சு. (அதே கல்வெட்டு)

முத்துக்குடை

சுழல் தூக்கல் உள்ளிட்டு கொத்து நூற்சரடு உட்பட முத்து நிறை 70 கழஞ்சு. (அதே கல்வெட்டு) செம்பில் பொன் பூசிந மகுடம்; செம்பில் பொன்பூசிந பள்ளி தொங்கல் மகுடம் மூன்று; பள்ளி சிவிகை ஒன்று - இவையும் இக்கல்வெட்டிலேயே குறிப்பிடப்படுகின்றன.[8] இவையனைத்தும் பொன்னார்மேனியார் திருமேனிக்குரியவை.

மந்திரபுஷ்பமாகச் செய்த பொற்பூ

இரண்டாம் ராஜேந்திரனின் ஒன்பதாம் ஆண்டு. மாதேவன் விரகேரளன் அதிராஜராஜ மூவேந்தவேளான் இட்டது. இதில் நடுவு நாயகமாக வைத்த நீலம் ஒன்று. இதே கல்வெட்டில்,

கந்நபுஷ்பமாக (காதணியாக) இட்ட பொற்பூ இரண்டு;
நறுபொங்நின் மாந்தளிராகச் செய்த இதடக்கு 20. இதில் நடுவில் மொட்டு ஒன்று;

வெள்ளிக் கச்சுகோரம் ஒன்று: தயிர் போநகம் அமுது செய்தருள இட்டது;
வெள்ளிவட்டில்: சந்தனக் காப்பு சாத்தியருள இட்டது;
பொங் பூசிய செப்பு மகுடம் ஒன்று;
முத்துவடம்: 313 முத்துகளுடையது;
துற்கையாற்கு செய்த காறை;
பொங் திருமாமம்;
தக்ஷிணாமூர்த்திகளுக்கு செய்த மோதிரம்;

ஆகியனவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

பொங்பட்டம், பொங்பூசிந செப்பு மகுடம், மந்திரபுஷ்ப மாக செய்த பொற்பூவில் தச்ச தகடு, பொற்பூ ஒன்றினைப் பொங் அழிச்சு செய்து கோத்த காறை, ஆகியன வீரராஜேந் திர சோழனின் ஆட்சியில் செய்யப்பட்டுள்ளன. (அதே கல் வெட்டு[9])

பித்தளை அன்னக் கெண்டி ஒன்று;
காளம் ஒன்று;
கொம்பு இரண்டு;
இருப்புற வனமட்ட திருக்கண்ணாடி ஒன்று;
ஊது சங்கு ஒன்று;
மூங்கில் திருவாடு தண்டு;

ஆகியன, மூன்றும் ராஜராஜனின் 26-ஆம் ஆண்டில், இவ்வூரில் காவல் காணியுடைய "பரந்தாங்கிறேன் அமரகோன்" என்பவ ரால் கொடுக்கப்பட்டுள்ளன.[10]

துரவும் தொட்டியும்

இஸ்லாமியர் ஆலயங்களில் நுழையுமுன் புறத்தூய்மை செய்து கொள்வது கட்டாயமான நடைமுறையாக இருந்து வருவதைப் பார்க்கலாம். தூய்மையின்மை சான்னித்தியத் திற்குகந்ததல்ல என்பதோடு, புறத்தூய்மை அகத்தூய்மைக் குரிய மனோபாவத்தைத் தன்னளவில் தூண்டுமென்பதாலும்

பல கோயில்களில் வெளித்திருச்சுற்றில் இதற்கு வசதியாகக் கிணறோ குழாயோ இருப்பதைப் பார்க்கமுடியும்.

மூன்றும் ராஜராஜன் காலத்தில், வழிபட வருவோர் பாதசுத்தி செய்து கொள்வதற்காக ஓர் ஏற்பாடு செய்யப்பட்டது. மூன்றும் திருச்சுற்றின் தெற்குவாசலுக்கருகில் துரவு (கிணறு) வெட்டி, தொட்டியொன்று கட்டி, நீர் இறைத்துத் தருவதற்கு ஒருவனை நியமித்து அவனது ஜீவனத்துக்காக நிலமும் கொடுத்திருக்கிறான் மலை மண்டலத்து ஏருன்புரத்தைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் இவன் பெயர், "திருவாலவாயுடையான் தேவன் அம்பலவனான மண்டலவணிகர்" என்பதாகும்.[11]

இதனையொத்த ஒரு செய்தி தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டத்திலுள்ள கோட்டூர்க் கோயிற் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. தினமும் காலையில் கோயிலிலுள்ள தண்ணீர்த் தொட்டியை நிரப்பி வைக்க உவச்சன் ஒருவனை ஏற்பாடு செய்து, அவனுக்கு ஊதியமாகப் பணம் அளித்து வரவும் உரிய ஏற்பாடுகளைச் செய்கிறான் ஒரு வியாபாரி.[12] ஏறத்தாழ மேற்குறித்த கல்வெட்டின் சமகாலக் கல்வெட்டுதான் இதுவும்.

இந்தக் கல்வெட்டில் தண்ணீர் இறைப்பதற்கு நியமிக்கப்பட்டவன் உவச்சன் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. நமது கல்வெட்டில் இனம் பற்றிய குறிப்பு இல்லை. இருப்பினும், உவச்சர்கள் மழபாடியில் வாழ்ந்திருக்கிறார்களென்பது சோழர் கல்வெட்டுகள் சிலவற்றினல் புலப்படுகிறது.[13] எனவே, இங்கும் நீர் இறைத்து நிரப்ப நியமிக்கப்பட்டவன் உவச்சனாகவே இருக்கமுடியும்.

## திருமேனிகள்

**கொள்கை செப்புத்திருமேனி:**

"ஸ்ரீபலி எழுந்தருள வைத்த கொள்கை செப்புத்திருமேனி நிறை ஒருபத்தைம் பலம் செந்தரா பாதபீடம் நிறை எண்

பதின் பலமும் . . .''-கோப்பரகேசரிவர்மனின் 16-ஆம் ஆண்டில் ''ஸ்ரீகண்டராதித்தச் சதுர்வேதிமங்கலத்து சாலியங் ஆச்சங் குற்சடி''யால் கொடுக்கப்பட்டது.[14]

ஜயங்கொண்டசோழ விடங்கர்;[15]

இவர் நம்பிராட்டியார்;

மகாவிஷ்ணுக்கள்;

இவர் நம்பிராட்டியார்;

பிரஹ்மா;

-இவர்களை எழுந்தருள்வித்தவன் 'அரும்பூர்ச்சேரி உடையார் அம்பலத்தாடி சோலையாரான மனுகுலதீப மூவேந்த வேளார்.' முதல் ராஜாதிராஜனின் 33-ஆம் ஆண்டு[16]

பொன்னார்மேனியார்:

இரண்டாம் ராஜேந்திரனின் எட்டாம் ஆட்சியாண்டில்; அரசனின் அணுக்கியர் ஐயாறன் செம்பொன் என்பவளின் தங்கையான கூத்தன் உத்தமசீலியாருடைய மகன் ''சிறுதனப் பெருந்தனம் ஸேனாபதி அரையங் கடக்கங்கொண்ட சோழங் ராஜராஜ அணிமுரி நாடாழ்வார்'', ''செம்புதராவால் எழுந்தருளுவித்த திருமேனி பொங்கார்மேனியார்'' என்று கல்வெட்டின் தொடக்கத்திலும், ''மேற்படியார் தம்மையாக செய்த செம்பு தராவால் பிரதிம'' என்று இறுதியிலும் குறிப்பிடப்படும் இந்தத் திருமேனியை எழுந்தருள்வித்துள்ளான்[17]

துர்க்கையார்;

தக்ஷிணாமூர்த்திகள்;

-இரண்டாம் ராஜேந்திரனின் ஒன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். மாதேவன் விரகேரளன் அதிராஜராஜ மூவேந்தவேளான் என்பவன் இவர்களுக்குச் சில அணிகலன்கள் செய்தளித்துள்ளான். [18] அணிகலன்கள் பற்றிய குறிப்பை வைத்து இவ்வுருவங்கள் செப்புத்திருமேனிகளே என்று முடிவு செய்யலாம்.

**ஸ்ரீ நந்திகேஸ்வரதேவர்**

விக்கிரமசோழனின் ஆட்சிக் காலத்தில் அன்னியூருடையான் எச்சில்மண்டை செந்தாமரைக்கண்ணனை ஸ்ரீநந்திகேஸ்வரநம்பி என்பவன் எழுந்தருள்வித்திருக்கிறான்.[19] காவிரிநீர்த் திருமஞ்சனம், அர்ச்சனபோகம் முதலான விவரமான குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றைக்கொண்டு இது செப்புத்திருமேனியே என்று கொள்ளலாம்.

**ஆளுடையபிள்ளையார்**

மூன்றாம் ராஜராஜனின் மூன்றாம் ஆண்டில் "நித்தவினோத வளநாட்டு ஆவூர்கூற்றத்து பட்டமுடையான் அரயன் உத்தமசோழ காங்கேயராயன் மகன் திருமழபாடி உடையாரான வாணதராயன்" இவரை எழுந்தருள்வித்தான்[20] திருவிழா எழுந்தருளும் குறிப்புக் காணப்படுகிறது. இதனைக் கருத்தில் கொண்டு இது திருஞானசம்பந்தரின் செப்புத்திருமேனி என்று தெளியலாம்.

இவை தவிர, செப்புத்திருமேனியா, கல்விக்கிரகங்களா என்று முடிவு செய்ய முடியாத திருமேனிகள் சிலவும் குறிப்பிடப்படுகின்றன.

முதல் ராஜேந்திரனின் 20-ஆம் ஆண்டில் திருமால் அரங்கனான திருப்பள்ளித்தாமப்பிச்சனும் அவனது மனைவியும் சேர்ந்து பிள்ளையார் திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையதேவர், நம்பியாரூரனார் ஆகியோரை எழுந்தருள்வித்தனர்.[21]

மூன்றாம் குலோத்துங்கனின் 11-ஆம் ஆட்சியாண்டில் வியாபாரி பெற்றான் பொங்காமேனி என்பவன் "பிக்ஷாடன தேவரை" (பிக்ஷாடனதேவர்) இக்கோயிலில் திருப்பிரதிஷ்டை செய்கிறான். இவனது தந்தையால் எழுந்தருள்விக்கப்பட்ட திருமேனியிது[22]

"ஒரு படி நாயன்மார்" கோயிலில் எழுந்தருள்விக்கப்பட்டதாகக் கி.பி. 1492-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது.[23] இதன்பொருள் தெளிவு பெறவில்லை.

## விளக்குகள்

கோயிலுக்குப் பலவகைப்பட்ட விளக்குகள் கொடுக்கப் பட்டுள்ளன. தராவால் (பித்தளையினால்) செய்யப்பட்ட குத்தி விளக்கு,[24] மக்கல (மட்கல) விளக்கு,[25] நிலை விளக்கு[26] முதலியன ராஜராஜனுக்கு முற்பட்ட சோழஅரசர் காலத்தில் கொடுக்கப்பட்ட விளக்குகள்.

முதல் ராஜேந்திரன் காலத்தில் தராவிளக்கு, தராநிலை விளக்கு, பித்தளை விளக்கு ஆகியன குறிப்பிடப்படுகின்றன.

தராவிளக்குகள் இரண்டு-ஒவ்வொன்றும் உட்கருவுட் பட ஆறு சாண் உயரமுடையது. எடை 350 பலம்.[27]

தராநிலைவிளக்கு-உட்கருவுட்பட நிறை 224 பலம்[28]

பித்தளைவிளக்கு-நெய்தாங்கியும் அடியும் உட்பட $3\frac{1}{2}$ சாண் நீளமுடையது. எடை 100 பலம்.[29]

மூன்றும் ராஜராஜன் ஆண்டபோது 'ஐஞ்சுநிலைத் திருக்குத்தி விளக்குகள்'' இரண்டு செய்தளிக்கப்பட்டன.[30]

கோச்சடையன் சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில், கோயிலில் நந்தமகாகாளன் திருவாசலில் திருவாசி (பிரபை) விளக்குச் செய்து இடப்பட்டது. இது "தீபமாலை" என்று குறிப்பிடப்படுவது அறியவேண்டிய செய்தி. சுத்தமலி வளநாட்டுப் பாம்பணிக்கூற்றத்துப் பாம்புணி கிழான் மல்லாண்டானான சேரகோன் என்பவன் இதனைச் செய்து, தான் சேவிப்பதற்காக இட்டதாகக் கூறுகிறான்.[31]

---

1 S. I. I. V 654

2 பார்த்துப் படிக்கப்பட்டது A. R. E. 11/1920

3 பீங்கான் என்ற சொல் பாரசிக மொழியிலிருந்து பெறப்பட்டதாகக் கருதப்படுகிறது. அம்மொழியில் பிங்கான் என்பதே இச்சொல்லின் வடிவம். இதற்கு "ஒரு வகை மண்ணாற் சட்ட பாத்திரம்" என்று பொருள் கூறுகிறது தமிழ்ப் பேரகராதி. (பக்கம் 2730). பிங்கான் பாத்திரம் மலையாள மொழியில் பிங்ஙானம் என்றே வழங்குகிறது.

4 "வைய்க்கத் தராக் கால்" என்பது "வையகத்தார் கல்" என்று தவருகப் படிக்கப்பட்டுள்ளது. A. R. E. 1/1920
* A. R. E. 4/1920. (தனிக் கல்வெட்டாகத் தெரியவில்லை)
5 S. I. I. V 639
6 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 70/1920 ('கலசம்' என்பது 'கவசம்' என்று படிக்கப்பட்டு, 'armour' என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது),
7 பார்த்துப் படிக்கப்பட்டது. 71/1920
8 S. I. I. V 644
9 Ibid 647
10 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 22/1920
11 ,, Ibid 25
12 A. R. E. 454/1912
13 S. I. I. V 660, 664
14 A. R. E. 7/1920
15 "ஜயங்கொண்ட சோழன்" என்பது, முதல் ராஜாதிராஜனும் சூட்டிக் கொள்ளப்பட்ட ஒரு பட்டமாகும். எனவே இத் திருமேனி அவனுலேயே எழுந்தருள்விக்கப் பட்டதாக இருக்க வேண்டும்.
16 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 78/1920
17 S. I. I. V 644
18 Ibid 647
19 Ibid 642
20 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 76/1920
21 Ibid 37
22 பார்த்துப் படிக்கப்பட்டது. Ibid 82
23 ,, Ibid 51
24 ,, Ibid 3
25 ,, Ibid 5
26 ,, Ibid 10
27 S. I. I. V 635
28 Ibid 636
29 Ibid 638
30 பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 22/1920
31 S. I. I. V 650

# திருமுறைச் சொல்லாட்சி

என்றும் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கும் இனிமையான திருமுறைத் தொடர்கள் சில, ஆட்பெயராகவும் பொருண்மொழியாகவும் சூட்டப்பட்டிருக்கின்றன.

**வயிரத்தூண்**

மழபாடி மாதேவரின் பெயராக அப்பர் குறிப்பிடும் வயிரத்தூண் என்ற சொல் ஆட்பெயராகச் சூட்டப்பட்டுள்ளது. முதல் ராஜேந்திரன் காலத்திய மனிதன் ஒருவன் "பஞ்சநதி வயிரத்தூண்" என்ற பெயருடையவன்.[1]

**பொன்னார்மேனி**

சுந்தரரின் பொன்னார்மேனிப் பாடல் தனது காம்பீர்யத்தால் அடியார் மனதில் தனியிடம் பெற்றதன் விளைவாகப் பொன்னார்மேனியன் திருமேனி, கோயிலில் எழுந்தருள்விக்கப்பட்டது. பொன்னார்மேனி விளாகம் என்று நிலமொன்று பெயர் சூட்டப்பட்டது. தவிர இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலிருந்து ஆட்பெயராகவும் சூட்டப்பட்டுள்ளது.[2]

**மாதுயரந்தீர்த்தான்**

அப்பரது திருவிழிமிழலைப் பதிகத்தில் ஒரு பாடலின் இடையில்,

> "மாதுயரந்தீர்ந்தென்னை உய்யக்கொண்டார்
> மழபாடிமேய மழுவாளனார்"

என்ற ஒரு வரி காணப்படுகிறது.[3] இதில் மழபாடியிறைவர் மாதுயரந்தீர்த்தவராக வருணிக்கப்பட்டிருப்பதைக் கருதி, மாதுயரந்தீர்த்தான் என்றே ஒருவனுக்குப் பெயர் சூட்டப்பட்டது. "ஆலத்தூருடையான் மாதுயரந்தீர்த்தான்" என்ற அந்த மனிதன் மழபாடிக் கோயிலில் திருமெய்க்காவல்நாயகம்

பதவி வகித்தவன். மூன்றும் ராஜராஜன் காலத்தவன் இவன்.[4]

மாதுயரந்தீர்த்தான் என்ற இந்தப் பெயரோடு, "மறையணி நாவினன்"[5] என்று, மழபாடி இறைவனைச் சுட்டும் பொருண்மொழியாகச் சம்பந்தர் கையாண்டிருக்கும் தொடரையும் இணைத்து "மாதுயரந்தீர்த்தான் மறையணி நாவினன்" என்று ஒருவனுக்குப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.[6] கோயில் சைவாச்சார்யனான இவன் ஹொய்சள வீரராமநாதன் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளான். மாதுயரந்தீர்த்தான் என்பது மீள்தற்கரிய பிறவிநோய் தீர்த்த வைத்தியநாதன் என்ற விரிவுரைக்கு இடமளிப்பதுபோல, மறையணிநாவினன் என்று மறையோதும் பணிபுரிபவன் பெயரிடப்பட்டிருக்கும் பொருத்தமும் நம்மை இன்பத்திலாழ்த்துகிறது.

வாச்சமாளிகை

நகரை வருணிக்கும் விதத்தில்,

"மலியும் மாளிகை சூழ்மழபாடி"[7]

என்றும்,

"வாச்ச மாளிகை சூழ்மழபாடி"[8]

என்றும் சம்பந்தர் பாடியுள்ளார். இதில் மழபாடி என்ற சொல் இறைவனையோ கோயிலையோ குறிப்பதாகக் கருதி "வாச்சமாளிகை" என்ற தொடரைக் கோயிலின் திருச்சுற்று மதிலைக் குறிக்கக் கல்வெட்டில் வழங்கியிருக்கின்றனர். மூன்றும் ராஜராஜன் காலத்திய இரு கல்வெட்டுகளில் இவ்வழக்கு காணப்படுகிறது.[9] இத்தொடர், வாய்த்தமாளிகை என்ற தொடரின் திரிபாகக் கருதப்பட்டு, 15-ஆம் நூற்றாண்டளவில் கோயிலையே குறிப்பதாக வழங்கப்பட்டது. கோயில் தட்டான் ஒருவன் "வாய்த்தமாளிகை தட்டான்" என்று பெயர் பெற்றிருந்ததை 15-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்றில் பார்க்கிறோம்.[10]

புவனபதி

மூன்றும் ராஜராஜன் காலத்தில் கோயிலில் புவனபதி

நாச்சியார் எழுந்தருள்விக்கப்பட்டிருக்கிறார்.[11] புவனபதி என்ற பூடகமான (mystic) கருத்து - உருவகம் திருமூலரால் உருவாக்கப்பட்டதாகும்.[12]

---

1 S. I. I. V 632

2 A. R. E. 82, 83 & 86/1920—கல்வெட்டுகள் பார்த்துப் படிக்கப் பட்டன.

3 திரு. 6, பதி. 51, பா. 2

4 A. R. E. 38/1920-பெயர் இடம் பெறவில்லை. பார்த்துப் படிக்கப் பட்டது.

5 திரு. 3, பதி. 28, பா. 2

6 A. R. E. 20/1920 பார்த்துப் படிக்கப்பட்டது.

7 திரு. 2, பதி. 9, பா. 11

8 ,, ,, பா. 2

9 பார்த்துப் படிக்கப்பட்டன. A. R. E. 76 & 77/1920 – இக்கல் வெட்டுகளில் ''வாச்சமாளிகையிலே கல்வெட்டிக் குடுத்தேன்'' என்றும் ''வாய்த்தமாளிகையிலே கல்வெட்டிக் குடுத்தேன்'' என்றும் காணப்படுகின்றன. வாய்ச்சி என்பது மரம், செங்கல் ஆகியவற்றை அறுக்கும் கருவி. செங்கல்லையும், மரத்தையும் அறுத்து ஒழுங்குறக் கட்டப்பட்ட மாளிகை என்ற பொருளில் சம்பந்தர் இத்தொடரைக் கையாண்டிருக்கவேண்டும்.

10 பார்த்துப் படிக்கப்பட்டது. (A. R. E. 44/1920) வாய்த்த மாளிகை தொடர்பாகத் தலபுராணம் ஒரு விநோதமான கதை யைக் கூறுகிறது. வீமன், இக்கோயிலின் திருச்சுற்றுமாளிகை யைக் கட்டியதாகவும், அவன் கட்டியவற்றுள் சிறப்பு நோக்கி இது வாய்த்த மாளிகை என்று பெயர் பெற்றதாகவும், இறை வனுக்கு வாய்த்தமாளிகைப்பெருமாள் என்று அவனே பெயர் சூட்டியதாகவும் அது பேசுகிறது. (தலசருக்கம் பா. 150).

11 A. R. E. 57/1920 பார்த்துப் படிக்கப்பட்டது.

12 ''பொருந்திய செல்வப் புவனபதி'' – திருமந்திரம் – பாயிரம் 75

<★>

# சாசனங்கள் பேசுகின்றன

## அணையாத விளக்குகள்

இரண்டாம் ராஜாதிராஜனின் 6-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ரசனைக்கும் சிந்தனைக்கும் உரியது[1]

முன்னர் ஆண்ட சில அரசர்களின் காலத்தில் கொடுக்கப்பட்ட நந்தா விளக்குகள், ஒழுங்காக எரிக்கப்பட்டு வருகின்றனவா என்று கோயில் அதிகாரிகள் கணக்கெடுத்துப் பார்த்திருக்கிறார்கள். அப்போது, விளக்கொன்றினை எரிப்பதற்குப் பொறுப்பேற்றிருந்த ஒருவன் சந்ததியின்றி இறந்து போனதும், இன்னொருவன் எங்கிருக்கிறான் என்றே கண்டு பிடிக்க முடியாத நிலையில் ஊரைவிட்டே ஓடிப் போய்விட்டதும் தெரிய வருகின்றன. உடனே இவ்விளக்குகளை எரிப்பதற்கான மாற்று ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

"....இராஜேந்திரசோழ தேவர் திருவாண்டுகளில் பலரும் வைத்த நந்தா விளக்காட்டிலும் சுங்கந் தவிர்த்தருளிந ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர் (யாண்டு) 15-ஆவது வைத்தருளுந் திருநந்தா விளக்காட்டிலும் கணவதி பாம்பந் கொண்ட விளக்கில் இந்தக் கணவதி பாம்பந் செத்தமையில் இவநுக்கு சந்ததி இலாமையாலும் குடியிலார் இலாமையாலும் இவந் பேரில் உடல்பிடித்து சோறுடையான் திருவரங்கநாத பந்மாயேசுரக் கோந் விடமண்டை கூத்தந் பெரியதேவர் இராஜராஜ தேவர்க்கு (யாண்டு) 16-ஆவது விளக்குக் காலுக்கு இவந் கைகொண்ட ஆடு 22 இராஜராஜ தேவற்கு (யாண்டு) 12-ஆவது தந்நேர் நெய் தாநே அளந்து வந்து இத்தேவற்கு (யாண்டு) -ஆவது இவன் ஓடிப்போய் இவன் ஊரிலன் என்று அறியாமையால் இந்த நக்க நாராயணன் பேரில் உடலுள்ளிது கொண்டு இவன் குடியில் நாதன் பொன்னுமேனி இத்தேவற்கு (யாண்டு) 17-ஆவது வரை இவன் பரமும் தாநே அளந்து வந்து...."

என்று, நமக்குச் சற்றுக் குழப்பம் தோற்றுவிக்கும் நடையில் சொல்கிறது அந்தக் கல்வெட்டு.

எச்சத்தாற் காணப்படும்

உள்ளூரிலிருந்த ஒரு வியாபாரி பிக்ஷாடன தேவர் உருவத்தை எழுந்தருள்வித்தான். ஆனால் கோயிலில் பிரதிஷ்டை செய்யுமுன் இறந்து விடுகிறான். இறக்கும் முன் தன் மகனை அழைத்து, தேவரைத் திருப்பிரதிஷ்டைசெய்து திருநாமத்துக் காணியாக நிலமும் கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறான். "பெற்றான் பொங்காமேனி" என்ற பெயருடைய அந்த மகன் தந்தையின் இறுதி வேண்டுகோளை நிறைவேற்றுகிறான்; நிறைவேற்றிய செய்தியை நம்மிடம் அவ்வாறே வெளியிடுகிறான்.

"எங்கள் பிதாக்கள் எழுந்தருளிவித்த பிக்ஷகாடந தேவரை திருப் ப்ரதிஷ்டை பண்ணுவதற்கு முந்ம்பே அவர் மரிக்கிறார் என்னையித் தேவரைத் திருப் பிரதிஷ்டையும் பண்ணிவித்து இத்தேவற்கு திருநாமத்துக்காணியாக அரைமா நிலமுங்குடு என்று சொல்ல நானுமப்படி செய்து..."

என்று, நம்மிடம் அறிக்கை சமர்ப்பிப்பது போலச் சொல்லிச் செல்கிறது மூன்றும் குலோத்துங்கன் காலத்தைச் சேர்ந்த அக்கல்வெட்டு.[2]

---

1 கல்வெட்டு பார்த்துப் படிக்கப்பட்டது. A. R. E. 901920

2 ,, ,, Ibid 82

<✱>

# இலக்கியங்கள்

## முதல் செய்தி

மழபாடி பற்றி நமக்குக் கிடைக்கும் முதல் இலக்கியக் குறிப்பு, பல்லவ மன்னன் சிம்மவிஷ்ணுவென்று கருதப்படும் ஐயடிகள் காடவர்கோனுடைய க்ஷேத்திரவெண்பாவில் இடம் பெற்றுள்ள ஒரு பாடலாகும்.[1]

இழவாடிச் சுற்றத்தா ரெல்லாருங் கூடி
விழவாடி யாவி விடாமுன்னம்-மழபாடி
ஆண்டானை யாரமுதை யன்றயன்மால் காணுமை
நீண்டானை நெஞ்சே நினை

என்ற அப்பாடல், அடிகளுடைய இயல்பான விரக்தியுணர்வுக்குச் சொல் வடிவம் கொடுப்பதோடு நிற்கிறது.

## மூவர் மொழிந்தவை

இத்தலங்குறித்துச் சம்பந்தர் பாடியவையாக மூன்றும், அப்பர் பாடியவையாக இரண்டும், சுந்தரருடையதாக ஒன்றும், ஆக ஆறு பதிகங்கள் கிடைத்துள்ளன:

| திருமுறை | பதிகம் | தொடக்கப்பாடல் |
|---|---|---|
| 2 | 9 | களையும் வல்வினை |
| 3 | 28 | காலையார் வண்டினம் |
| 3 | 48 | அங்கையாரழலன் |
| 6 | 39 | நீரேறு திருமேனி |
| 6 | 40 | அலையடுத்த பெருங்கடல் |
| 7 | 24 | பொன்னார் மேனியனே |

இவற்றுள் களையும்வல்வினைப் பதிகம் சொல்நளினங் காட்டிப் புதிய சொல்லாக்கங்களைப் (coinage) படைத்துச் சம்பந்த முத்திரையைப் பதிக்கிறது. அப்பரது அலையடுத்த

பெருங்கடல் பதிகம் மழபாடிவயிரத்தூணை நினைந்து நைந்து அரற்றும் அவரது உள்ள உருக்கத்தை மாற்றின்றிக் காட்டுகிறது. புகழ் பெற்ற பொன்னூர்மேனிப் பதிகம் சுந்தரரின் உரிமையான நெருக்கத்தை உணர்த்துகிறது.

## மழபாடியை மறந்தாயா?

சுந்தரருக்கும் மழபாடிக்குமிடையேயுள்ள நெருக்கம், மறதியில் தொடங்கியதாகச் சேக்கிழார் ஓர் இனிய கற்பனைக் காட்சியைப் படைத்துள்ளார். சுந்தரர், காவிரித் தென் கரைத்தலமான திருவாலம்பொழிலைத் தரிசித்துவிட்டு உறங்கச் சென்று விட்டதாகவும், கனவில் இறைவன் தோன்றி, "மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?" என்று வினவியதாகவும், சுந்தரர் விழித்தெழுந்து மழபாடி வந்து தொழுததாகவும் அவர் குறிப்பிடுகிறார்.

இந்தக் கற்பனைக்குப் பின்புலமிருக்கிறது. சுந்தரர், தமது பொன்னூர்மேனிப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் முதல் மூன்று வரிகளில் இறைவனை முன்னிலைப்படுத்தி அழகுற வருணித்துவிட்டு, இறுதி வரியில் "உன்னையல்லால் யாரை நினைப்பேன்?" என்று உருக்கமாகக் கேட்டு முடிக்கிறார். இவ்வாறு சுந்தரர் இறைவனை எதிர்க் கேள்வி கேட்க வேண்டுமென்றால், இறைவன் அவரிடம் "மறந்து விட்டாயா?" என்று வினவியிருக்கவேண்டும் என்று சேக்கிழார் அனுமானம் செய்திருக்கிறார்.[2]

## சுந்தரரில் அப்பர்

சுந்தரரின் உருக்கமும் நெருக்கமும் அவருக்கேயுரியவை. ஆனால் வருணனைப் பகுதிக்கு அவர் அப்பரின் பாடல்களிலிருந்தே ஊக்கம் பெற்றிருக்கிறார் என்பது ஒப்பீட்டு ஆராய்ச்சியில் புலனாகிறது.

அப்பர் : பொன்னியலுந் திருமேனி யுடையான் கண்டாய்
பூங்கொன்றைத் தாரோன் றணிந்தான்கண்டாய்

மின்னியலும் வார்சடையெம் பெருமான் கண்
டாய் (திரு. 6, பதி. 39, பா. 8)
மருசுடரின் மாணிக்கக் குன்றுகண்டாய்
(பா. 10)

சுந்தரர்: பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்
கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை
யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள்மாணிக்கமே
அன்னே உனையல்லா லினியாரை நினைக்கேனே
(திரு. 7, பதி. 24, பா. 1)

பொன்னும் மெய்ப்"பொருளும்"

இறைவனை வருணிக்கும் பாடல்களில் இத்தலத்தைப் பொறுத்தவரை பொன், மணி, முத்து, போன்ற அடைமொழிகள் பல்கி வருகின்றன. இதற்குச் சமூகவியற் காரணங்கள் இருக்கக் கூடும் என்று கருதுவது அதீதமான கற்பனையாகவே படுகிற தென்றாலும் கூட இவ்வருணனைகள் சற்று நேரம் நம் சிந்தனையைப் பிடித்து நிறுத்தத்தான் செய்கின்றன.

"காச்சிலாத பொன்னொக்குங் கனவயிரத்திரள்
ஆச்சிலாத பளிங்கினன் . . ."

—சம்பந்தர். திரு. 2, பதி. 9, பா. 2

"நிலையடுத்த பசும்பொன்னால் முத்தால் நீண்ட
நிரை வயிரப் பலகையாற் குவையார்த்துற்ற
மலையடுத்த மழபாடி வயிரத்தூணே..."

—அப்பர். திரு. 6, பதி. 40, பா. 1

இப்படிப் பல பாடல்கள்.

ஆடல்நெறி – பாடல்நெறி

மழபாடியில் இசையும் நடனமும் பயிலப்பட்டதாகச் சம்பந்தரின் இரு பாடல்களில் குறிப்புகள் கிடைக்கின்றன.

"பலியும்பாட்டொடு பண்முழ வும் பல வோசையும்
மலியும் மாமழமாடி" (திரு. 2, பதி. 9, பா. 10)

"மங்கைமார் நடம்பயில் மாமழபாடி" (திரு, 3, பதி, 28, பா. 5)

ஆடல் பாடல் ஆதியாய கலையின்பங்களைத்துய்த்து. "மண்ணில் நல்ல வண்ணம் வாழ" வழி காட்டிய சைவநெறியின் பன்முனை வளர்ச்சியில் இந்நிலை ஓர் அங்கமாக இருந்திருக்கவேண்டும். இது, திருவையாற்றின் ஆதிக்க விளைவாக (influence) இருக்கலாம்.

### நயங்கள் சில

சம்பந்தருடைய சொல் நயத்துக்குச் சான்முக ஓரிரு பாடல்களை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். கங்கையைச் சிவன் தன் சடையில் ஏற்றதனை,

"பள்ளமார் சடையிற் புடையே யடையப்புனல்
வெள்ளம் ஆதரித்தான் விடையேறிய வேதியன்"
(திரு. 2, பதி, 9, பா. 4)

என்றும், மழபாடியின் சிறப்பினை,

"கறையணி மிடறுடைக் கண்ணுதல் நண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுமூர்
துறையணி குருகினந் தூமலர் துதையவே
மறையணி நாவினன் மாமழபாடியே"
(திரு. 3, பதி. 28, பா. 2)

என்றும், அவர் பாடும்போது கையாண்டுள்ள சொற்களின் புதுமை நம்மை மயக்குகிறது.

நாவுக்கரசரின் எளிமைக்கும் உருக்கத்துக்கும் உதாரணமாக ஒரு பாடலைக் குறிப்பிடலாம்.

"ஊனிகந்தூண் உறிகையர் குண்டர்பொல்லா
ஊத்தைவாய்ச் சமண ருறவாக்கொண்டு
ஞானகஞ்சேர்ந் துள்ள வயிரத்தை நண்ணு
நாயேனைப் பொருளாக ஆண்டுகொண்ட

மீனகஞ்சேர் வெள்ளநீர் விதியாற்சூடும்
வேந்தனே விண்ணவர்தம் பெருமான்மேக
வானகஞ்சேர் மழபாடி வயிரத்தூணே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே''

(திரு. 6, பதி. 40, பா. 4)

## தலபுராணம்

திருமழவாடிப் புராணம் என்ற பெயருடைய இத்தல புராணம் கி.பி. 1566-இல் இயற்றப்பட்டது. நூலாசிரியர் செங்கமலப்பொற்பாதன் என்ற இயற்பெயருடைய கமலை (திருவாரூர்) ஞானப்பிரகாசர்.[3] பிற தலபுராணங்கள்போலவே ஸ்காந்தத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதாகக் கூறிக் கொள்ளும் இத்தலபுராணத்தில் 581 செய்யுள்கள் உள்ளன. கி.பி. 1908-இல் தஞ்சை எல். உலகநாதன் என்பவரால் நூல் அச்சிட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

### கதைகள்[4]

*தலசருக்கம்*

தலப்பெருமை பல பாடல்களில் கூறப்படுகிறது. பலி பீடத்திலிருந்த உணவைக் கழுகொன்று உண்ணுகையில், வேடன் ஒருவன் எய்ததால் விழ்ந்தது. அதனை ஒரு யாளி உண்டு கோயிலை வலம்வர, இரண்டும் முக்தியடைகின்றன. இவ்வாறு சில வருணனைகள் இடம் பெறுகின்றன.

இதன்பின் மணிவச்சிரலிங்கத்தைத் தன் தவவலிமை யால், பிரமலோகத்திலிருந்து இடம்பெயர்ந்து நிலத்தைப் பிளந்துகொண்டு தோன்றச் செய்த புருஷாமிருகர் பற்றிய நிகழ்ச்சிகளும், வயிரலிங்கத்தைத் தேடிவந்து பூசலிட்ட பிரமனை இறைவன் தோன்றி அமைதிப்படுத்தி, நாள்தோறும் இங்குவந்து வழிபட்டுச் செல்லுமாறு ஆணையிடுவதும் கூறப் படுகின்றன.

கிலகமலையில் புருஷாமிருகர் வாழ்ந்து வருகையில் வேள்வி யொன்றுக்காக அவரைப் பிடித்துச் செல்ல வீமன்

வருகிறுன். இருவர்க்கும் வழக்கு ஏற்பட்டு தருமனிடம் செல்ல அவன் தீர்த்து வைக்கிறுன். வீமன் கோயிலை அழகுற எழுப்பித் திருச்சுற்றுமதிலுக்கு "வாய்த்த மாளிகை" என்று பெயரிடு கின்றுன். இறைவர்க்கும் "வாய்த்தமாளிகைப் பெருமாள்" என்று பெயர் சூட்டுகின்றுன்.

**மழுவாடிச்சருக்கம்**

சிவனது ஆடல் நிகழும் வேளையில் பாற்கடலாடச் சென்று விட்டதற்கு(?) வருந்திய மார்க்கண்டேயன், அவரது பரசு நடனக் கோலங்காண விழைந்து கடுந்தவம் செய்கிறுன். இறைவன் வைகாசி விசாக நாளில், அசுரரை அடர்த்த மழுவுடன் தோன்றி நடஞ் செய்தருளுகின்றுன்.

**சிவகங்கைச்சருக்கம்**

பாண்டி நாட்டில் இலம்படன் என்ற அந்தணனுக்கு மகனுகப் பிறந்த சுசேனன் பஞ்சமாபாதகங்கள் புரிந்தும், ஆசான் மகளை இச்சகம் பேசிக் கெடுத்தும், கயமையின் உருவகமாகத் திரிகிறுன். காட்டு வழியில் அவன் செல்கையில் வேங்கை யொன்று அவனைக் கொன்று தின்கிறது. மிகுந்த எலும்பு ஒன்றை ஒரு கழுகு கவ்விச் செல்கையில் அது நழுவிச் சிவகங்கையில் விழுந்து விடுகிறது. சுசேனனின் தீவினைத் தொடர்பு அறுபட, அவன் சிவனது சாருபம் பெற்று உய்கிறுன்.

வெண்குட்டத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் கிட்டணன் என்ற முனிவன், லட்சுமிதேவி தன்னைக் கண்டு சிரித்துவிட்டதால் சிற்றமுற்று, அவளுக்கும் வெண்குட்டம் பீடிக்குமாறு சபிக்கிறுன். அவள் இந்தச் சிவகங்கையில் மூழ்கி நோய் தீர்கிறுள்.[5] அதனுல் இத்தீர்த்தம் திருவின் தீர்த்தம் (லக்ஷ்மி தீர்த்தம்) என்று பெயர் பெறுகிறது.

**வைத்தியநாதச்சருக்கம்**

வயிரத்தூண்நாதர் வைத்தியநாதர் என்று பெயர்பெற்ற விதத்தை இச்சருக்கம் கூறுகிறது. சந்திரன், தன் மனைவியருள் ரோகிணிபால் மட்டும் நாட்டங் கொண்டிருந்ததால் க்ஷயரோக

நோய் பிடிக்குமாறு தக்கனுல் சபிக்கப்பட்டதும், வயிரத் தூணரை வேண்டி, ஒருபட்சம் வளர்வதும் ஒருபட்சம் தேய்வ துமாகிய விமோசனம் பெற்றதும் விவரிக்கப் படுகின்றன.

தேவாதிச்சருக்கம்

திருமாலின் மார்பில் இடம் பெறுவதற்காகத் திருமகள் தவத்துறையில் (லால்குடி?) தவம்புரிய, திருமால் சிவனின் வலப்பாகத்தில் இடம்பெற இத்தலத்தில் தவஞ் செய்கிருர். அவர் இட்டபூர்த்தி எய்தியதும்,

பார்க்கவ முனிவனின் மனைவியை மூகன் என்ற அரக் கன் கவர்ந்தபோது ஒருதலையாகச் சாட்சி கூறிய அக்கினி, அசுத்தத்தை உண்ணுமாறு முனிவனுல் சபிக்கப்பட்டுப் பின் இத்தலத்தில் தொழுது, அசுத்தத்தையுண்டாலும் சுத்தமாக் குந் தன்மை பெற்றதும்,

மகிஷாசுரனைக் கொன்ற விந்தை, (விந்தியாவாசி துர்கை), தாரகாசுரனை வதைத்த முருகன். இவர்கள் வீரஹத்தி தீர்ந்த கதையும்,

தேவாசுரப் போரில் இறந்துபோன தேவரை உயிர்ப் பிக்க, தெய்வ வைத்தியர் இருவர் சஞ்சீவி முதலிய தொகை மருந்து பெற்றதும்,

மயினுடாதேவி(?)யின் தந்தையால் கிரணங்கள் மழுங் குமாறு கடையப்பட்ட கதிரவன் துயர் தீர்ந்ததும்,

இச்சருக்கத்தில் பாடப்படுகின்றன.

வசிட்டச்சருக்கம்:

திருமாலே மேலான தெய்வமென்று வலக்கை நீட்டிச் சத்தியம் செய்த வியாசருடைய கை அப்படியே நின்று விடுகிறது[6] அது சரிதான் என்று ஒத்துப்பாடிய வசிட்டர் ஊமையாகிப் போகிருர். இருவரும் தம் தவறுணர்ந்து, இங்கு வந்து பர்ணசாலை யமைத்துத் தவம் புரிகிருர்கள்; பாவந்தீர்கிருர்கள்.

அகத்தியச்சருக்கம்:

மேருமலையைப் போல் தன்னையும் சூரியன் வலம் வர வேண்டும் என்று விரும்பிய விந்தியமலை ஓங்கி வளர்ந்து சூரியனை மறித்து விடுகிறது. தென்திசையைச் சமமாக்க விரைந்து வந்துகொண்டிருந்த அகத்தியரைக் கண்டு அவரிடம் சரண்புகுகிறது சூரியன். விந்தியமலையை அடக்குவதற்குரிய வலிமை தன்னிடம் இல்லாததால் இங்கு வந்து தவஞ் செய்து வலிமை பெறுகிறார் அகத்தியர்.

ஒரு கணிப்பு

திருமுறைகள் போன்ற முற்காலச் சமய இலக்கியங்களில் மிகைபட அமைந்த வருணனைகளும் அமானுஷ்யமான செய்திகளும் இருக்கின்றனவாயினும், அவை நுண்ணறிவு படைத்த பிரச்சாரத்தூண்டுதல்களாக அமைந்து விடுவதால் சலிப்புக்கிடமின்றி இன்பமூட்டுகின்றன. பின்னாள்களில், வானவரும் தானவரும் வந்து தொழுததாகப் பேசும் ஒவ்வொரு தலபுராணமும் "ஒருபோக்கிலமைந்த" (stereotyped) படைப்பாகவே இருப்பதால் உள்ளூர் அபிமானிகளுக்கு ஏதோ ஒரு விதப் பெருமித உணர்வைத் தருவதோடு நின்று விடுகிறது.

உதாரணமாகக் கோயில் திருநந்தவனத்திலிருக்கும் செடி கொடிகள் மரங்களாகக் கோங்கு, அசோகு, செண்பகம், மகிழம், மந்தாரம், மாதவி, பலாசு, புன்னை, கொன்றை, வில்வம், கரந்தை, மல்லிகை, முல்லை, கரவீரம், வெட்சி, பிச்சி, செருந்தி, பாதிரி–இப்படி ஒரு பட்டியலே கொடுக்கப்படுகிறது இத் தலபுராணத்தில்.

முன்னோர் மொழியும் பொருளும்

"பரிதியே சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையாம் மழபாடி வயிரத்தூணே"

என்பது அப்பர் தேவாரம். (திரு. 6, பதி. 40, பா. 7) இதிலுள்ள "வழித்துணை" என்ற சொல்லைத் தகுந்த இடத்தில் கையாளவேண்டும் என்று விரும்பியிருக்கிறார் தலபுராண ஆசிரியர். வீமன் புருடாமிருகரிடம், மழபாடியைத் தாண்டு

வதற்குள் தன்னை அவர் பிடித்து விட்டால், தான் அவரது உடைமையாவதாகக் கூறி ஓடுகிறான். வீமனின் ஒரு கால் மழபாடியின் எல்லையிலும், ஒரு கால் திருப்பூந்துருத்தி எல்லையிலும் இருக்கும்போது அவனைப் பிடித்துவிடுகிறார் புருடாமிருகர். இருவர்க்கும் வழக்கு ஏற்பட்டுத் தருமனிடம் செல்கின்றனர். தருமன் உண்மை நிலையைக் கேட்டறிந்து, ஒரு காலைப் புருடாமிருகர் எடுத்துக் கொள்ளலாம் என்று தீர்ப்பளிக்கிறான். நடுநிலை தவறாத இத்தீர்ப்பை மெச்சி வீமனை விட்டுவிடுகிறார் புருடாமிருகர். அப்போது வீமன்,

"மாதுயருய்த்திடாமல் 'வழித்துணை'யாகத்தன்னைப்
பாதுகாத் தினிதளிக்கும் பசும்பொன் முத்து" (தல. 147)

என்று இறைவரைப் போற்றுவதாக முடிக்கிறார் ஆசிரியர். வழித்துணை என்ற சொல், "தப்பியோடும் வழியில் துணை நின்றவர்" என்று தலபுராண ஆசிரியர் குறிக்கும் பொருளில் சிறப்புற அமையவில்லை.

நடனசந்தம்

குறைகள் பல இருந்தாலும் ஞானப்பிரகாசரின் தனி முத்திரையுள்ள இடங்களும் சில உள்ளன. மார்க்கண்டன் முன் சிவன் பரசுபாணியாக ஆடும் காட்சியில் பாட்டின் சந்தம் காட்சியைக் கண்முன் நிறுத்துகிறது.

"திருவரை செம்பொற்புலியதளாடத் திருமார்பத்
திருள்கடி வேணிப் பிறைபொருமேனத் தெயிருடப்
பரிபுரமாடப் பரதவிநோதப் பதமாடத்
திருநகையாடப் பரசுறுபாணிச் சிவனாடும்"
(மழுவாடிச் சருக். 97)

பொதுவில், "திருமழுவாடிப் புராணம்" இலக்கியம் என்று அழைக்கப்படும் தகுதியில் குறைந்ததல்ல.

---

1 பதினோராந் திருமுறை – க்ஷேத்திர வெண்பா பா. 18

2 இதே போன்ற கற்பனையைச் சேக்கிழார் வேறோரிடத்திலும் கையாண்டுள்ளார். ஞானசம்பந்தர் ஆலங்காட்டுப் பதியினுள்

நுழைய அஞ்சி வெளியே படுத்துறங்குகையில் இறைவன் கனவில் தோன்றி "நம்மை அயர்த்தனையோ பாடுதற்கு?" என்று கேட்டதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிருர். (சம்பந்தர் புராணம்— பா. 1009). ஆலங்காட்டுப் பதிகத்தின் முதற் பாடலில் சம்பந்தர், "துஞ்ச வருவாரும்....நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும்..." என்று பாடியிருப்பதே (திரு. 1, பதி. 45, பா. 1) இந்தக் கற்பனைக்கும் அடிப்படையாக இருக்க வேண்டும்.

3 தமிழ் இலக்கிய வரலாறு — மு. அருணசலம் — (16–ஆம் நூற்றுண்டு – பாகம் 2 – பக்கம் 272 பார்க்க).

4 நூலுள் பொருத்தமான இடங்களில் தலபுராணச் செய்திகள் கையாளப்பட்டுள்ளன. எனவே கதைகள் சுருக்கமாகக் கொடுக்கப்படுகின்றன.

5 நதிகள் மக்களின் உடல், உள்ளப் பிணிகளைப் போக்கும் தன்மை படைத்தனவாகக் கருதப்படுவது வேதகால அளவுக்குப் பழமையானது. (ரிக். III 3.3, X 75) இளந்தேவதைகளாகவும், மனைவியராகவும், அன்னையராகவும் நதிகள் கருதப்பட்டன. என்றும் அழியாத இளமையும், மோட்சமும் தரும் ஆற்றல் அவற்றுக்கு உண்டென்று கூறப்பட்டுள்ளது. — Rivers of India – S. D Misra-p. 13.

6 வியாசருடைய உயரத்தூக்கிய கை அப்படியே நின்றுவிட்ட கதை மிகப் பிரபலமானது. ஆந்திரத்திலும், கர்நாடகத்திலும் உள்ள "மாசதிக்கற்க"ளில் உயர்ந்து நிற்கும் கையுருவம் பொறிக்கப்பட்டிருப்பதுண்டு. அதனை "வியாசன்தோள்" என்று மக்கள் வழங்குகின்றனர்.

<✲>

# சுந்தராம்பாள் சன்னிதி

3 ஆம் திருச்சுற்றில் தனித்துக் காணப்படும் தேவி கோயில் 'சுந்தரம்பாள் சன்னிதி' என்று அழைக்கப்படுகிறது. நித்ய உத்ஸவத்தில் தேவிக்கு வழக்கமான இடம் அளிக்கப்படுகிறது. இது தவிர மார்கழி மாதத்தில் தனிப்பட்டோர் உபயமாகத் திருப்பள்ளியெழுச்சி அலங்காரம் நடைபெறுகிறது. பூப்பாவாடை, மாலை முதலியன கொண்டு தேவி அலங்கரிக்கப்படுகிருள்.

இக் கோயிலில் சிதைந்தும் இடம்மாறியும் சுமார் பத்து கல்வெட்டுகள் உள்ளன. மூன்றும் குலோத்துங்கனுடைய ஒரு கல்வெட்டின் குறிப்பு வெளியாகியுள்ளது. (A. R. E. 97/1920)

இல்லாத மண்டபம்

சன்னிதியெதிரில் சற்று வடக்கே ஒரு நாட்டிய மண்டபம் இருந்ததாகத் தெரிகிறது. இது ''நவராத்திரிமண்டபம்'' என அழைக்கப்பட்டதாகவும், தேவதாசி முறை வழக்கிலிருந்த போது இங்கு நாட்டியம் நடந்ததுண்டென்றும் கூறப்படுகிறது. இந்த மண்டபத்திலிருந்த ஒரு கல்வெட்டின் குறிப்பு 1920-ஆம் ஆண்டைய கல்வெட்டு ஆண்டறிக்கையில் 98-ஆம் கல்வெட்டாக வெளியிடப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் முழுமையான வாசகங்கள் 'தென்னிந்தியக் கல்வெட்டுகள்' தொகுதி 13-இல் 55-ஆவது கல்வெட்டாக வெளியிடப்பட்டுள்ளன.

கோயில் மதிற்சுவரையொட்டிச் சில கற்களும் சிங்க பீடத்தூணென்றும் கிடக்கின்றன. இவை அந்த மண்டபத்தைச் சேர்ந்தனவாக இருக்கவேண்டும்.

தேவிக்கு ரிஷப வாகனமும், புதிதாகப் பிரதிஷ்டிக்கப் பட்டுள்ள சண்டிகேஸ்வரியும் இருக்கிருர்கள். ஆனல் துவஜ ஸ்தம்பம் இல்லை. முன்பு இருந்ததாகவும், ஆடிப்பூரத்தில்

பிரம்மோற்சவம் நடைபெறும் என்று கேள்விப்பட்டிருப்ப தாகவும் சிலர் கூறுகின்றனர்.

### அழகியநாயகி

இக்கோயிலைப் பற்றிக் குழப்பான கருத்துகள் நிலவுகின் றன. தலபுராணத்தில் "அன்னையாம் மழுவையில் வாழ் அழகியநாயகி" வாழ்த்தப்படுகிறாள் என்பது உண்மையே. ஆனால் அது புவனபதி நாச்சியாரைக் குறித்ததாகத் தோன்று கிறது. புவனபதி நாச்சியார், தமது இயற்பெயரிலோ, இப் போது வழங்கும் பாலாம்பாள் என்ற பெயரிலோ தலபுராணத் தில் குறிப்பிடப்படவில்லை. மேலும், தேவி தனியாகக் கோயில் கொண்டிருந்த செய்தியைத் தலபுராணத்திலிருந்து அனுமா னிக்க இயலவில்லை.

தலபுராணத்தின் "அழகியநாயகி"யே இப்போது மொழிமாற்ற வடிவில் சுந்தராம்பாளாக மாறியிருக்கிறது. எனவே சுந்தராம்பாள் என்ற பெயர் தலபுராணத்திலிருந்து பெறப்பட்டதாகலாம். அல்லது தலபுராணக் காலத்தில் புவன பதி அழகியநாயகியென்று அழைக்கப்பட்டு வந்திருக்க, இக் கோயில் தேவிசன்னிதியாக மாறியபின் அந்தப் பெயர் இந்தத் தேவிக்கு உரியதாக மாறியிருக்கலாம். அழகியநாயகி "ஈரேழு புவனமு மீன்றெடுத்துக் காப்பவளாக"த் தலபுராணத்தில் வருணிக்கப்படுவது நம் ஐயத்தை வலுப்படுத்துகிறது.

### லக்ஷ்மிதீர்த்தம்

கோயிலுக்கெதிரிலுள்ள குளம், லக்ஷ்மிதீர்த்தம் எனப் படுகிறது. லக்ஷ்மி இதில் குளித்துக் குட்டநோய் தீர்ந்ததாக வும் இப்போதும் குட்டநோயாளிகள் குளித்தால் குண மடைகிறார்கள் என்றும் கூறப்படுகிறது.

தலபுராணம். சிவகங்கைத தீர்த்தத்தோடுதான் இக் கதையை இணைக்கிறது.[1] அதனால் சிவகங்கைக்குத் 'திருவின் தீர்த்தம்' என்ற பெயர் ஏற்பட்டதாகவும் தலபுராணம் கூறுகி றது. எனவே, இக்குளம் பிற்படத்தோன்றியிருக்க வேண்டும்.

சில விவரங்கள்

விமானச் சுதை உருவங்களில் சங்கு சக்கரந் தாங்கிய தேவி உருவங்கள் அதிகம் உள்ளன. சமீபத்தில் புதுப்பிக்கப் பட்ட அறிகுறியிருப்பினும், உடை முதலியவை பழமையான அமைப்புடையவையாகத் தெரிகின்றன. ஆணுருவத்திற்கு மார்பு செய்து பொருத்தியது போலவும் சில உருவங்கள் தோற்றுகின்றன. கிருஷ்ண லீலை உருவங்களும் உள்ளன.

1939-ஆம் ஆண்டு இலந்தைக்கூடம் என்ற ஊரைச் சேர்ந்த இருவர் திருப்பணி செய்திருக்கின்றனர். அப்போது புதிய சுதை உருவங்கள் சில பொருத்தப்பட்டன என்று கூறப் படுகிறது.

கோயிலின் கருவறை அமைப்பு சதுரமாக இருப்பதால், இது பழைய காமக்கோட்டமாக இருந்திருக்க வாய்ப்பில்லை. சிவன் கோயிலாகவே இருந்திருக்க வேண்டும்.

"இராஜேந்தர சோளீஸ்வரமுடையார்"

துண்டுக் கல்வெட்டுகளை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் "பிடாகை வதிட்டாச்சிராமத்து இராஜேந்திர சோளீஸ்வரமுடையார்" என்பது இறைவர் பெயராகத் தோன்றுகிறது.

வதிட்டாச்சிராமம் என்ற பெயருக்கேற்ப இங்கு ஆசிர மம் அல்லது மடம் இருந்திருக்கலாம். சுவாமி கோயிலிலுள்ள ராஜேந்திரசோழனின் கல்வெட்டொன்றில்[2] உச்சிக்கால பூஜையின்போது அமுது செய்தருளும் சோற்றில் சிவயோகி களுக்கும் தபஸ்விகளுக்கும் உணவளிக்க ஏற்பாடு செய்த குறிப்புக் காணப்படுகிறது. அந்த சிவயோகிகளும் தவசிகளும் இந்த ஆசிரமத்தில் தங்கியிருந்திருக்கலாம். அப்போது இங்கு எழுந்தருள்விக்கப்பட்ட இறைவர் இராஜேந்திர சோழீஸ்வர முடையார் என்று பெயர் பெற்றிருக்கலாம்.

குகை-ஆசிரமம்

குகை என்றொரு சொல், துண்டுக் கல்வெட்டொன்றில்

காணப்படுகிறது. குகை என்ற இச்சொல் சைவ மடத்தைக் குறிக்கும். 'குகை இடி கலகங்கள்' நடந்ததற்குத் திருத்துறைப் பூண்டியிலுள்ள மூன்றும் ராஜராஜன் கல்வெட்டு[3] சான்று தருகிறது. அதுபோலக் குகை இடி கலகத்தில் இந்த மடம் சிதைக்கப்பட்டிருக்கலாமோ என்றெல்லாம் கற்பனை பூர்வ மான ஊகங்கள் ஏற்படுகின்றன. இவ்வூருக்கு அருகிலுள்ள திருப்பூந்துருத்தியில் சைவமடம் இருந்திருப்பதால் இங்கும் இருந்திருக்க வாய்ப்புண்டு என்று கருதமுடிகிறது.

வசிட்டர் இத்தலத்தில் ஆசிரமம் அமைத்துத் தொழுத தாகத் தலபுராணம் கூறுகிறது.[4] மேலும், இத்தலத்தில்தான் வசிட்டர் குலத்தைச் சேர்ந்த ஊர்மிளாதேவியை நந்திகேஸ் வரர் திருமணம் செய்துகொள்ளும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. எனவே வசிட்டரின் பெயரில் ''வசிட்டாச்சிரமம்'' என்று இந்தச் சுற்றுப் புறத்தைக் குறித்திருக்கலாம்.

கோயிலின் தென்புறச் சுவர்க் குமுதத்தில் ''...பில் எழுந்தருளியிருக்கும் நாயனார் திருத்தொண்டர்களாச்சிரமு ...'' என்று கூறும் துண்டுக் கல்வெட்டு உள்ளது.

### பெருமாள் திருக்கோயில்?

வைத்தியநாத சுவாமி கோயிற் கல்வெட்டு ஒன்று, மூன் றும் ராஜராஜன் காலத்தில் பெருமாள் திருக்கோயிலும் திரு மண்டபமும் தாயிலுநல்லான் திருமண்டபமும் பெருக்க அழகி தாகச் செய்யப்பட்ட நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது[5] அந்தப் பெருமாள் திருக்கோயில் என்பதுதான் இந்தக் கோயிலாக இருக்குமோ என்ற சந்தேகமும் எழுகிறது. அப்படியாகுமா னால் ''தாயிலுநல்லான் திருமண்டபம்'' என்பது இந்தக் கோயிலை ஒட்டி இருந்த நவராத்திரிமண்டபமாக இருக்க வேண்டும்.

துண்டுக் கல்வெட்டொன்றில் ''தாயிலுநல்ல பெருமா ளான சித்தராயன் எழுத்து'' என்ற தொடர் காணப்படு கிறது.

கோயிலமைப்பு

கருவறை, அர்த்தமண்டப அமைப்பைப் பார்த்தால் ஏதோ ஓரிடத்தில் கலகலத்து உதிர்ந்துபோன கோயிற் கற்களை வேறோரிடத்தில் கொண்டு வந்து பொருத்திக் கட்டிவிட்டதுபோல் தோன்றுகிறது. கல்வெட்டுகளும் முழுமையின்றி, தொடர்ச்சியின்றி, வடிவ மாத்திரத்தில் கல்வெட்டுகளாக நிற்கின்றன. அரசகுலத்தவன் அல்லது கந்தர்வன் உருவம் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ள கற்பாளங்கள் (Slabs) இரண்டு எங்கிருந்தோ கொண்டுவந்து இடப்பொருத்தமின்றி இணைக்கப்பட்டுள்ளன. அதிஷ்டானப் பகுதி சிறிது தரையில் புதைந்துள்ளது.

அர்த்த மண்டபத்தையடுத்து இருபுறமும் வாயிலுடன் இடைநாழி உள்ளது.

முகமண்டபம் கல்வெட்டுகளின்றி, ஏறுமாறுக இல்லாமல் ஒழுங்காக உள்ளது. அகன்ற பலகையுடைய தூண்கள் வெளிச்சுவரில் சித்திரிக்கப்பட்டுள்ளன. இது சோழர் கால மண்டபமாக இருக்கவேண்டும்.

விமானச் சுதையுருவங்கள்

சிறிய திராவிட விமானம். இருதளங்களாகப் பிரிக்கப்பட்டுச் சுதை உருவங்கள் செய்து பொருத்தப்பட்டுள்ளன. கிரிவங்களில் இந்த உருவங்கள் இடம் பெறுகின்றன.

தெற்கில் கீழே, வரத ஊரு ஹஸ்தங்களுடன் அக்ஷமாலை தாங்கி நிற்கும் தேவி; மேலே, அபய ஹஸ்தத்துடன் மான் மழு தாங்கி சுகாசனத்தில் அமர்ந்திருக்கும் தேவி.

மேற்கில் கீழே, சங்கு சக்ர தாரிணியாக தேவி. இவ்வுருவத்தைப் பார்த்தால் திருமாலுக்குப் பெண்மார்பு செய்து பொருத்தியதுபோல இருக்கிறது. எவ்வாறாயினும் இது பழமையான சுதையுருவம். மேல் தளத்தில், அமர்ந்த நிலையில் சங்கு சக்ரதாரியான விஷ்ணு. கீழ்த்தளத்தின் இரு மூலைகளிலும் பூதனையின் பாலைக்குடித்து உயிர்போக்கும் கண்ணன்.

வடக்கில் கீழ்த்தளத்தில் சங்கு சக்ரதாரிணி. இவ்வுருவமும் பழமையான விஷ்ணு உருவமாகவே தோன்றுகிறது. இத்தளத்தின் மூலைகளில் உடுக்கை, பாசம், கத்தி தாங்கிய மாரியம்மன். மேலே அக்ஷமாலை, கெண்டியுடன் சுகாசனத்தமர்ந்த நிலையில் தேவி. இடையில் கண்ணனின் ராஸக்கிரீடை, ரிஷிபத்தினியரிடையே பிக்ஷாடனர். இவ்வுருவங்களில் நளினமில்லை; கொச்சைத் தன்மை (Vulgarity) தெரிகிறது.

### சிற்பங்கள்

சன்னிதியின் அர்த்தமண்டப வாயிலின் இருபுறமும் துவாரபாலகர் போல் விநாயகரும் முருகரும் வைக்கப்பட்டுள்ளனர். இச்சிற்பங்கள் வேறு எங்கிருந்தோ கொண்டுவந்து வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

### விநாயகர்

மூன்றடி உயரம்- தனி பீடத்தில் வைக்கப்பட்டுள்ளது. அமர்ந்த நிலை- தடித்த உருவம். பாசம் ஓவல் வடிவத்தில் உள்ளது. இடத்தந்தம் உடைக்கப்பட்டுள்ளது. 13 அல்லது 14-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகலாம்.

### முருகன்

பீடத்துடன் சேர்ந்து ஐந்தடி உயரம் - சிலைமட்டும் மூன்றடி - வட்டமான முகம்; உருட்சியான உடலமைப்பு. சக்தி, வஜ்ரம் தாங்கிய கோலம் - சன்னவீரம் அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. கிரீடம் உடைக்கப்பட்டுள்ளது. 13 அல்லது 14-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகலாம்.

### பூசைமுறை

தினமும் இறைவர்க்குப் பூசை முடிவுற்றதும் தேவிக்கும் பூசை நடைபெறுகிறது.

சிந்தூராபாம் த்ரிநேத்ராம் அமிர்த சசிகலாம்<br>
சேகரீம் ரக்த வஸ்த்ராம் பீனேத்துங்க ப்ருவ்ருத்த<br>
தன பர ரமிதாம் யௌவனாரம்ப ருட்யாம்

சர்வாலங்கார யுக்தாம் சரசிஜ நயனும்
பீஜ சங்க்ராந்த மூர்த்திம் தேவீம் பாசாங்குசாட்யா
அபய வரஹராம் விஸ்வ யோனிம் நமாமி

என்ற தியானசுலோகம் கூறப்படுகிறது.

தனுர் (மார்கழி) மாதம் திருப்பள்ளியெழுச்சிக்குத் தனிப்பட்டோர் உபயமாகப் பூப்பாவாடை முதலிய அலங்காரங்கள் செய்யப்படுகின்றன. இதற்குச் சுமார் 50-ரூபாய் செலவாகிறதாம். 13 ஆண்டுகளாக இவ்வாறு தனிமனிதர் ஏற்றுச் செய்து வருகின்றனர். 13-ஆம் நாள் காலையில் அலங்காரத்துக்கான செலவுகளை ஏற்றிருப்பவர் உள்ளூரில் மளிகைக்கடை வைத்திருக்கும் முஸ்லிம் ஒருவராவார்.

கோயிலுக்கு எதிரிலுள்ள குளத்தில் ஒரு மண்டலம் (42 நாள்கள்) குளித்தால் குட்டநோய் தீருமென்று நம்பப்படுகிறது. குறிப்பாக வெண்குட்டநோய் உள்ளவர்கள் இதில் குளித்துக் குணமடைந்திருக்கிறார்களாம்.

---

1 சிவகங்கைச் சருக்கம் பா. 75–76

2 "...உடையார் உச்சம்போது அமுது செய் ... ராஜேந்திர சோழ தேவர் புசங்கசேவாத்திக்கு சிவசோகிகளுக்கும் தபஸ்விகளுக்கும் உண்ண ... சட்டிச் சோற்றுக்கு ..." A. R. E. 75/1920

3 S. I. I. XVII intro p. 6

4 'இலக்கியங்கள்' என்ற அத்தியாயத்தில் தலபுராணத்தைப் பற்றிய செய்திகளில் பார்க்க.

5 "தெற்றிபெரியான்" கல்வெட்டில் இக்குறிப்பு உள்ளது. A. R. E. 91/1962

<*>

# கண்டராதித்தம்

திருமழபாடிக்கு மேற்கே சுமார் இரண்டு கிலோமீட்டர் தொலைவில் கண்டராதித்தம் என்ற ஊர் உள்ளது. கல்வெட்டுகளில் இவ்வூர் கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் என்று குறிப்பிடப்படுகிறது. கண்டராதித்த சோழனால் உருவாக்கப் பட்ட சதுர்வேதிமங்கலம் இது என்று உத்தமசோழனின் ஆனைமங்கலச் செப்பேடு கூறுகிறது.[1]

தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு இச்சதுர்வேதி மங்கலத்திலிருந்து திருமெய்க்காவல் செய்வார் இருவரும், மாணிகள் இருவரும் நியமிக்கப்பட்டதாகத் தஞ்சைக் கோயிற் கல்வெட்டுகள் மூலம் அறிகிறோம்.[2]

இங்கு பிரம்மஸ்தானம் ஸ்ரீ உத்தமசோழன் மண்டபம் என்று பெயர் கொண்ட ஒரு மண்டபம் இருந்திருக்கிறது. சதுர்வேதிமங்கலத்து மகாசபையினரின் அலுவல்களுக்காகவே இந்த மண்டபம் கட்டப்பட்டிருந்தது. முதல் ராஜேந்திரன், அவன் மகன் முதல் ராஜாதிராஜன் ஆகிய இருவரின் கல்வெட்டுகள் இந்த மண்டபத்தைப் பற்றியும், பெருங்குறி மகாசபையினர் இங்குக் கூடிப்பேசி அலுவல்களைக் கவனித்து வந்த செய்தியையும் தெரிவிக்கின்றன.[3]

இன்று சதுர்வேதிமங்கலம் என்ற சொல்லும் பொருளும் மறைந்துபோன நிலையில் மாற்றமுற்று நிற்கிறது இந்தக் கண்டராதித்தம்.[4]

ஊரின் மேற்கில் சிவன் கோயிலும் கிழக்குப் பகுதியில் விஷ்ணு கோயிலும் உள்ளன. இவற்றில் சோழர் கல்வெட்டுகள் உள்ளன.

**ஸ்ரீகோயில் சிவலோகத்து மஹாதேவர்**

சிவன் கோயிலில் கோப்பரகேசரிவர்மனின் 13-ஆம் ஆட்சி

யாண்டு, 14-ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்த இரு கல்வெட்டு கள் ராஜராஜனுக்கு முற்பட நிலவிய சோழர் உறவைக் காட் டும் அடையாளமாக நிற்கின்றன. 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இக்கோயில் இறைவரின் பெயர் "ஸ்ரீகோயில் சிவ லோகத்து மஹாதேவர்" என்று அறிமுகம் செய்து வைக்கி றது. தவிர, இக்கோயில் "தென்கரை ஏமப்பேர்க்கூற்றத்து கொல்லி குறும்புடையான் செம்பர் அருளன் உத்தம நீதியான் உத்தமசோழ மூவேந்தவேளாளன்" என்ற நீண்ட பெயருடைய அதிகாரி ஒருவனால் எடுப்பிக்கப்பட்டதாகவும் தெரிவிக்கிறது.[5]

மூன்றும் குலோத்துங்கன், ஹொய்சள வீரராமநாதன் ஆகியோரின் கல்வெட்டுகளும் கோயிலில் காணப்படுகின்றன. வீரராமநாதனின் கல்வெட்டு நமக்குச் சில பயனுடைய செய்தி களைத் தருகிறது.[6]

கோயிலின் நிலை மிகவும் இரக்கத்துக்குரியதாக இருக் கிறது. முகமண்டபம் முற்றிலும் தகர்ந்துபோய் அடித்தளம் மட்டும் நிற்கிறது. கருவறை மட்டுமே நல்ல நிலையிலுள்ளது.

உண்ணாழி, அர்த்தமண்டபக் கோஷ்டங்களில் சோழர் காலச் சிற்பங்கள் உள்ளன தென்புறம் நின்ற நிலையிலுள்ள விநாயகரும் தக்ஷிணாமூர்த்தியும்; வடக்கில் நின்ற நிலையில் பிரம்மா; பின்புறக் கோஷ்டத்தில் லிங்கோத்பவர் - ஆகிய சிற் பங்கள் கோயிலின் கலைப்பாரம்பரியத்தை எடுத்துரைக் கின்றன. ஆயினும் இவை கோயிலின் தொடக்க காலத்திய சிற்பங்களல்ல. சோழராட்சியின் இடைப் பகுதியில் இவை செய்விக்கப்பட்டிருக்கலாம்.

இச்சிற்பங்களும் பலவிடங்களில் சிதைக்கப்பட்டுள்ளன. தக்ஷிணாமூர்த்தியின் சிற்பத்தில் தட்டிப்பார்த்தால் இனிய ஓசை கேட்கிறது. பலநேரங்களில் தங்களுடைய சொந்த ரசனைக்காகவும், ஊருக்குப் புதியவர்கள் வரும்போது அவர் களிடம் இந்த உண்மையை அழுத்தமாகத் தெரிவிக்கும் ஆர்வங் காரணமாகவும் கல்லால் தட்டியும் எறிந்தும் இந்தச் சிற்பவதையைச் செய்திருக்கின்றனர் உள்ளூர் மக்கள்.

எல்லாச் சிற்பங்களுமே இதற்குப் பரிசோதனைப் பொருளாக இருந்திருக்கின்றன; இன்றும் இருந்து வருகின்றன.

விஷ்ணுகோயிலும் விநோதமான செய்தியும்

முதல் ராஜாதிராஜனின் 33-ஆம் ஆட்சியாண்டைக் குறிப்பிடும் திருமழபாடிக் கல்வெட்டொன்று கண்டராதித்தச் சதுர்வேதிமங்கலத்திலிருந்த ஸ்ரீகண்டராதித்த விண்ணகர் என்ற விஷ்ணு கோயிலைக் குறிப்பிடுகிறது. இது கி.பி. 1051-ம் ஆண்டின் நிலை.7

இப்போது கண்டராதித்தத்தில் மிகச் சிறிய விஷ்ணு கோயிலொன்று உள்ளது. அரச ஆதரவின்றிப் பொதுமக்களால் எழுப்பப்பட்ட கோயிலென்பதை அதன் எளிய தோற்றமே உணர்த்துகிறது. மூலவரும் தேவியும் மிகப்பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர்களாகத் தோன்றுகிறார்கள்.

12-ஆம் நூற்றாண்டிற்குரிய எழுத்தமைதியுடன் குலோத்துங்கன் (III?) கல்வெட்டொன்று உண்ணாழியின் பின்புறச் சுவரில் உள்ளது. இதே காலத்தைச் சேர்ந்த ஒருவரிக் கல்வெட்டுகள் சிலவும் உள்ளன. அவற்றில் கோயில் கட்டுவதற்காக யார்,-எழுத்துப் பொறிக்கப்பட்டிருக்கும்-அந்தக் கல்லைக் கொடுத்தார் என்ற குறிப்புகள் உள்ளன. அதாவது ஒரு கல் கொடுத்துதவியவர்கள் கூடத் தம் பெயரைக் கல்வெட்டில் பொறித்திருக்கிறார்கள்.

நல்ல நிலையிலிருந்த ஒரு கோயில் ஏதோ அரசியல் காரணங்களாலோ, மக்களின் புறக்கணிப்பினாலோ சிதைந்து கைவிடப்பட்டிருக்கவேண்டும். இந்நிலை கண்டு உள்ளம் நைந்த திருமாலடியார் சிலர் கூடிக் கோயிலைப் பெயரளவுக்காவது எழுப்பிவிடுவோம் என்று முனைந்து செயல்பட்டிருக்க வேண்டும்.

இந்த ஊகத்துக்கு மேலும் பக்கபலமாக அமைகிறது, குலோத்துங்கன் காலக் கல்வெட்டில் வரும் "உடையார் அறவை தண் . . ." என்ற தொடர். கோயிலின் பெயரைக் குறிப்பிடுமிடத்தில் இத்தொடர் இடம் பெறுகிறது. அறவை

என்ற சொல், மக்களால் கைவிடப்பட்ட நிலையைக் குறிக்கும். கைவிடப்பட்ட ஒரு கோயிலைச் சிறுகச் சிறுகப் பொருள் சேகரித்து மீண்டும் எழுப்பிய செய்தியையே இத்தொடர் குறிப்பதாக வேண்டும். அனைத்து உயிர்களையும் காக்கின்ற ரட்சகனாகப் போற்றப்படும் இறைவனும், அடியாரின் அடைக்கலத்தில் வாழவேண்டிய இதுபோன்ற நிலைமை, வேதனை தருவதாகும்.8

ஊர்ச்சபை கூடியிருந்து ஆலோசனை நடத்தவும் முடிவுகள் எடுக்கவும் இடந்தந்த கண்டராதித்த விண்ணகர்தான் ஓரிரு நூற்றாண்டுகளில் கைவிடப்பட்ட கோயில் என்ற நிலைக்கு ஆளாகியிருக்கவேண்டும்.

ஊரின் தெற்கு எல்லையில் தனிப்பட்டோர் ஒருவரின் மனையில், இடுப்பளவு தரையில் புதைந்த அழகிய விஷ்ணு சிலையொன்று உள்ளது. ராஜராஜன் காலத்துக்கு முற்பட்ட படைப்பு இது. இவர்தாம் அந்நாளைய கண்டராதித்த விண்ணகராழ்வாரோ? என்ற ஐயம் தோன்றுகிறது.

ஊரின் புறத்தில் உறுமுனங்குளம் என்ற குட்டைக்கருகில், மரத்தடியில் விஷ்ணு சிலையொன்று அனாதரவாக நிற்கிறது. அருகில் ஒரு வயலில் தலையற்ற தேவியின் அமர்ந்த நிலைச்சிற்பம் ஒன்றும் உள்ளது. இவை 15, 16-ஆம் நூற்றாண்டினவாக இருக்கலாம். வேறொரு வயலில் விஜயநகர ஆட்சியின் தொடக்க காலத்தைச் சேர்ந்த வேணுகோபாலனின் சிற்பம் ஒன்று நிற்கிறது. பிரபையுடன் கூடிய இந்த ஆறு அடி உயரக் கண்ணனின், இசையில் லயிக்கும் முகபாவம் நம்மை மயக்கும். இவ்விடத்தில் ஒரு பெரிய கோயிலே இருந்ததாக மக்கள் பேசிக் கொள்கிறார்கள்.

---

1 பிற்காலச் சோழர் சரித்திரம் — பாகம் 1, பக். 60

2 த. பெ. கோ. க. — முதற் பகுதி — பக். 124, 109

3 A. R. E. 33/1920; S. I. I. V 633

4 1931-ஆம் ஆண்டைய மக்கள்தொகைக் கணக்கீட்டின்படி இவ்வூர் மக்கள் எண்ணிக்கை 2331. இவர்களில் பிராமணர்

7 பேர், அரிசனர்கள் 375, பிற இந்து இனத்தவர் 1854, கிறிஸ்தவர் 72. முஸ்லீம்கள் 23. (Village Statistics-Trichinopoly Dt. 1932.) இந்நூற்றூண்டி தொடக்கத்தில் கூட பிராமணர்கள் செல்வாக்குற்ற நிலையிலிருந்ததாகவும் பின்னர் எதிர்ப்பு காரணமாகத் திருவையாற்றுக்குச் சென்றுவிட்டதாகவும் கூறப் பட்டது.

5 S. I. I. XIX 359

6 கல்வெட்டுகளின் குறிப்பு, 1929-ஆம் ஆண்டைச் சேர்ந்த இந்திய அரசின் கல்வெட்டு ஆண்ட றிக்கையில் வெளிவந்துள்ளது.

7 A. R. E. 78/1920. கல்வெட்டு பார்த்துப் படிக்கப்பட்டது. சைவ வைணவ சமரச உணர்வைப் புலப்படுத்தும் கல்வெட்டாதலால் கீழே தரப்படுகிறது :

" ... ராஜேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கைநாட்டுப் பிரமதேகம் ஸ்ரீகண்டராதித சருப்பேதிமங்கலத்து பெருங்குறி மகாசபையோம் இவ்வாட்டை கும்பநாயற்று நாயற்றுக் கிழமை பெற்ற அஸ்வதி நான்று நம்மூர் ஸ்ரீகண்டராதித்த விண்ணகர் திருமுற்றத்தே கூட்டங் குறைவறக் கூடி இருந்து பணிப்பணியால் பணிக்க எழுத்து திருமழுவாடி உடையார் தேவர்கன்மிகளும் சிவப்பிராமணரும் கண்டு இத்தேவர் கோயில் அதிகாரிகள் அரும்பூர்ச்சேரி உடையார் அம்பலத்தாடி சோலையாரான மனுகுலதீப மூவேந்தவேளார் எழுந்தருளிவித்த ஜயங்கொண்டசோழ விடங்கற்கும் இவர் நம்பிராட்டியார்க்கும் மகா விஷ்ணுக்களுக்கும், இவர் நம்பிராட்டியார்க்கும் பிரஹ்மா வுக்கும் திருச்செந்நல நடைக்கு முன்பு திருமழுவாடி உடையார் கல்வெட்டுப்படி இறையிறுத்து வருகின்ற நிலத்தில் நித்தம் நெல்லுக்கலமாக ஓராட்டைக்கு நெல் முந்நாற்று அறுபதின் கலத்துக்கு இறையிலியாக விட்ட நிலம்......"

8 தென்னூர்க்காடு மாவட்டம்-வளையமாதேவி வேதநாராயணர் கோயிலில் நிலங்களுக்குரிய வரியைக் கட்ட முடியாமல் பொன் நகைகள் பாத்திரங்களை முப்பது காசுக்கு விற்று மகாசபையிடம் கொடுத்திருக்கிறார்கள் கோயில் நிர்வாகிகள். சோழர் காலத்தில் வைணவம் இழந்துவிட்ட அரச ஆதரவை இக்கல்வெட்டு நமக்குத் தெளிவாக உணர்த்துகிறது. (A. R. E. 573/1962, 63)

<O>

## மனிதர்கள்-மரபுகள்-சில மதிப்பீடுகள்

"அரசும் நாட்டாண்மையும்"

இந்திய நாட்டின் பழம்பெருமை பாராட்டும் பண்புக் கான மூலவேர்களைக் கிராமப் பஞ்சாயத்து முறைகளில் காண முடியும். செயலார்வங்குறைந்த, மேலாண்மைக்கு எளிதில் தலை பணிந்து விடுகிற கிராமியப் பண்பு பொதுவாக இந்தியக் குறைதிசயமே என்றாலும், கலப்பின (cosmopoliton) நாகரிகத் துக்குப் பெருமளவில் வழியின்றிச் செய்து விட்ட கிராமப் பஞ் சாயத்து வாழ்வு முறை, நெடுங்காலமாக இந்தியாவின் தனித் தன்மையைக் காத்து வருகிறது.

இங்கு நிலவும் "அரசு" என்ற பதவி பற்றி இவ்விடத் தில் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்.

சாமந்தன், அரசு போன்ற சொற்கள் குறுநில மன்னர் களாக இருந்து, நிலமானிய அமைப்பில் அரசப்பிரதிநிதிகளாக மாறியவர்களைக் குறிக்கும்.[1] நிலமானிய-படைமானிய அமைப் பின்படி கிராம மக்களின் நிர்வாகத் தலைவராகவும், போர்க் காலங்களில் அரசனின் படைக்கு வீரர்களைக் கொடுத்துதவும் படைத்தலைவராகவும் (chief of a self-styled army) இவர்கள் இருந்தனர். விஜயநகர மன்னர்களின் கீழ் இத்தகைய பதவி வகித்தோர் இருந்துள்ளனர்.[2]

முத்துராஜா, மூப்பனார் இனத்தவரே இந்த அரசு பத வியை வகிக்கின்றனர். உள்ளூரில் மூப்பனார் ஒருவர் தாம் "அரசு"வாக உள்ளார். வெட்டியான், தலையாரி ஆகியோர் ஆண்டுக் கொருமுறை 'அரசு'விடம் கோல் கொடுத்து வாங்கு கிறார்கள். நிலக்காவல், ஊர்க்காவல் பணி புரியும் பரம்பரைப் பணியாளர்கள்[3] இவ்வாறு அதிகாரத்தைப் புதுப்பித்துக் கொள்ளும் மரபு "அரசு"களின் பழங்காலப் பதவிச் செல் வாக்கை நினைவூட்டுகிறது.

“அரசு”க்குக் கோயிலோடுள்ள தொடர்புகள் சில வற்றைப் பார்க்கும்போதும் இவருடைய, மரபளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட தலைமைப் பீடம் தெளிவாகத் தெரிகிறது.

உற்சவ காலங்களில் இறைவர் பவனி புறப்படுவதிலி ருந்து மீண்டும் வந்து திருவாபரணம் கழற்றுவது வரை மெய்க்காவல் பொறுப்பேற்பவர் இவர்தாம். அப்போது இர வில் கோயிலிலேயே படுத்துக்கொள்ளும் வழக்கமும் இருப்ப தாகக் கூறப்படுகிறது.

மாட்டுப் பொங்கலன்று ஊரே திரண்டு கோயிலுக்குச் செல்லும். அப்போது மாடுகளை அலங்கரித்து, பாதாபிஷேகம் செய்து, நான்கு ராஜ விதிகளையும் சுற்றியழைத்து வந்து சேர்ப்பது “மாடு படைப்பது” எனப்படும். முதல் நாள் இவ் வாறு கோயிலுக்குப் படைத்த மாடுகளை அடுத்த நாள்தான் அவிழ்த்து விடுவார்களாம். “மாடு விடுதல்” எனப்படும் இந்த வைபவத்தில் “அரசு”வின் மாடுதான் முதலிடம் பெறுகிறது.

“அரசு” தவிர நாட்டாண்மை (ஊர்ப்பஞ்சாயத்தார்) நால்வர் உள்ளனர். இவர்கள் ஊற்று நாட்டு வேளாளர் மர பினர். கோயில் தேரோட்டத்தின்போது முன்னால் வடம் பிடிப்பது, தேங்காய் உடைப்பது முதலிய கோயில் மரியாதை களுக்குரியவர்கள் இந்த நாட்டாண்மைக்காரர்கள்.

நான்கு நாட்டாண்மைக்காரருள்ளும் முதல், 2-ஆம், 3-ஆம், 4ஆம் நாட்டாண்மை என்று, தர வேறுபாடு உள்ளது.

ஹரிஜனங்களில், பறையருள்ளும் நான்கு நாட்டாண் மைக்காரர் உள்ளனர். இவர்கள், வேளாள நாட்டாண்மைக் குக் கட்டுப்பட்டவர்கள். தம் இனத்தவரிடையே ஏற்படும் பூசல் களைத் தமக்குள் தீர்த்துக்கொள்ளமுடியாவிட்டால் வேளாள நாட்டாண்மையிடம் வழக்கினைக்கொண்டுவருவர். ஆலயப் பிரவேச உரிமை இல்லாத நாள்களிலேயே இவர்களுக்குத் தேர் வடம் பிடிக்கும் உரிமையிருந்திருக்கிறது. தேரோட்டம் முடிந்து, சன்மானம் வழங்கும் நேரத்தில் ஸ்தானிகர் சார்பாக ஒருவர் இவர்களுக்குச் சன்மானம் அளிப்பார்.

### மூப்பாடி

பள்ளர்களின் நாட்டாண்மை மூப்பாடி எனப்படுகிறார். இவர்களுக்கு வடம்பிடிக்கும் உரிமையில்லை. சன்னமரம் போடுதல் எனப்படும் தேர் முடுக்கும் பணி இவர்களுடையது. தேரோட்டத்தன்று வேளாள நாட்டாண்மை இந்த மூப்பாடியை அழைத்து வருவாராம். தேரோட்டம் முடிந்ததும் இவர்களுக்கும் சன்மானம் கொடுக்கப்படும்.

### நாட்டார்

கள்ளர் இனத்தவரின் தலைவர் நாட்டார் எனப்படுவார். இந்தச் சுற்று வட்டாரத்தில் கள்ளர் இல்லையாயினும் அருகிலுள்ள செம்பியக்குடி என்ற ஊரில் ஊர்மக்களிடையே வழக்குகள் ஏற்பட்டால், திருநெற்குன்றம் என்ற ஊரிலிருந்து கள்ளர் (நாட்டார்) வந்து பஞ்சாயத்துச் செய்கின்றனர். முன்பு கள்ளர்கள் இவ்வூரில் பெருமளவில் வாழ்ந்திருக்கவேண்டும்.

## இனங்கள்

### ஹரிஜனங்கள்

பறையர்கள் உள்ளூரில் இருக்கின்றனர். வயல் வேலை செய்வதுதான் இவர்களது ஜீவாதாரம். பண்ணையாள் என்று குறிப்பிடும் வழக்கமுள்ளது. இதனை அடிமை முறை என்று குறிப்பிடமுடியாவிட்டாலும், ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு மரபாக இன்றும் நிலவுகிறது. குறிப்பிட்ட காலங்களில் நடவு, அறுவடை முதலிய பணிகளைச் செய்துவிட்டுச் சம்பளமாக நெல்லைப் பெற்றுக்கோள்கின்றனர். பெரிய நிலக்கிழார்களிடம் பரம்பரையாகப் பண்ணையாள்களாக இருப்பவர்கள் பலர் உள்ளனர்.

கோயிலுக்கு விறகு வெட்டித்தரும் பொறுப்பு இவர்களுடையது. கோயில் ஸ்தானிகர் தமக்குரிய மானிய நிலத்தை ஊராட்சியிடம் கடைத் தெருவுக்காக வாடகைக்கு விட்டிருந்தார். அந்த இடம் இப்போது இவர்களுக்குப் பட்டா செய்து தரப்பட்டுள்ளது. இவர்களில் ஒரு குடும்பம் கிறிஸ்தவ மதத்திற்கு மாறியுள்ளதென்று தெரிகிறது.

ஊருக்கருகிலுள்ள வைத்தியநாதன் பேட்டையில் பள்ளர் உள்ளனர். இவர்களும் பண்ணையாள் வேலையே செய்கின்றனர். பறையர், பள்ளரைத் தாழ்வாக மதிக்கின்றனர். தேரோட்டத்தின்போது பள்ளர் வடம் பிடிக்க அனுமதிக்கப்படாதிருந்த நிலை, சமுதாயத்தில் இவர்கள் தாழ்வாக மதிக்கப்பட்டதைக் காட்டுகிறது.

திருவிழா முடிந்து சன்மானம் கொடுக்கையில் பறையர்க்கு வலக்கையாலும் பள்ளர்க்கு இடக்கையாலும் கொடுக்கும் வழக்கமிருந்ததாம். இதற்குப் பள்ளர் எதிர்ப்புத் தெரிவித்ததால் பெருக்கல் குறிபோல் கைகளை வைத்துக்கொண்டு ஒரே நேரத்தில் வலக்கையால் பறையர்க்கும் இடக்கையால் பள்ளர்க்கும் சன்மானம் கொடுத்தார்களாம். கொடுப்பவரின் வலப்பக்கம் நின்று வாங்கிக் கொள்வதால் வலக்கையாலேயே வாங்கிக்கொண்டதாக எண்ணித் திருப்தியுற்றனராம் பள்ளர்.

**கண்மாளர்**

தட்டார், தச்சர், கொல்லர் ஆகிய மூன்று இனத்தவரும் இப்பிரிவிலடங்குவர். இம்மூவினத்தார்க்கும் கோயிலில் காணியாட்சி உண்டென்றும், தச்சர், கொல்லர்க்கு மானியமும் (நிலம்) உண்டென்றும் தெரிகிறது. கோயில் தொடர்பான பணிகளை இவர்கள் ஊதியமின்றிச் செய்து தரவேண்டும். தட்டார், தாம் செய்யும் வேலைக்குக் கூலி பெற்றுக் கொள்கின்றனர்.

"கோயில் தச்சவாசாரியன் மழுவாடி வீரநாக கொட்டையூராசாரியன்" என்பவன் விக்கிரமசோழனின் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளான்.[5] இப்போது ஊரில் தச்சாசாரியமும் செய்யும் சிற்பாசாரியர் உள்ளனர். சுமார் 30-ஆண்டுகளுக்கு முன்பு கோயில் தேர் செய்யப்பட்டபோது கண்டியூர்த் தச்சாசாரி ஒருவரின் கீழ் இவர்கள் அவ்வேலையில் பங்கேற்றனராம்.

மகாமண்டலேஸ்வரன் ஸ்ரீவீரப்பிரதாபதேவ மகாராயர் காலத்தில் (கி.பி. 1433) கோயிலில் புகழ்மிக்க தட்டான் ஒருவன்

இருந்திருக்கிருன். "திருமழுவாடியில் கண்மாளரில் ஒன்று பாதி அருள்காணியாகவுடைய தட்டான் பேராண்டாறுனை வாய்த்தமாளிகைத்தட்டான்" என்று இவன் குறிப்பிடப் படுகிருன். வாய்த்தமாளிகைத்தட்டான் என்பது இவனது பணிகளை கௌரவித்து அளிக்கப்பட்ட பட்டமாக இருக்க வேண்டும். இவன் கோயிலிலுள்ள அழகியபிள்ளையார்க்கு நாள்தோறும் திருப்பண்ணியாரம் செய்து படைக்க உபையங் கொடுத்திருக்கிருனென்று அக்கல்வெட்டுக் கூறுகிறது.[6]

கண்மாளரின் மூன்று பிரிவினரும் தம்முள் மண உறவு கொள்கின்றனர். இறந்தவரை எரிப்பதும் புதைப்பதுமாகிய இருவழக்கமும் உள்ளது.

இசை வேளாளர்

பிள்ளை, முதலியார் என்று பட்டங்கள் சூட்டிக்கொள் ளும் இவர்கள் மேளக்காரர் என்று பொதுவாக அழைக்கப்படு கின்றனர். இவர்கள் நால்வர் இப்போது கோயிலில் பணிபுரி கின்றனர்.

சோழர்காலக் கல்வெட்டுகளில் உவச்சர் என்று குறிப் பிடப்படும் மரபினர் இவர்களாகவே இருக்க வேண்டும். உவைச்சர்களுக் குரிய நிலம் ஒன்று உள்ளூரிலிருந்த செய்தியை ராஜராஜனது கல்வெட்டொன்றிறுல் அறிகிருேம்.[7]

இரண்டாம் ராஜராஜனின் கல்வெட்டொன்று "உவைச்சன் குறும்பங் திருமழுவாடி" என்பவனது நிலத்தைக் குறிப்பிடுகிறது.[8]

இந்த இசைவேளாளர் இனத்தவர்க்குக் கோயில் மானிய நிலம் இல்லை. இவர்கள் தாய்வழிச் சமுதாயக் கூறு கள் உடையோராயிருந்தது இதற்குக் காரணமாயிருக்கலாம். இந்த இனத்தைச் சேர்ந்த தேவதாசியர் கோயிலில் இருந்திருக் கின்றனர். கோயிலில் திருவாதிரைத் திருவிழாவின்போது, முன்பெல்லாம் திருவூடல் விழா[9] நடைபெறுமென்றும் ஓது வார் ஒருவர் பாட, தேவதாசியர் அதனை நாடகமாக நடிப்பர்

என்றும் தெரிகிறது. தேவதாசி முறை ஒழிக்கப்பட்டபின் இவர்கள் வேற்றூர்களுக்குப் போய்விட்டனராம்.

இசைவேளாளர் இனத்தவர், உயரினத்தார்க்கு நாவி தஞ் செய்ததுண்டு: இப்போது அந்நிலை மாறிவிட்டது.

ஊரில் "மேளக்காரன் குட்டை" என்றொரு சிறு குளம் உள்ளது.

**வேளாளர்**

உள்ளூரிலிருக்கும் வேளாளர், ஊற்று வளநாட்டு வேளாளர் அல்லது ஊற்றுநாட்டு வேளாளர் எனப்படுகின்றனர். யார் தோண்டிப் பார்த்தும் நீரே கிடைக்காத நிலத்தில் இவர்களுடைய மூதாதையொருவர் தோண்டியபோது நீரூற்றுப் பெருகியதாகவும் அதனாலேயே இப்பெயர் ஏற்பட்டதாகவும் கதை ஒன்று கூறப்படுகிறது. இவர்கள் ஊட்டத்தூர் என வழங்கும் ஊற்றத்தூரிலிருந்து வந்து இவ்வூரில் குடியேறியிருக்கவேண்டும்.

ஊரில் நாட்டாண்மை முதலிய பதவிகளாலும் கோயிலோடுள்ள தொடர்பு காரணமாகவும் செல்வாக்குப் பெற்றவர் இவ்வினத்தவர். தேர்த்திருவிழாவின்போது தேரினை அலங்கரிக்கும் பொறுப்பு இவர்களுடையது. சுமார் ஐந்து ஆண்டுகள் முன்பு வரை ஊற்றத்தூரிலிருந்துதான் அலங்காரத் துணி வரவழைத்து வந்தார்களாம் இவர்கள்.

கோயிலிலுள்ள சிறிய ஸ்தானிகர் பொறுப்பு சோழிய வேளாளரிடம் உள்ளது. முன்பு நீறுபூசிவேளாளரும் இப் பதவியை நிர்வகித்து வந்ததுண்டென்று கூறப்படுகிறது.

**பார்கவகுல க்ஷத்திரியர்**

முனிவர்களில் தலை சிறந்தவரான[10] பிருகுமுனிவரின் வழித்தோன்றி, பின்னாளில் க்ஷத்திரியர்களாக மாறியவர்கள் என்பது பொருள். பார்கவ குலத்தவர், கோதாவரியாற்றின் கரையில் கோவர்த்தனத்தைத் தலைநகராகக் கொண்டு

வாழ்ந்த பிராமண இனத்தவரென்று புராணங்கள் கூறும். கார்த்த விரியார்ஜுனன் இக்குலத்தவரான ஜமதக்னி முனிவரிடமிருந்து காமதேனுவைக் கவர்ந்து சென்றதால், பூசல்கள் ஏற்பட்டு இக்குலமே சிதறிப்போய்ப் பல இடங்களை நாடிச் சென்றுவிட்டதாகவும், ஜமதக்னியின் மகனான பரசுராமன் க்ஷத்ரிய இனத்தைப் பழிதீர்த்துக் கொண்டதாகவும் வழங்கும் கதைகள் ஓரளவு தெரிந்தவைதாம்.11 பொதுவில் பார்கவ குலத்தவர் கால்நடைகளை ஜீவாதாரமாகக் கொண்டு வாழ்ந்த வளமான இனத்தவர் ஆவர்.

மூப்பனார், உடையார், கவுண்டர் என்ற மூன்று பிரிவு உள்ளது இக்குலம். இப்பிரிவுகளும் வரையறுக்கப்பட்ட பிரிவுகளாகத் தோன்றவில்லை. பொருளாதார நிலையில் மற்ற இரு பிரிவினரைக் காட்டிலும் மூப்பனார் இனத்தவர்கள் உயர்ந்து நிற்கிறார்கள். மூன்று பிரிவினருள்ளும் பொருளாதாரத் தகுதிகளுக்கேற்ப மண உறவுகள் நிகழ்கின்றன. ஊரில் உடையார் பிரிவினர் அதிகமாக உள்ளனர்.

மூப்பனார் சுதர்மான் அல்லது சுருதிமான் என்றும், உடையார் நத்தமான் என்றும், கவுண்டர் மலையமான் என்றும் அழைத்துக் கொள்கின்றனர். உடையார் தம்மை மலையமான் என்று அழைத்துக்கொள்வதும் உண்டு.

திருவிதாங்கூர் அரசமரபினரிடையே மூப்பன் என்ற சொல் அரசனைக் குறிக்கப் பயன்பட்டது. இப்பகுதியிலும் "அரசு" பதவிவகிக்கும் இவ்வினத்தவர் மூப்பனார் என அழைக்கப்படும் பொருத்தம் எண்ணிப் பார்க்கவேண்டுவது.12

கவுண்டர் என்ற சொல் கிராம உடையார் என்ற பொருள்படும் 'காவுடி' என்ற சொல்லின் திரிபாகக் கருதப்படுகிறது. இப்பகுதிக் கவுண்டர்கள் கொங்கு வேளாளரோடு தொடர்பற்றவர்கள்.

உடையார் நத்த (சமவெளி)ப் பகுதியிலும், கவுண்டர் மலைப் பகுதியிலும் தொடக்க காலத்தில் அதிகாரம் செலுத்தி

வந்திருக்கலாம். தமிழே இவர்களின் தாய்மொழி. கன்னட அல்லது தெலுங்கு நாகரிக எஞ்சல்கள் (relics) இவர்களிடம் உள்ளனவா என்று ஆராய்வது பயனுடையதொன்று.

படையாச்சி

வாதாபிகொண்ட வன்னியர் என்று பெருமிதத்தோடு அழைத்துக்கொள்ளும் இவர்கள் கண்டராதித்தத்தில் அதிகமாக உள்ளனர். அரியலூர் மழவராயர்களும் தம்மை வன்னியர் என்றே குறிப்பிட்டுக் கொள்கின்றனர். வன்னி (தீ)யிலிருந்து தங்கள் குலம் தோன்றியதாகப் பேசுகின்றனர்.

சமூகத் தலைமையையும் மதிப்பையும் நிர்ணயிக்கும் நிலவுடைமை காரணமாக இவர்களுக்கும் மூப்பனார் இனத்தவர்க்கும் போட்டி மனப்பான்மை நிலவுகிறது.

பலதாரமணம் இவர்களிடை இருந்திருக்கிறது. விதவை மறுமணம் முன்பு இருந்ததில்லையென்றும் இப்போது ஓரளவு அனுமதிக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. கலியாணம், கருமாதிக்குப் பூணூல் அணிவதுண்டு. இறந்தவர்களைப் புதைப்பது கண்டராதித்தத்திலேயே என்றாலும் கருமாதி செய்வது திருமழபாடிக் கோயில் தீர்த்தமான சிவகங்கையில்தான்.

கோயிலின் கொத்தனார் பொறுப்பு பரம்பரையாக இவ்வினத்தவரிடமே இருந்து வருகிறது.

கைக்கோளர்

பாண்டி மண்டலத்தைச் சேர்ந்த கருங்குடிநாட்டுத் தொண்டைமான் அகரத்துக் கைக்கோளரில் ஒருவனான ‘பின்பழகியான் இராசசிங்க தேவன்’ என்பவன் சடையவர்மன் வீரபாண்டியன் கல்வெட்டொன்றில் நிலதானம் கொடுத்தவனாகக் குறிப்பிடப்படுகிறான்.[13] கைக்கோளர் தொடர்பு நமக்குத் தெரிகிறதாயினும் இவ்வூரில் அவனுக்கு உறவினர்கள் இருந்திருக்கக்கூடும் என்ற அளவிற்கு மட்டுமே அனுமானிக்க முடிகிறது.

திருமஞ்சனத்துக்காகக் காவிரிநீர் எடுத்துவர நியமிக்கப் பட்ட ஆண்டார்கள் கைக்கோளர்களாக இருக்க வேண்டும். கைக்கோளர் மரபின் பூர்வீகம் காஞ்சி மாநகரமாகவே கருதப் படுகிறது. அதற்கேற்ப இவ்வூரிலுள்ள கைக்கோளரிடையே வழங்கும் கதைகள், பாடல்கள் முதலியனவும் தொண்டை நாட்டோடு தொடர்புடையனவாகவே இருக்கின்றன.

இவர்களது குலதெய்வம் பொய்நாடியம்மன் என்று அழைக்கப்படும் மாரியம்மன்.[14] மழபாடிக் கோயிலின் திருச் சுற்று மதிலுக்கு வெளியில் மணிகட்டி ஐயனுர் எனப்படும் தெய்வம் உள்ளது. இந்த ஐயனுர்க்கு எதிரில் - வாகனத்துக் குரிய இடத்தில் - பக்தர் ஒருவர் நவகண்டங் கொடுக்கும் சிலை உள்ளது. அதனுல் இவ்விடத்தைச் சாவான் கோயில் என்று அழைக்கின்றனர். இந்த ஐயனுரும் இவர்களுடைய தெய்வமே.

நவகண்டங் கொடுக்கும் அடியார், சுமார் நூறு ஆண்டு களுக்கு முன் இவ்வூரில் வாழ்ந்தவராம். தம் நண்பர் ஒருவர் யாரிடமோ வாங்கிய கடனை ஏமாற்றி விட்டபோது, தான் அதற்குப் பிணையேற்றிருந்ததால் கௌரவத்தைக் காத்துக் கொள்வதற்காக இவ்வாறு தன்னைத்தானே மாய்த்துக்கொண் டாராம். இது சரியான கால அளவில் குறிப்பிடப்படுகிறதா; உண்மையிலேயே நவகண்டங் கொடுத்ததாக இதனைக் கருத முடியுமா என்ற ஐயங்கள் எழுகின்றன. கோயிலின் தென்புறச் சாலையோரத்தில் பட்டான்சாமி எனப்படும் நான்கு சிலைகள் உள்ளன. நவகண்டங் கொடுக்கும் நிலையிலுள்ள இந்தப் பழைய சிலைகள் இடுப்பளவிற்கு மண்ணில் புதைந்து நிற்கின் றன. இவற்றையும் பார்க்கும்போது கைக்கோளரிடையே நவகண்டங் கொடுக்கும் பழக்கம் இருந்திருக்க வேண்டும் என்று தெளியமுடிகிறது.

நவகண்டங் கொடுத்தல் போன்ற சுயபலி முறைகள் சாக்தத்தோடு நெருங்கிய தொடர்புடையவை. பைரவ மதத்திலும் இவை நடைமுறையிலிருந்துள்ளன. கி.பி. 1824 அளவில் கூட மராட்டியப் பகுதியில், மலைமேலிருந்து விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வதின் மூலம் காலபைரவரைத்

திருப்தி செய்துள்ளனர் ப்லர்.[15] இங்கு மணிகட்டி ஐயனுர் என அழைக்கப்படும் தெய்வம் பற்றி விரிவாக ஆராய்ந்தால் பைரவ மதத்தின் கூறுகள் வெளிப்படலாம்.[16]

திருமழபாடி நாடே ஒரு காலத்தில் கைக்கோளர் ஆதிக்கத்திலிருந்ததாகவும் கோயிலில் இவர்களே தலைமை பெற்றிருந்ததாகவும் கூறுகின்றனர். அப்போது 12000 தறிகள் இருந்தனவாம். தேர்த்திருவிழாவில் தற்போது வேளாளர் ஏற்று நடத்திவரும் முதல் நாள் மண்டகப்படி, கொடியேற்றம் கைக்கோளரால் நடத்தப்பட்டதாகவும், கொட்டுமேளத்தோடு ஸ்தானிகரும் குருக்களும் வந்து தாம்பாளத்தில் கொடிச்சீலை வாங்கிச் செல்லும் அந்தக் காலம் கடந்து போய்விட்டதென்றும் கழிவிரக்கங் கொள்கின்றனர். சுமார் 50 ஆண்டுகள் முன்வரை இந்நிலையிருந்ததாம்.[17]

இப்போதும் இந்நாட்டில் 75 தலைக் கட்டுகள் (குடும்பங்கள்) உள்ளன என்கின்றனர். ஊரில் சுமார் 15 அல்லது 20 குடும்பங்கள் இருக்கலாம். யாரும் நெசவுத் தொழில் செய்வதில்லை. துணி வியாபாரம், பெட்டிக்கடை முதலியவற்ருல் பிழைத்து வருகின்றனர்.

இத்தகைய ஒரு வீழ்ச்சிக்குக் கம்பங்கூத்தாடி (கழைக் கூத்தாடி) ஒருவனின் சாபமே காரணமென்கின்றனர். ஆண்டுதோறும் தை மாதத்தில் நடைபெறும் பொய்நாடியம்மன் திருவிழாவின்போது காஞ்சிபுரத்திலிருந்து தொம்பர் இனத்தைச் சேர்ந்த அந்தக் கம்பங்கூத்தாடி வருவானும். (இப்போதும் ஆண்டுதோறும் வருவதுண்டாம்.) இங்குள்ள சேரியில் தங்கியிருந்து மக்களிடம் நெல்லாகவோ பணமாகவோ வசூல் செய்துகொண்டு திரும்பி விடுவானும். (இந்த உரிமையை இவனுக்களிக்கும் அரசப்பட்டயம் இருக்கிறதென்கின்றனர்.) இவ்வாறு அவன் தங்கியிருக்கும்போது அவனுக்குத் திருப்தியளிக்கும் வண்ணம் சோறளிக்கவேண்டும். அவன், தேவியின் ஆணை கிடைத்தால்தான் திரும்பிப்போவது வழக்கமென்றும், அவன் தங்கியிருக்குமிடத்தில் அரிசி மாவைக் குவித்துவைத்து அதில் தேவி பாதந்தெரிந்தால் (தேவி நடந்த

தற்கடையாளமாகப் பாதச்சுவடு தெரிந்தால்)தான். தேவி ஆணை கிடைத்ததாகக் கருதப்படுமென்றும் தெரிகிறது. ஒரு முறை அவன் தங்கியிருக்கும் காலம் நீடித்ததால் அதிருப்தி யடைந்த கைக்கோளர் அவனுக்குச் சரியாகச் சோறிடவில்லை யென்றும் அதனால் அவன் "அழிநாடு" பாடித் தன் அறம்பா டும் வன்மையால் நாட்டையே அழித்துவிட்டான் என்றும் கதை வழங்குகிறது.[18] பொய்நாடியம்மன் திருவிழாவும் 1962-க்குப் பின் நடைபெறவில்லை.

ஒட்டர்

ஒட்ர (ஒரிசா) நாட்டைச் சேர்ந்தவராகக் கருதப்படும் இவ்வினத்தவர் கிணறு தோண்டுவதைக் குலத்தொழிலாகக் கொண்டவர்கள். மண்வெட்டி ஒட்டன், ஒட்டன்செட்டி என்று குறிப்பிட்டுக் கொள்கின்றனர். தெலுங்கோடு தொடர்பு டைய மொழி பேசுகின்றனர். சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் சிறுவிச்சூரிலிருந்து நான்கு குடும்பத்தினர் இங்குக் குடியேறி வாழ்ந்து வருகின்றனர். ஊர் கூட்டும் தொழிலுக்காக ஊராட்சி மன்றம் இவர்களுக்கு இரண்டு ரூபா தினக்கூலி கொடுக்கிறது. இது தவிரப் பன்றி வளர்த்தல், திருமணங்க ளில் விளக்குத்தூக்குதல். அறுவடை காரியம் முதலிய தொழில்களும் செய்கின்றனர். கல்வியிலீடுபடுத்த முயன்றும் பயனில்லை.

பறையரும் தொம்பரும் கீரி, பூனை முதலியவற்றை உண் பதால் அவர்களைத் தாழ்வாகக்கருதுகின்றனர். கோமுட்டிச் செட்டியார், கண்மாளர், முஸ்லீம் வீட்டில் இவர்கள் உணவு கொள்ளமாட்டார்களாம்.[19]

ஓமந்தூர் பெரியசாமி, காமாட்சி-இவர்களின் குலதெய் வங்கள். சிவன்ராத்திரியன்று ஓமந்தூர் சென்று பொங்கல் படைத்து வழிபடுவர். (ஆடு வெட்டுவதில்லை) மழபாடிக் கோயிலில் திருவிழா நேரங்களில் விளக்குத்தூக்கும் பொறுப்பு இவர்களுடையது. அதற்குக் கூலியாக இரண்டு பட்டை சாதமும் ஒரு ரூபாயும் பெற்றுக்கொள்வர்.

கோயிலுக்குத் தென்மேற்கில் பஞ்சாயத்து நிலத்தில் இவர்கள் குடியிருக்கின்றனர். பட்டா செய்து தருவதற்கு முயற்சி நடந்து வருகிறது.

கிறிஸ்தவர்

கண்டராதித்தத்திற்கருகில் புதுக்கோட்டை என்ற ஊர் உள்ளது. இது குலமாணிக்கம் என்ற ஊரைச் சேர்ந்த சிற்றூராகக் கருதப்பட்டதால் கு. புதுக்கோட்டை என்று முன்பு அழைக்கப்பட்டது. இவ்வூரில் விரகாலூர் முதலிய ஊர்களிலிருந்து சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு கிறிஸ்தவர் குடியேறினர். கண்டராதித்தத்தைச் சேர்ந்தவர்கள், இவர்கள் இவ்வாறு குடியேறியதை எதிர்த்ததாகவும், அப்போது ஏற்பட்ட வழக்கில் கிறிஸ்தவர்கள் சார்பாக அவ்வூர் இந்துப் பூசாரி சாட்சி சொல்லியதால் கிறிஸ்தவர்கள் வழக்கில் வென்றதாகவும் கூறிக்கொள்கின்றனர். 388 காணி கிறிஸ்தவர்களுக்குரியதென்று பத்திரம் இருக்கிறதாம். இந்நிலத்தில் பாதியை ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையும், கால் பங்கை பிராட்டெஸ்டெண்ட் சபையும், மீதிக் கால் பங்கை லூத்தரன் மிஷனும் ஆர்ஜிதம் செய்து கொண்டன என்றும் சொல்லப்படுகிறது.

## திருமணம்

இப்பகுதியில் நடைபெறும் திருமணங்களில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய சில செய்திகளே இங்கு இடம் பெறுகின்றன.

களிமண்ணால் செய்யப்பட்ட மாடு குதிரை முதலிய உருவங்களை வைத்து அதன்மேல் பானையை வைப்பது அரசாணி எனப்படுகிறது. இவற்றைத் திருமண வீட்டாரே குயவர் இல்லத்திற்குச் சென்று எடுத்து வருகிறார்கள். மூன்று கிளைகள் உள்ள ஒதியன் போத்து நட்டு அதனுடன் அரசாணியை வைக்கின்றனர். இதுதவிர மணமேடையில் பச்சை நெல்லைப் பரப்பி அதன்மேல் பாய் விரிக்கின்றனர்.

தாலியில் பொதுவாகச் சிவலிங்க உருவம் கோக்கப் படுகிறது. திருமணத்துக்குப் பறையர் பறை கொட்டுகின் றனர். மணப்பறை என்பதற்கேற்பத் தாளம் வேறுபடுகிறது. புரோகிதர் மந்திரம் ஓதத் தாலி கட்டும் வைபவம் நடந்தேறு கிறது. தாலி கட்டுகையில் குலவையிடும் வழக்கமில்லை. பந்துக்களும் விருந்தினரும் அட்சதை தூவுகின்றனர்.

தாலி கட்டி முடிந்ததும் பெரியோர், வெள்ளை அரிசி யையும், பரியாரி (நாவிதர்) கொண்டு தந்த அருகம்புல்லையும் இருகை சேர எடுத்து மணமக்களின் தொடை, தோள், தலை ஆகிய பகுதிகளில் பிடித்து அவர்கள் மேல் அட்சதையாகத் தூவுகின்றனர்.

திருமணம் முடிந்தபின் ஓதியன் போத்தினை எடுத்து வந்து வீட்டில் நட்டு வைக்கின்றனர்.

ஆடிப்பெருக்கு எனப்படும் ஆடிமாதம் பதினெட்டாந் தேதியன்று தாலி பெருக்குதல் என்னுஞ் சடங்கு நடைபெறு கிறது. தாலியில் சரடும் மணிகளும் கோக்கப்படுகின்றன.

இப்போதெல்லாம் தாலி பெருக்குவதற்கு ஆடிப்பெருக்கு வரை காத்திருப்பதில்லையாம். மூன்று மாதத்திற்குள்- சிலர் ஆறு நாள்களிலேயே-இச்சடங்கினை நிறைவேற்றி விடுகிறார் களாம்.

### சில வழக்கங்கள்

மக்களின் பேச்சு வழக்குகளிலும் ஊருக்கென்று குறிப் பிட்டுச் சொல்லக் கூடிய அம்சம் ஏதுமில்லை. லகரத்தை ல-ள இரண்டுக்கும் இடைப்பட்ட ஒலியாக உச்சரிக்கின்றனர். சகரத்தைச் ஃ-என்றும் த்ஸ-என்றும் இடத்துக்குத் தகுந்த படி உச்சரிக்கின்றனர். இவையெல்லாம் இம்மாவட்டம் முழுவ தற்குமான இயல்புதான்.

விவரந் தெரிதல் என்று பிறபகுதிகளில் வழங்கும் வழக் கினை, விளைத் தெரிதல் என்ற வடிவில் பயன்படுத்துகின்றனர். “காளவாயில் பிறந்தால் கர்ணமுடிராசன்” என்ற ஒரு பழ

மொழி காதுக்கு எட்டியது. தகப்பன் செங்கற்சூளையில் வேலை பார்த்துக் கொண்டிருக்கையில் மகன் பிறந்ததால் அவனுக்குக் கர்ணமுடிராசன் என்று பெயர் வைத்திருக்கிறார்கள் பெற்றோர். இப்பழமொழி என்ன பொருளை உணர்த்துகிறதென்பது தெரியவில்லை.

தோட்டங்களுக்கு வேலி கட்டுகையில் குறுக்கே முள் வைத்துக் கட்டுவதை விரிச்சி கட்டுதல் என்கின்றனர். இரு கம்பங்களுக்கிடையே நான்கு விரிச்சி கட்டுவதே அதிகம். சிலர் தம் செல்வாக்கையும் அந்தஸ்தையும் காட்டுவதற்காக ஐந்து விரிச்சிவரை கட்டியிருக்கிறார்களாம்.[20]

### கோயிலும் மக்களும்

ஊர் மக்களுக்குக் கோயிலோடுள்ள தொடர்பு நூலுள் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. இங்குப் பொதுவாக ஓரிரண்டு செய்திகளைக் குறிப்பிடலாம். ஊரிலும் சுற்றுப் பகுதிகளிலும் மாணிக்கம் என்ற பெயர் அதிகமாகச் சூட்டப் படுகிறது. இது 'மழபாடியுள் மாணிக்க'த்தின் ஆதிக்கமாகும்.

பொங்கல் போன்ற திருநாள்களில் கோயிலில் பூசை முடிந்ததற் கடையாளமாக மணியோசை கேட்டபின்னர்தான் வீடுகளில் பூசையைத் தொடங்குகின்றனர் உள்ளூர் மக்கள்.

நந்திகேஸ்வரருடைய திருமணம் நடைபெற்ற தலமாதலால் கோயிலில் திருமணம் நடைபெறுவதும் வழக்கமாக இருந்து வருகிறது.

### கிராம தெய்வங்கள்

மலையாள (பதினெட்டாம்படி)க் கறுப்பு, மதுரை வீரன், சந்தி வீரப்பன், சங்கேந்தியான் முதலிய வீரத் தெய்வங்கள் வழிபடப்படுகின்றன. இவர்களுள் சந்திவீரப்பன் முச்சந்தியில் வீற்றிருப்பவராகவும், சங்கேந்தியான் தஞ்சை மாவட்டத்திலுள்ள சங்கேந்தி என்ற ஊரைச் சேர்ந்த, வழிபடு தன்மை பெற்றுவிட்ட வீரனாகவும் இருக்கவேண்டும். அடையாளத்துக்காகக் கல்நட்டு வைத்தும் இவர்களை வழிபடுவதுண்டு.

இந்தக்கல், ஒழுங்கான வடிவமற்ற சிறுகல்லாக-சுயம்புவாக!-இருக்கும். சில கிறிஸ்தவர்களுக்குக்கூட இத்தகைய கருப்ப சாமி என்ற தெய்வம் குல தெய்வமாக இருக்கிறது.21

"பதிவு"

ஒழுங்குபட்ட உருவ வழிபாடு நடைபெறும் பிடாரி கோயில் போன்றவற்றில், கோயிலுக்கு முன்னுல் பலி பீடத்தருகில் சிறு தெய்வங்களை உருவகித்துச் செங்கற்கள் நட்டுவைக்கின்றனர். இவற்றைப் "பதிவு" என்று குறிப்பிடும் வழக்கம் உள்ளது. "கல்நாட்டு" என்ற பொருளை இச்சொல் தருகிறதா அல்லது பரிவாரம் (பரிவார தேவதைகள்) என்ற சொல்லின் திரிபா என்பது தெரியவில்லை.

ஐயனர்

ஒரே தெய்வம் பல "உருவமும் நாமமும்" பெறுவதற்கு ஐயனரைச் சான்ருகச் சொல்லலாம். பதினெட்டாம்படிக் கறுப்பு என்று எளிய நிலையில் அழைக்கப்படும் இவர், இடைத்தர நாகரிக நிலையில் ஐயனர், மணிகட்டி ஐயனர் என்று பல வடிவங்களில் வணங்கப்படுகிருர். யோகபட்டந் தரித்த இயல்பான நிலையிலேயே ஐயனர் வழிபடப்படுகிருர்.

பிடாரி

அங்காளம்மன். செல்லியம்மன், மாரியம்மன் முதலிய பெண்தெய்வங்களும் வழிபடப்படுகின்றன. பாசமும் உடுக்கையுந் தாங்கிய நிலையில், தீப்போன்று விரிந்த சடையுடன் காணப்படும் மாரியம்மன், பிடாரி என்றும் அழைக்கப்படுகிருள். இப்பகுதியிலுள்ள மாரியம்மன் கோயில் பலவற்றில் நடு நாயகமாக மாரியம்மன் வீற்றிருக்க, இருபுறங்களிலும் சப்த மாதர்கள்-அனைவரின் அல்லது சிலரின்-உருவங்களும் இருக்கின்றன.

இவ்வூர் அங்காளம்மன் முசிறி அங்காளம்மனின் தங்கையென்றும் அவளுடன் கோபித்துக்கொண்டு இங்கு வந்து விட்டாள் என்றும் கதை வழங்குகிறது.

படையல் படைத்தல்

வறட்சிக் காலத்தில் எல்லாக் கிராமதெய்வங்களுக்கும் கொட்டடித்துச் சென்று படையல் படைப்பதுண்டு. இந் நேரங்களில் ஊர் மக்களனைவரும் இணைந்துசெயல்படுவர். ஒருமுறை இச்சுற்று வட்டாரத்திலுள்ள பல ஊர்களிலிருந்து மக்கள் கூடி மலையாளக் கறுப்புக்கு விழா எடுத்தனராம்.

பொய்நாடியம்மன்

ஊரின் மேற்கு எல்லையில் பள்ளிக்கெதிரில் வடதிசை நோக்கி இக்கோயில் உள்ளது. நத்தத்தேவதை (கிராமத்தின் தெய்வம்) என்றழைக்கப்படும் இந்தப் பிடாரி, கைக்கோளரின் குலதெய்வமாகும்.

மாகேஸ்வரியும் வாராகியும் இருபுறமும் சூழ நடுவில் வீற்றிருக்கும் மாரியம்மனைத்தான் பொய்காடியம்மன் என் கின்றனர்.

1962-க்கு முன், வருடந்தோறும் தைமாதம் அறுவடைக்கு முன் இவளுக்குத் திருவிழா நடைபெற்று வந்தது. மங்கலவாரத்தில் (செவ்வாய்க் கிழமை) காப்புக் கட்டுவதில் தொடங்கும் இத்திருவிழா பத்து நாள்கள் மண்டகப்படியுடன் சிறப்பாக நடைபெற்றதாம். பெண்ணாகடம் அருகிலுள்ள திட்டகுடியிலிருந்து பண்டாரம் ஒருவர் அருள் பெற்று ஓடி வருவாரென்றும் அதன் பின்தான் காப்புக் கட்டுவார்கள் என்றும் கூறப்படுகிறது. சிலம்பம், கரகம், உடலில் அலகிட்டு ஆடுதல் உண்டு. சாவான் கோயிலின் முன் உடலில் கீறி ரத்தம் எடுத்து சபதம் செய்வார்களாம், விரதம் நேர்ந்திருக்கும் சில கைக்கோளர்கள். திருவிழாவில் ஆடுவெட்டிப் படைப்பதும் உண்டு.

வைத்தியநாதசுவாமி கோயிலிலிருந்து, இத்திருவிழா நடைபெறுவதற்காக மானியம் கொடுத்திருக்கிறார்களாம். பொய்காடியம்மன் உற்சவவிக்ரகமும் அக்கோயிலில்தான் உள்ளது.

## சுயம்பிரகாசசுவாமிகள் மடம்

1877-ஆம் ஆண்டு, தை அஸ்தத்தில் சமாதியுற்ற சுயம் பிரகாச சுவாமிகளுக்கு ஒரு கோயிலும் அதனையொட்டி ஒரு மடமும் கட்டப்பட்டுள்ளன. வைத்தியநாதசுவாமி கோயிலுக்குப் பின்னால் இந்த மடம் உள்ளது.

சுயம்பிரகாச சுவாமிகளின் பிறப்பு முதலிய விவரங்கள் வெளிப்படவில்லை. இவருடைய வாழ்வில் சில அதிசயங்கள் நிகழ்ந்தனவாம். எப்போதும் சூரியனையே பார்த்திருக்கும் இவர் கொள்ளிட ஆற்றின் படுகையில் தவஞ்செய்து கொண்டிருந்தபோது ஆற்றில் வெள்ளம் வந்து நீர் சூழ்ந்தது. மக்கள் அஞ்சினர். ஆனால் வெள்ளம் இவரை ஒன்றும் செய்யவில்லை. இவரின் குரு, காதில் சங்கு ஊதி இவரை எழுப்பினாராம். இவருடைய தவத்தைச் சோதிக்க ஒருவன் ஒருமுறை இவருடைய காதில் திருகூசி கொண்டு திருக, இவர் 'இங்கித்தங்கேக' என்றோர் அடியெடுத்துப் பாடிவிட்டு அமைதியாக இருந்துவிட்டார். அவனுடைய வீடு தீப்பற்றி எரிந்துவிட்டது. வம்சமும் அழிந்துவிட்டது.

அண்மையில்கூட இங்குத் திருடவந்தவர்கள் பரிதாபமான முறையில் இறந்து விட்டார்களாம்.

இதற்கு முன்னிருந்த மடாதிபதி இராமசாமி சுவாமி என்பவர் தாம் ஊரில் உயர்நிலைப்பள்ளி கட்டுவதற்கு நிதியுதவி செய்திருக்கிறார். "சுயம்பிரகாசசுவாமி நிலையம்" என்று இப்பள்ளி பெயர் பெற்றுள்ளது.

ராமப்ரம்மம் என்ற சித்தர் ஒருவரின் சமாதியும் கோயிலின் பின்புறம் உள்ளதாம்.

## வாய்மொழிப் பாடல்கள்[22]

வாய்மொழிப் பாடல்களாகச் சில சிதறல் இலக்கியங்கள் உலவுகின்றன. சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் பள்ளி செல்லும் பிள்ளைகள் பாடிய ஓரிரு பாடல்கள் கிடைத்தன. இயற்றியவர் பெயர் தெரியாத நிலை யொன்றுதான், இவற்றை

வாய்மொழிப் பாடல்கள் வரிசையில் சேர்ப்பதற்குரிய தகுதியாக இருக்கிறதென்பது, பாடல்களைப் படிக்கும்போதே புலப்படும்.

காலமே எழுந்திருந்து கால்முகம் சுத்திபண்ணி
கோலமா நீறுகள் பூசி குழந்தைகள் பசிகளாற
பாலுடன் அன்னமுண்டு பட்சம் வைத்தும் அனுப்புமையா
உங்கள் திருவடிக்கு சரணமையா

என்பது, பள்ளி செல்லுமுன் (பெற்றோரிடம்?) பாடும்பாடல்.

சட்டங் கணக்கு தானெழுதி சரியா லக்கந் தொகைகூட்டி
இட்ட கணக்கும் வாசகமும் எல்லாஞ் சரியா ஒப்புவித்தோம்
வட்டமான சூரியனும் மதியந் தாண்டி மேற்காச்சு
திட்டம்வைத்து அனுப்புமையா திருவடிக்கனேக சரணந்
தானே

என்பது, வீடு செல்லுமுன் ஆசிரியரிடம் சொல்லிக் கொள்ளும் பாடல்.

அந்திக்குப் போறோம் நாங்கள் அகந்தனில் விளையாடாமல்
சிந்தையாய் விளக்கின் முன்னே சுவடியை அவுத்துப்பாத்து
வந்தது வராத தெல்லாம் வகையுடன் படித்துக் கட்டி
அந்தியில் அன்னமுண்டு அன்புடன் நித்திரை செய்து
தொண்டைமான் கோழிகூவ பள்ளிக்கூடம் வாரோம் சாமி

என்பது, இரவில் ஆசிரியரிடம் (ட்யூஷன் என்ற சிறப்பு வகுப்பாக இருக்கலாம்) விடைபெற்று வீடு செல்லும்போது பாடும் பாடல்.

### பொய்நாடியம்மன் விருத்தம்

கைக்கோளரின் குலதெய்வமான பொய்நாடியம்மன் பேரில் விருத்தம் ஒன்று வழங்குகின்றது. கும்பகோணத்தைச்

சேர்ந்த ஒருவர் இதனைப் பதிப்பித்திருக்கிறாராம். இவ்விருத் தத்தில் தொண்டை நாடு, திருவொற்றியூர் என்ற சொற்களும் அவை சார்ந்த நிகழ்ச்சிகளும் இடம்பெறுவது இதன் மூலத்தை ஐயுறச் செய்கிறது. உதாரணமாக,

"சந்திரன் இரவி வன்னி தருமமாய் நின்ற பன்னீர்
கந்தவேள் திருமால் போற்றும் கடவுளாய் நின்ற நாடு
சுந்தரர் தமிழுக்காகத் தூதுபோய் மீண்ட நாடு
செந்தமிழ் மணக்கும் நாடு திருமழுபாடி நாடு"

என்பது பொய்யாடியம்மன் திருவிழாவில் காப்பு கட்டுமுன் பாடப்படும் ஒரு பாடல். "பன்னீர்" என்பது சரியான வடிவ மாகத் தெரியவில்லை. ஒருவேளை "பொன்னி" என்று பாட பேதமாகக் கொண்டாலுங்கூட, இறைவன் "சுந்தரர் தமிழுக் காகத் தூதுபோய் மீண்ட நாடு" திருமழபாடியாக இருக்க முடியாது. (சுந்தரருடைய கனவில் தோன்றி, மழபாடி வருவ தற்கு நினைப்பூட்டிய நிகழ்ச்சியைத் தூது என்று குறிப்பிட முடியுமா?)

தவிர விராணத்தேரி, தரணிபுகழ் ஒற்றி (திருவொற்றி யூர்) முதலியன இப்பகுதியில் இல்லை. இச்சொற்கள் விருத் தத்தில் நிரம்ப இடம்பெற்றுள்ளன. எனவே இந்த விருத்தம், கைக்கோளரின் பூர்வதேசமாகக் கருதப்படும் தொண்டை மண்டலத்தில் தோன்றியிருக்க வேண்டும்,

"காளை வாகனம் மேலேறி கள்ளத் தெருவுக்குப் போகை
பொறுமை பொறுத்தவள் பொய்யாடியம்மனும் [யிலே
போற சிங்காரத்தைப் பாருங்கடி"
"மூஞ்சூறு வாகனம் மேலேறி முதலியார் தெருவுக்குப் போ
பொறுமை பொறுத்தவள் பொய்யாடியம்மனும் [கையிலே
போற சிங்காரத்தைப் பாருங்கடி"

முதலிய பாடல்கள், ஓசையுடன் பாடக் கேட்கும்போது இன்ப மளிக்கின்றன.

1 சாமந்தன் என்ற சொல், அண்டை நாட்டரசன் என்ற தன் சுய மான பொருளிலிருந்து விலகி, நிலமானிய-படைமானிய அமைப் புத் தலைவன் என்ற பொருளைக் கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதி யிலேயே பெற்று விட்டதைத் திரு. கோசம்பி சுட்டிக்காட்டு வார். (Myth and Reality. p. 40 f.n. 26.)

2 South Indian Polity-T.V. Mahalingam p. 268.

3 தலையாரி என்ற ஊர்க் காவலனைப் பற்றிய ஒரு செய்தி அறியத் தக்கது. தலையாரியை அங்கீகரிக்கப்பட்ட போலீஸ் படையில் ஒருவனாக ஆங்கிலேய அரசாங்கம் 1816-இல் ஏற்றுக்கொண்டது. இம்முறை பயனற்றதெனக் கண்டதால் 1860-இல் கைவிடப் பட்டது. (Castes and Tribes of South India-Thurston - Vol. VII p. 2.)

* நான்காவது நாட்டாண்மை திரு. அ. ராமலிங்கம் பிள்ளை தெரி வித்த செய்திகள் இவை.

4 1931-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கீட்டின்படி: ஜாதி ஹிந்துக்கள் 1431; தாழ்த்தப்பட்டோர் 459; பிராமணர் 172; கிறிஸ்தவர் 35; முஸ்லீம் 15. (Village Statistics-Trichy Dt. 1932.)

5 S. I. I. V 642

6 A. R. E. 44/1920 பார்த்துப் படித்தது.

7 S. I. I. V 660

8 ibid 664

9 கோயிலுக்குரிய திருவூடல் ஏட்டுச் சுவடி ஒன்று "திருமழபாடி அப்பர் அருள் நெறி மன்ற"த்தினரால் அண்மையில் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

10 பகவத்கீதை அத். 10 சுலோ. 25

11 Markandeya Purana - F. Eden Pargiter (BibliothecaIndica) p. 310. அடிக்குறிப்பும் பார்க்க.

12 வேறு சில இடங்களில் முத்துராஜா இனத்தவர் "அரசு" பதவி வகிக்கின்றனர். முத்தரையர் என்ற சொல் மூத்த அரையர் என்ற சொல்லின் திரிபாகச் சிலரால் கருதப்படுகிறது.

13 A. R. E. 34/1920

14 பொழில்நாடி என்பது பொய்நாடி என்று திரிந்திருக்கலாம். மகர யகர மயக்கம் தொண்டை நாட்டு வழக்கைக் காட்டுகிறது. இவ்வாறில்லாது பொய்கைநாடி என்பது சரியான வடிவமாக இருந்து, இந்நாட்டு மூலத்தையே காட்டுகிறதோ?

15 Markandeya Purana — F. Eden Pargiter Intro. p. 13.

16 தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள சன்பை என்ற ஊர்க் கோயிலில் நிர்த்தமண்டபம் கட்டுவதற்காக ஆட் கொண்டான் என்பவன் தலையரிந்து கொடுத்திருக்கிறான். (A. R. E. 119/1906) இதில் பைரவமதப் பாதிப்பு இருக்கிறதா என ஆராய வேண்டும்.

17 இச்செய்திகளை விசாரித்தறியும்போது உடனிருந்த முதியவர் திரு. அ. கந்தசாமி முதலியார், அப்போது, தாம் ஒரு நாளைக்குப் பதினாறு முழச் சேலை இரண்டு நெய்ததாகக் குறிப்பிட்டார்.

18 இக்கதையை வலியுறுத்த வேறொரு கதையும் கூறப்பட்டது. கும்பகோணத்துக்கருகிலுள்ள திருநாகேஸ்வரத்தில் கம்பங் கூத்தாடி ஒருவன் 64 அடிக்கம்பத்தில் ஏறிப்பாடிக் கொண்டிருக் கையில் பட்டு நூல்காரன் (சௌராஷ்ட்ரா இனத்தார்) ஒருவன் கம்பத்தின் கீழ் ஏவல் செய்து வைக்கக் கம்பம் பிளந்து விட்டதாம். ஆனாலும் கம்பங் கூத்தாடி குன்றிமணியைக் கீழிறக்கி (?)க் கம்பத்தை இணைத்து பாதுகாப்பாகக் கீழிறங்கி விட்டானாம். இறங்குமுன் "அழிநாடு" பாடியதால் தான் அங்கும் சௌராஷ்ட்ர இனம் சிதைந்து விட்டதாம்.

19 இந்நிலை இப்போது வெகுவாக மாறி விட்டது. இவர்களோடு பேசியதில், ஆண்கள், நடைமுறை வாழ்வைப் புரிந்து கொண்டு, உயரினத்தாரின் உயர்வை ஏற்றுக் கொண்டும், பிற தாழ்த்தப் பட்ட இனத்தாரிடம் பேதமற்ற மனநிலை காட்டியும் பேசினார்கள். பெண்கள் இன்னமும் பழைய மரபுகள், நம்பிக்கைகளின் காவலர் களாகவே காணப்படுகிறார்கள்.

20 இது போன்ற பல செய்திகள், நண்பர் பாளையப்பாடி அய்யாறப்பன் B.A., முதல் நாட்டாண்மை திரு அ. ராமலிங்கம் பிள்ளை ஆகியோர் சொல்லக் கேட்டவை.

21 கோக்குடியைச் சேர்ந்த திரு ஜான் இத்தகவலைத் தெரிவித்தார், அவர்கள் மனையில் கருப்பசாமி குடியிருப்பதாக நம்புகின்றனர். ஆண்டு தோறும் படையல் உண்டு. உருவம் எதுவும் அடையாளமாக வைக்கப்படவில்லை.

22 கண்டராதித்தத்திலுள்ள முதிய பெண்மணி ஒருவர் கூறக் கேட்டவை.

<>O<>

# ஒரு மீள்நோக்கு

கோயிலை ஒட்டியே தோன்றிப் புகழோங்க வளர்ந்து, இன்றும் வாழ்ந்து வரும் ஊர்கள் பல. கால சாபத்தால், சிதைந்துபோன கோயில்களை அனுதரவாகத் தவிக்கவிட்டு மறைந்துபோன ஊர்களும் பல. இத்தகைய ஊர்கள் பலவற்றைக் கண்டிருக்கும் தமிழக வரலாற்றுக்கு, சாம்ராஜ்யப் புகழெல்லாம் இறந்தகாலக் கனவாய் மெல்லப்போய்விட்ட நிலையிலும், கோயிலுள்ள ஊரிலேயே குடியிருக்க விழையும் மக்களின் மரபுணர்ச்சியால் கோயிலோடு ஒட்டி உறவு கொண்டாடி வரும் திருமழபாடி போன்ற ஊர்களும் புதியன அல்ல.

வளமையையும் வறட்சியையும் மாற்றி மாற்றிக் காட்டிச் செல்லும் கொள்ளிடத்தின் உயர்ந்து நிற்கும் அந்தக் கரைமேல் ஏறிநின்று, ஒரு வழிப்போக்கனின் பார்வையில்-ஊரையும் கோயிலையும் பார்க்கும்போது எத்தனையோ உண்மைகள் புரிகின்றன.

### மற்ற தலங்களிடை மழபாடி

வரலாற்று ரீதியிலும் புராண அடிப்படையிலும் சிவத்தலங்கள் சிலவற்றுடன் மழபாடியை ஒப்பிட்டும் உறவு ஏற்படுத்தியும் பார்க்கும் முயற்சிகள் பல முறை நடந்திருக்கின்றன. இவற்றில் திருவையாற்றை முதன்மையாகக் குறிப்பிட வேண்டும். நந்திகேஸ்வரரின் திருமணங்காரணமாக ஏற்பட்டுள்ள தொடர்பினைப்போலவே, விடங்கர் பூசை, உற்சவ விக்ரக சன்னிதி "சோமாஸ்கந்த மண்டபம்" என்று அழைக்கப்படும் வழக்கு, இவற்றில் காணப்படும் கருத்து ஒற்றுமையும் திருவையாற்றுக்கும் மழபாடிக்கும் இடையே நிலவிய பழைய உறவைக் காட்டுவதாகக் கொள்ளலாம். ஆயினும், திருவையாற்றின்பால் சோழ அரசி உலோகமாதேவியின் தனிப்பட்ட கவனம் சென்றதுபோலத் திருமழபாடியிடம், மழவரையர் மகளாகிய செம்பியன்மாதேவியின் நாட்டம் ஈர்க்கப்படவில்லை.

தில்லைக்கோயிலளவுக்கு மழபாடியும் விரிந்திருந்ததென் றும் ஊரில் கோயில்கள் நிறைந்து நின்றனவென்றும் சில கதைகள் மக்களிடை வழங்குகின்றன. இது உண்மையே என்பது கல்வெட்டுகளால் தெளிவாகிறது. சோமநாதீஸ்வர முடையார் கோயில், பொய்யாத் தமிழூர் விநாயகப்பிள்ளையார் கோயில் முதலியன சோழர் காலக் கல்வெட்டுகளில் குறிப் பிடப்படுகின்றன. சாக்தர்களின் வழிபாட்டுக்குரிய காமக் கோட்டமும் உள்ளூரில் இருந்திருக்கவேண்டும். அரச ஆதரவு ற்ற ஜினாலயம் ஒன்றும் இங்கு இருந்திருக்கிறது.

இவ்வாறு விரிந்து பரந்திருந்த ஒரு திருத்தலத்தைத் தனக்கு நிகர் தானேயாகி நிற்கும் தில்லையம்பதியுடன் ஒப்பிட் டுக்காண உள்ளூர் மக்கள் முயன்றிருப்பார்களானால் அதில் வியப்படைவதற்கொன்றுமில்லை.

தில்லையில் விக்கிரமசோழன் திருவீதி என்ற பெயரு டைய தெருவொன்று இருந்துள்ளது. அதேபோல் இங்கும், சோழர் காலத்தில், தெருவொன்றுக்கு விக்கிரமசோழன் திரு வீதி என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

தலபுராணம், பிரளய காலத்தில் இறைவன் தனது முத் தலைச் சூலத்தின் நுனியால் மூன்று தலங்களைக் காத்தான் என் றும் காசி, தில்லை, மழபாடி மூன்றுமே அத்தலங்கள் என்றும் பெருமிதங் கொள்கிறது. இறைவனின்-மழுவாடியின்-நடனம் நிகழ்ந்த இடம் என்பதாலோ அன்றிவேறெந்தக் காரணத் தாலோ மழபாடியைத் தில்லையுடன் இணைத்துப் பார்க்கும் முயற்சிகள் நடைபெற்றுள்ளன.

கோயில் தீர்த்தம் சிவகங்கை என்று அழைக்கப்பட்ட தும் சிதம்பரம் கோயிலினை முன்மாதிரியாகக் கொண்டதனால் ஆகலாம். அங்கும் சிவகங்கை என்றொரு தீர்த்தம் உள்ளது.

இருந்து மறைந்த கோயில்களின் எஞ்சல்களாக ஊரில் ஒன்றும் காணப்படவில்லை. சில செய்திகள் மட்டும் காதில் விழுகின்றன. கோயிலுக்கருகில் பாலம் கட்டுவதற்காக நிலத் தைத் தோண்டுகையில் மிகப்பெரிய லிங்கபீடம் ஒன்று

வெளிப்பட்டதாகவும், மிக அழகிய ஆறுமுகன் சிற்பமொன்று உடைந்துபோய்க் கோயிலருகில் நெடுநாள் கிடந்ததாகவும் . . . இப்படிச் சில செய்திகள்.

**வைத்தியநாத க்ஷேத்திரம்**

வைத்தீஸ்வரன் கோயில் என்ற பெயரில் பிரபலமாயிருக்கும் தலம் புள்ளிருக்கு வேளூர். அவ்வூர் இறைவர் மேற்கு நோக்கி எழுந்தருளியிருப்பதாலும் இவ்வூர் வைத்தியநாதர் கிழக்கு நோக்கியிருப்பதாலும் இருவரும் பந்து விளையாடுவதாக ஒரு கதை கூறப்படுகிறது. இது என்ன பொருள் குறிக்கிறதென்று தெரியவில்லை. 17 அல்லது 18-ஆம் நூற்றுண்டளவில் புள்ளிருக்கு வேளூர், வைத்தியநாத க்ஷேத்திரம் என்றழைக்கப்படும் புகழைப்பெற்றிருக்கிறது. அந்நிலையில் இதுபோன்ற கதை தோன்றியிருக்கலாம்.

சோழர் காலத்தில் புவனபதிநாச்சியார் என்ற பெயரில் எழுந்தருள்விக்கப்பட்ட தேவி, இப்போது பாலாம்பிகை என்றழைக்கப்படுகிறுள். இம்மரபு வைத்தியநாத க்ஷேத்திர மரபினைப் பின்பற்றியதாகலாம். அங்கும் தேவி, பாலாம்பிகை என்றே பெயர் பெற்றிருக்கிறுள்.

**மாவீரனின் அடிச்சுவட்டில்**

வரலாற்றில் அதிகமாகப் புரட்டப்படாத ஏடுகளுள் சத்ரபதி சிவாஜியின் தமிழக வருகை குறித்த பகுதியும் ஒன்று. மொகலாயர் ஆட்சிக்கெதிராகப் பரணி பாடிய அந்தச் சரித்திரநாயகனின் காலடித்தடங்கள் திருமழபாடியிலும் பட்டிருக்கின்றன என்பது பலரும் அறிந்திராத செய்தி.

செஞ்சியைக் கைப்பற்றி, வேலூரை முற்றுகையிட்டு, தஞ்சை மன்னன் சொக்கநாத நாயக்கனைச் சந்திப்பதற்காக வருகிறுர் சிவாஜி. தஞ்சைத் தரணிக்குக் கொள்ளிடத்தைக் கடந்து படகில் செல்லவேண்டிய நிலை. கொள்ளிடத்திலோ நுங்கும் நுரையும் பொங்கும் பெருவெள்ளம். அப்போது சிவாஜி திருமழபாடிக் கோயிலில் தங்கியிருக்கிறுர்; தங்கியிருந்து ஆலோசனைகள் நடத்தியிருக்கிறுர்.*

தமது சிங்கம் நிகர் நோக்கினுல் ஒரு சாம்ராஜ்யத்தையே சிருஷ்டித்த அந்த யுகபுருஷன், தம் மெய்க்காவலர் புடைசூழ இடையின்மேல் கையூன்றி, இந்தக் கொள்ளிடத்தை, இதோ இந்தக் கரைமேட்டில் நின்றுதானே பார்த்திருப்பார்; எந்த மாவிரனின் ஜனனம் இந்தியப் பண்பாட்டை, கலை மரபினை, சமய வழக்குகளை நசித்துப் போகாமல் காத்ததோ, அந்த மாவிரன், என்ன நினைவில், அல்லது நினைவு கடந்த நிலையில், நமது பொன்னூர்மேனியரைத் தொழுது நின்றிருப்பார்; இந்தக் கோனேரிராயன் திருமண்டபத்தில்தான் அவரது ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றிருக்குமோ? – இத்தகைய உணர்வுகள் நம் உள்ளத்தில் மோதுகின்றன. அறிவியலும் ஆராய்ச்சியும் கடந்த ஒரு நிலைக்கு நம் கற்பனைகள் விரிகின்றன.

உண்மையிலேயே ... இத்தகைய கற்பனைகள் தாமே கலைகளைப் படைத்தன; இத்தகைய நெகிழ்ச்சி தானே, சமர்ப்பண மனோபாவத்துடன் அந்தக்கலைகளை, அனைத்தும் கடந்த பரம் பொருளுக்கு அளிவித்து மகிழ்ந்தன; எல்லாவற்றுக்கும் மேலாக, கலைகள் மனித குலத்துக்கு உணர்த்தும் பேருண்மைகளை புரிந்து கொள்வதற்குத் தேவையான உணர்வு – ஐக்கியத்தை, இத்தகைய ரசனையுணர்வுகள் தாமே நம்மிடம் ஏற்படுத்துகின்றன! – இந்த உண்மைகளும், கலையாராய்ச்சியில் ஈடுபடும் ஒரு தொடக்க காலஆர்வலனுக்குப் புரியாமலிருக்கமுடியாது.

---

* 1677-ஆம் ஆண்டு ஜுலை மாதம் 12ஆம் தேதி முதல் 23ஆம் தேதி வரை சிவாஜி திருமழபாடிக் கோயிலில் தங்கியிருந்திருக்கிறார். (பார்க்க : மதுரை நாயக்கர் வரலாறு – அ. கி. பரந்தாமனர் பக். 300)



## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 3 | காளுட்டு முள்ளும் | காளுட்டு முள்ளூரும் |
| 88 | 22 | தொகுதி 13 | தொகுதி 19 |
| 99 | 19 | தமக்கையாகிய | மகளாகிய |
| 182 | 9 | ெற்ற | பெற்ற |

பக்கம் 101, அடிக்குறிப்பு 30-க்குரிய மேற்கோள், தெளிவானதல்ல (பார்க்க : Cholas — K. A. N. Sastry Vol. II part I p. 507).

திருமேனிகள் பற்றிய சரியான விவரங்கள் நிழற்படங்களுடன் குறிப்பிடப்பட்டுள்ளன. நிழற்படங்களுக்குரிய நெகடிவ் பிரதிகள் கோயிலின் நிர்வாக அலுவலரிடமிருந்து பெற்றுப்படி எடுக்கப்பட்டன.